# ஸ்ரீராமாபிஷேக மங்கள தீபிகை.



திருமழிசை, கோயில் கந்தாடை,

அப்பனய்யன் ராமானுஜாசாரியர்.

# ஸ்ரீ ராமாபிஷேக மங்கள தீபிகை

இது

ஸ்ரீராமாயண பட்டாபிஷேக ஸர்க்கத்தின் விசேஷார்த்தவிவரணம்

(மணிப்ரவாளம்)



திருமழிசை, கோயில் கந்தாடை,

அப்பனய்யன் ராமாநுஜாசாரியரால்

எழுதப்பட்டு

ஸ்வாமியின் அந்தேவாஸிகளால்

திருவல்லிக்கேணி ஹிந்தி ப்ரசார ப்ரஸ்ஸில்

அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

1936

இதன் விலை அணா 12,

# முகவுரை

ஸ்ரீய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸர்வேச்வரன், லோகஸம்ரக்ஷணார்த்தமாக தசரத சக்ரவர்த்தியினிடத்தில், ஸ்ரீராமலக்ஷ்மணபரதசத்ருக்னரூபேண வந்தவதரித்து, அநுஷ்டித்தருளிய ஸாமான்ய விசேஷதர்மங்களை, ஸ்ரீவால்மீகி பகவான், ஸ்ரீராமாயணத்தில் ப்ரதிபாதித்தருளினார்.

அந்த ஸ்ரீராமாயணத்திலே, 'ஸமுத்ரமிவ ரத்நாட்யம்' என்கிறபடியே, கடலிலே ரத்நங்கள் உள்ளே மறைந்து கிடக்குமாபோலே, மறைந்திருக்கின்ற விசேஷார்த்தங்களை, நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை போல்வார், திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களிலும், தனிச்லோகியிலும் அருளிச் செய்திருக்கும் ப்ரகாரங்களை, அந்தப் பூர்வாசார்யர்கள் வ்யாக்யானங்களாலும், தம்முடைய ஆசார்யர்களின் உபதேசங்களாலும், உள்ளத்திலே தரிப்பவராய்க் கொண்டு திருமழிசையில் எழுந்தருளி யிருக்கின்ற, ஸ்ரீ. உ. வே. கோயில்கந்தாடை வித்வான், அப்பனய்யன், ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, பல ஸமயங்களில் ஸ்ரீராமாயண பட்டாபிஷேகஸர்க்கத்தின் விசேஷார்த்தங்களை ப்ரதிபாதிப்பதுண்டு. இவற்றைக் கேட்டிருக்கிற அடியோங்களும் சில ஆஸ்திகர்களும் இவற்றைச் சேர்த்து ஒரு க்ரந்தமாகச் செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்ததின் பேரில், அதற்கு இணங்கி, அந்த ஸ்வாமி அந்த விசேஷார்த்தங்களையெல்லாம் சேர்த்து 'ராமாபிஷேக மங்கள தீபிகை' என்கிற மணிப்ரவாளமான இக்ரந்தத்தை எழுதியருளினார். இக்ரந்தம், சாலிவாஹன சகாப்தம் 1856 கலியுகாதி 5035, இங்கிலீஷ் 1934 ஆன பவ வருஷம் அவதரித்தது. ஆஸ்திகர்களின் ப்ரேரணையினால் அச்சிடப்பட்டது. இக்ரந்தத்தை ஸம்ப்ரதாயதத்வஸாரஜ்ஞராயுள்ள பெரிய வித்வான்கள் பார்த்து ஆமோதித்திருக்கின்றனர். வித்வான்களான வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யர், ஆ. மு. ஸ்ரீனிவாஸாசார்யர் இவ்விரண்டு ஸ்வாமிகளாலும் ஆதரத்துடன் இக்ரந்தம் பரிசோதிக்கப்பட்டது. ஸ்ரீராமபக்தர்களான அனைவரும் இக்ரந்தத்தைப் படித்துக் களிப்பார்களாக.

இங்ஙனம்,

அந்தேவாஸிகள்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீராமாயணத்தின் ஶரணாகதி ப்ரதிபாதநப்ரகாரம்.

ஸ்ரீராமாயணமானது, பாலகாண்டம் உபக்ரமம் தொடங்கி யுத்தகாண்டம் பரிஸமாப்தியளவும் ப்ரபத்தியிலேயே நோக்கமுடையது: எங்ஙனேயென்னில்- பாலகாண்டத்திலே தேவர்கள் ராவணவதார்த்தமாக எம்பெருமானைக்குறித்து 'ஸித்த கந்தர்வ யக்ஷாஶ்ச ததஸ்த்வாம் ஶரணம் கதா:' என்று ஶரணாகதி பண்ணி, அதற்கு அபேக்ஷிதமான ஆகிஞ்சந்யத்தை 'வதார்த்தம் வயமாயாதா:' என்கிறபடியே ராவணவதத்தைச் செய்விக்கத் தேவரீரிடம் வந்தோம் என்று ப்ரார்த்திக்கையாலே, தங்களிடம் ஸாமர்த்யமில்லாமையைக் காட்டித் தெரிவித்தார்களிறே. 'த்வம் கதி: பரமா தேவ' என்று சொல்லுகையாலே இங்கு அநந்யகதித்வமும் சொல்லப்பட்டது. மேலும், விஶ்வாமித்ரன் 'அந்ய மித்ரம் கரிஷ்யாமி' என்கிற ஶக்தி யோகத்தை யுடையவனாயிருக்கச் செய்தேயும், அதைக்கொண்டு யாகவிக்நகாரிகளான ராக்ஷஸர்களை நிரஸிக்கும்படி யிருக்க, அது செய்யாமல் சக்ரவர்த்தியைக் கிட்டி, இளையபெருமாளுடன் பெருமாளை யழைத்துக் கொண்டுபோய் அவர்களைக்கொண்டு ராக்ஷஸர்களை நிரஸித்தமையால், 'தபஸ் முதலான ஸாதநாந்தரங்களால் தன் கார்யத்தைச் செய்துகொள்ளுகை ஸ்வரூபவிருத்தம்; அவனைக் கொண்டே கார்யங்கொள்ளுகை, ஸ்வரூபாநுரூபம்' என்பது ஸூசிதமாயிற்று. அயோத்யாகாண்டத்தில் இளையபெருமாள் 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்கிறபடியே தான் எல்லா வடிமைத்தொழில்களையும் செய்வதைப் பெருமாள் அங்கீகரிப்பதற்காக 'ஸஹ்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:' என்று ப்ரபத்தி பண்ணினமையும் சொல்லப்பட்டது. இன்னும், இக்காண்டத்தில் காட்டிலுள்ளவர்களுக்குட்படப் பெருமாள் தன் திருமேனியைத் தர்ஶிப்பிக்கப் புறப்படுகையாலே ஸௌலப்யமும், நீசனான குஹனோடு புரையறத் தோழமை கொண்டமையால் ஸௌஶீல்யமும், போக்கற்றுச் செயல் மாண்டு வந்து விழுந்த காகாஸுரனை அவன் தோஷத்தை எண்ணாமல் ரக்ஷிக்கையாலே வாத்ஸல்யமும் சொல்லப்பட்டன. ஆக, ஆஶ்ரயண ஸௌகர்யாபாதககுணங்கள் சொல்லப்பட்டன. பின்னும், பரதாழ்வான் 'ஶிஷ்யே புரஸ்தாத் சாலாயாம் யாவந் மே ந ப்ரஸீததி' என்று ராமன் திருவயோத்யைக்கு எழுந்தருளி, அபிஷேகம் செய்து கொள்ளுவதற்காகப் பண்ணின ப்ரபத்தி கார்யகரமாகாமையாலே, ஶரண்யஹ்ருதயாநுஸாரியான

ஶரணாகதியே கார்யகரம் என்பது காட்டப்பட்டது. ஆரண்யகாண்டத்திலே தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகள், ராக்ஷஸர் தின்ற உடல்களைப் பெருமாளுக்குக் காட்டித் தங்கள் விரோதி நிரஸநார்த்தமாக ‘ அர்த்தித்வாத் நாத வக்ஷ்யாம: ’ என்று ஸ்வாமித்வத்தைச் சொல்லிக்கொண்டு ‘ தே வயம் ஹவதா ரக்ஷ்யா: ’ என்று ஶரணம்புகுகையாலே, அநந்யகதிகளான ரிஷிகளுடைய ஶரண்யவிஷய ஶரணாகதி சொல்லப்பட்டது. கிஷ்கிந்தாகாண்டத்தில், இளையபெருமாள் திருவடியைப் பார்த்து ‘ அஹம் சைவ ஹி ராமஶ்ச ஸுக்ரீவம் ஶரணம் கதௌ ’ என்று தாமும் பெருமாளும் ஸுக்ரீவனை ஶரணம் புகுந்ததாகப் பணிக்கத் திருவடியும், மஹாராஜரிடத்தில் இவர்களைக் கொண்டு போய் ‘ ராமஸ்த்வாம் ஶரணம்கத: ’ என்று அறிவிக்கப் பின்பு பெருமாளும் ஸுக்ரீவனும் தோழமை கொண்டார்கள். ஆகவே, ஸுக்ரீவன் திறத்தில் பெருமாள் செய்த ஶரணாகதியும், பிறகு ஸுக்ரீவனும் ‘ ஸக்யுர்ஹித்யம் ஸகா கதி: ’ ‘ ஹபார்த்தஸ்யாஹபம் குரு ’ என்று எனக்கு ஸகாவான தேவரீரே துக்க நிவ்ருத்திக்கு உபாயபூதர் என்றும் அபயப்ரதானம் செய்ய வேண்டுமென்றும் சொல்லுகையால், பெருமாள் திறத்தில் ஸுக்ரீவ ஶரணாகதியும் வெளியாயிற்று. ஸுந்தரகாண்டத்தில், பிராட்டி ராவணனைக் குறித்து “ பெருமாள் ஶரணாகதவத்ஸலர் கிடாய் ” என்றுபதேஶித்தும் ராவணன் சரணாகதிக்கு இசையான் என்று நினைத்து, ‘ தேந மைத்ரீ ஹவது தே ’ என்று அவரோடு தோழமை கொள்ளுகை உனக்கு யுக்தம் என்றுரைக்கையாலே, ஶரணாகதியைத் தோழமை ஶப்தத்தால் மறைத்து உபதேஶித்தாளிறே. யுத்த காண்டத்தில், விபீஷணன், ‘ராவணஸ்யானுஜோ ஹ்ராதா’ என்று ராவணன் ஸம்பந்தமாகிற ஸ்வ தோஷத்தைச் சொல்லி ‘ பரித்யக்தா மயா லங்கா ’ இத்யாதியால், தன்னுடைய ஸர்வஸங்கபரித்யாகத்தை விண்ணப்பித்துக் கொண்டு ‘ ராகவம் ஶரணம் கத: ’ என்று ஶரணம்புகுந்தானிறே; மேலும், விபீஷணன் தான் பெருமாளைக் குறித்துச் செய்த ஶரணாகதி பலிக்கையாலே, பெருமாளையும் அப்படியே ஸமுத்ரராஜனைச் சரணம்புகும்படி ‘ ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி ’ என்று ஶரணாகதியை விண்ணப்பஞ் செய்தான். பெருமாளும் அதை யங்கீகரித்து ‘ ப்ரதிஶிஶ்யே மஹோததே: ’ என்று கடற்கரையில் ஶரணம்புகுந்தாரிறே. முடிவில் பரதாழ்வான் ‘ ஶிரஸ்யஞ்ஜலிமாதாய ’ என்கிற ஶ்லோகத்தால் ஶரண்யஹ்ருதயானுஸாரியாய் வாசிகமான ஶரணாகதி பண்ணப் பெருமாளும் அதை ஸபலமாக்கினாரிறே. ஸமர்த்த காருணிகனான ராகவன் விஷயத்தில் பண்ணும் ஶரணாகதியன்றோ பலவ்யாப்தமாகக் கடவது! ஸாமர்த்யமானது, ஶிவதநுர்ப்பங்கம், பரஶுராம ஜெயம், வாலிவதம், ஸேதுபந்தநம், ராவணாதிவதம் இவற்றால் வெளி

யிடப் பட்டது ; காருணிகத்வம், ' க்ருபயா பர்யபாலயத் ' என்று காகாஸுரன் விஷயத்திலும் ' ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாத் ' என்று விஶ்லேஷத்தில் பிராட்டியிடத்திலும் உண்டாயிருந்தமையால் வ்யக்தமாயிற்று. இங்ஙனம் ஶரணாகதியிலே நோக்கான ஸ்ரீராமாயணத்தில் பெருமாளுக்கு அதிஶயகரமான பட்டாபிஷேக மங்கள மஹோத்ஸவத்தை உத்தேஶித்தே பண்ணுகிற பரதாழ்வானுடைய ப்ரார்த்தநாரூபமான ஶரணாகதியை பலவ்யாப்தமாக ப்ரதிபாதிக்கையாலே, இந்த ஸர்க்கத்தின் விஶேஷார்த்தங்களை அறியும்படி ' ராமாபிஷேக மங்களதீபிகை ' என்கிற இந்த க்ரந்தம் எழுதப்பட்டிருக்கிறது.

## விஶேஷார்த்த விமர்ஶம்

4வது பக்கம் ஶிரஸ்யஞ்ஜலிம் ஆதாய என்கிற ஶ்லோக விஶேஷார்த்தத்தில், " இதனால் காயிகப்ரபத்தி சொல்லப்பட்டது. ஆகிலும் இந்த ஶ்லோகத்தில் பஹுஶ: என்றிருப்பதனால் வாசிக ப்ரபத்தி தான் முக்யம்." என்றெழுதப்பட்டிருக்கிறது, இப்படி யெழுதியது, வாக்யத்தில் க்ரியார்த்தம் முக்யவிஶேஷ்யமாய் தோற்றக்கடவது என்கிற வையாகரணமதத்தை யனுஸரித்தே. இத்தால், மாநஸப்ரபத்தி ப்ராதாந்யத்திற்கு ஒரு விரோதமு மில்லை. அந்த அர்த்தப்ராதாந்யமிறே உள்ளது.

அந்த ஶ்லோகவிஶேஷார்த்தத்திலேயே, "இப்போது செய்யும் ப்ரபத்தி ஶரண்யனான பெருமாள் திருவுள்ளத்திற்குப் பொருந்தியதாகையாலே ஸக்ருத்வஹானியாகிற ப்ரபத்தி தோஷமில்லை " என்றெழுதப்பட்டிருக்கிறது. ராவணவதாநந்தரம் நந்திக்ராமத்தில் பரதாழ்வான் பெருமாளைக் குறித்து பட்டாபிஷேகம் பண்ணிக்கொள்வதற்காக ப்ரார்த்திக்க 'பாதஸ்ய வசஶ்ஶ்ருத்வா ராம: பரபுரஞ்ஜய: | ததேதி ப்ரதிஜக்ராஹ நிஷஸாதாஸநேஶுபே||" என்று பரதாழ்வானுடைய ப்ரார்த்தநா ரூபமான வார்த்தையைக் கேட்டுப் பெருமாள் அப்படியே யென்று அங்கீகரித்தார் என்று மஹரிஷி சொல்லியிருப்பதனால், அந்த ப்ரபத்தி பகவதபிமதை என்கை ஶப்தப்ரமாண ஸித்தம். இப்படியே, சித்ரகூடத்தில் முன் பரதன் பண்ணின ப்ரபத்தி 'கிம் மாம் பரத குர்வந்தம் தாத ப்ரத்யுபவேக்ஷ்யஸே ' ' கிமேதத்தாருணம் வ்ரதம், ' ' உத்திஷ்ட த்வம் மஹாபாஹோ மாஞ்ச ஸ்ப்ருஶ ததோதகம் ' என்கிறபடி தாருணவ்ரதம் என்று இத்தை அக்ருத்யகாரணமாக்கி, உத்திஷ்ட என்று இதை நிஷேதித்தபடியால், இந்த உபவேஶனமாகிற ப்ரபத்தி பகவதனபிமதை என்பது வசனஸித்தம். இப்படியன்றிக்கே, பலாபாவத்தாலே முதல் ப்ரபத்தியானது பகவதனபிமதை என்று அனுமானத்தால் சொன்னால் மற்ற அநேக ப்ரபத்தி ஸ்தலங்களிலும் பூர்வ ப்ரபத்திகளில் பலாபாவத்தாலே பகவதனபிமதத்வம் அனுமிதமாய் ஸக்

ருத்வஹானியாகிற தோஷமில்லாமை அவ்விடங்களிலும் ப்ரஸங்கிக்கும். இப்படி பரதாழ்வானுடைய பூர்வப்ரபத்தி பகவதனபிமதை என்கிறது வசனவித்தமாகையாலேயிறே, ஸ்ரீவசனபூஷணத்தில் 'பரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாய் விட்டது' என்று ஸ்ரீலோகாசார்யரும், அதன் வ்யாக்யானத்தில், 'ஶரண்யரான பெருமாள் திருவுள்ளத்துக்கு அநிஷ்டமாகையாலே தீமையாய்விட்டது' என்று மணவாளமாமுனிகளும், அதன் அரும்பதத்தில் 'ஆகையால், ஶரண்யஹ்ருதயாநுகுணேயல்லாத ப்ரபத்தி அநுபாயம்' என்று திருமழிசை அண்ணவப்பங்கார் ஸ்வாமியும் அருளிச்செய்தார்கள். ஆக, பகவதபிமதத்வ ததநபிமதத்வங்களாகிற விருத்த விஶேஷணங்களாலே, விலக்ஷணைகளான பரதப்ரபத்திகளில் ஸக்ருத்வஹானியாகிற தோஷம் இல்லையென்பது ஸுவ்யக்தம். அன்றிக்கே, கோவிந்தராஜர், 'பூர்வக்ருதப்ரபத்திஸ்மரணம்' என்று பரதாழ்வானுடைய த்விதீயப்ரபத்தியை வ்யாக்யானித்தருளியதாலும், ஸக்ருத்வஹானியாகிற தோஷமில்லாமை காட்டப்பட்டது. 'ஸக்ருதேவ ப்ரபந்நாய' என்கிற ஶ்லோகத்தில் ஸக்ருத்வத்தை ஆழ்வான், எம்பார், பட்டர் இவர்கள் ப்ரகாராந்தரமாக நிர்வஹித்திருப்பதைக் காணலாம்.

72வது பக்கத்தில் **ந பர்யதேவந் விதவா:** என்கிற ஶ்லோகத்தின் விஶேஷார்த்தத்தில், "யோகிகள் தங்கள் யோகமஹிமையாலேயே ஸர்வாநிஷ்டங்களையும் போக்கவல்லர்களன்றோ" என்றெழுதப்பட்டிருக்கிறது. இதன் கருத்து யோகிகள் மங்களாஶாஸனபரராகையாலே பெருமாள் திருவரசு புரியும்போது அமங்களங்களைப் போக்குகையும் மங்களங்களை உண்டாக்குகையும், அந்த யோகிகளுக்கு க்ருத்யமிறே. அந்த ஶ்லோகவிஶேஷார்த்தத்திலேயே, **விதவா: ந பர்யதேவந்** "'விஶேஷணாபாவாத் விஶிஷ்டாபாவ:' என்கிற நியாயத்தாலே விஶேஷணஹேதுஹர்த்ருநாஶம் இல்லாமையாலே விஶேஷ்யஹேதுப்ரலாபம் இல்லை யென்றதாயிற்று" என்று எழுதப்பட்டிருக்கிறது. இதன் கருத்து ப்ரலாபமில்லாமைக்கு வைதவ்யமில்லாமை காரணமேயொழிய ராஜநிர்ப்பந்தங்கள் காரணமல்ல வென்பதே.

**மேல் வரும் விஶேஷார்த்தங்கள் ஒரு அபியுக்தரின் நிர்வாஹங்கள் :**

ஶிரஸ்யஞ்ஜலிமாதாய : - அஞ்ஜலி :-அம் ஜலயதீதி-அஞ்ஜலி: - அகார வாச்யனை ஜலமாக ஆக்குவது என்று பொருள். சேதநன் ப்ராப்த விஷயத்தில் பண்ணும் அஞ்ஜலியினால் எம்பெருமான் உவந்த உள்ளத்தனாய் உருகாநிற்கும். அப்ராப்த விஷயத்தில் பண்ணும் அஞ்ஜலியினால் "அவஸாதாதிஶயத்தாலே உருகாநிற்கும் என்று தாத்பர்யம். **அம் ஜடயதீதி-அஞ்ஜலி:** சேதநன் பண்ணும் அஞ்ஜலியால் ஏற்பட்ட ப்ரீதிபாரவஶ்யத்தால் எம்பெருமான் ஸ்தப்தனாக

ஆகிறான் என்றும் தாத்பர்யம். இப்படிப்பட்ட அஞ்ஜலியைப் பராதாழ்வான் பெருமாள் திறத்தில் செய்யில், அருளா தொழிவரோ என்று கருத்து.

**நரா மோதகஹஸ்தாஞ்ச ராமஸ்ய புரதோ யயு:—மோதகஹஸ் தாஶ்ச**- ஸந்தோஷகரமான அஞ்ஜலியை உடையவர்களாய் பெருமாள் முன்னே சென்றார்கள் என்றபடி.

மூன்று ஶ்லோகங்களிலே, **ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி** என்று மஹ ரிஷி கூறியிருப்பதால் 'ஸத்யம் ஸத்யம் புனஸ்ஸத்யம்' 'ஶாந்திஶ் ஶாந்திஶ் ஶாந்தி:' என்கிற விடங்களில் விவக்ஷிதார்த்ததார்ட்யம் போலே பெருமாள் திருவரசு செய்யுமளவில் அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்திகளின் தார்ட்யம் சொல்லப்பட்டது.

**ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா:**—'யத்ராஷ் டாக்ஷர ஸம்ஸித்தோ மஹாமநா மஹீயதே, ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்பிக்ஷதஸ்கரா:' என்கிறபடி திருவஷ்டாக்ஷர அர்த்தத்தில் ஸித்தியுடைய ரான பெருமாள், **ராமோ ராமோ ராம இதி** தாரக போஷக போக்யராகக் கொண்டாடப்படுகையாலே அவரிருக்குமிடத்தில் அநிஷ்டநிவ்ருத்தி, இஷ்ட ப்ராப்திக்குச் சொல்லவேணுமோ என்று தாத்பர்யம்.

**தேஷாம் வாஸஸ் த்ரிவிஷ்டபே:**— ஸ்ரீராமாயணத்தை லேகநாதிகள் செய்யுமவர்களுக்கு இருப்பு பரமபதத்திலே என்றதால், அப்படிப்பட்டவர்கள் வஸிக்கும் ஊர் பரமபதம் என்றதாயிற்று. 'மதுரகவி சொன்ன சொல் நம்பு வார் பதி வைகுந்தம் காண்மினே' என்னுமாபோலே.



ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத ஶத்ருக்ந ஹநுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ ராமாபிஷேகமங்களதீபிகை.

## அவதாரிகை.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரன் ராவணனால் பீடிக்கப்பட்ட தேவர்களால் ராவணவதார்த்தமாக ப்ரார்த்திக்கப்பட்டவனாய் அங்கணெடுமதிள் புடைசூழயோத்தி யென்னும் அணிநகரத்திலே வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி, தாடகா தாடகேயர்களை நிரஸித்து, மந்திரங்கொள்மறை முனிவன் வேள்வி காத்து, சினவிடையோன் சிலையிறுத்து, கருநெடுங்கண் சீதையைத் தோள்புணர்ந்து, கைகேசி சொல்லால் தொன்னகரந் துறந்து, பத்தியுடைக் குஹன்கடத்த கங்கையைக் கடந்து வனம் போய்ப் புக்கு, சித்திரகூடத்திருந்து பரதனுக்குப் பாதுகையுமரசு மீந்து, வரைநெடுந்தோள் விராதனைக் கொன்று, வண்தமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கி, அரக்கியை மூக்கறுத்து, கரனோடுதூடணன்தனுயிரை வாங்கி, மானை மறியவெய்து வைதேகி பிரியலுற்று, சடாயுவை வைகுந்தத்தேற்றி, வரைநெடுந்தோள் கபந்தனைச்

செற்று, கவியரசன் தோழமை கொண்டு வாலியைக் கொன்று, மாருதியால் அரக்கர் சினமடங்க இலங்கையைச் சுடுவித்து, கடலை யடலம்பால் மறுகவெய்து, நளன்வைத்த ஸேதுவினால் மறுகரை யேறி, இலங்கைவேந்தனின்னுயிர்கொண்டு அவன் தம்பிக் கரசு மீந்து, நேரிழையாள் பிராட்டியொடும் இளங்கோவொடும் தோழர் களொடும் ஸ்ரீபுஷ்பகமேறி நந்திக்ராமமடைந்து, ஈறிலின்பத்திரு வெள்ளத்தில் மூழ்கின பரதாழ்வானை 'பரிஷஸ்வஜே' என்று தழுவி, அந்தப் பரதனுடை யனுமதியின்றி அயோத்தியிற் புகு வதும் அரசுபுரிவதும் செய்வதில்லை என்று ஸங்கல்பித்து நிற்க, அந்தப் பெருமாளின் திருவுள்ளமறிந்து, பரதாழ்வான் கையும் அஞ்சலியுமாய்ப் பெருமாளைக் குறித்து ந்யாயோக்திகளாலே ப்ரார்த்திக்கிறபடியையும், பெருமாள் அதற்கு இசைந்து திருவபி ஷேக மங்கள மஹோத்ஸவத்தைக் கொண்டருளின ப்ரகாரத்தையும், பெருமாள் ராஜ்யம் பண்ணும்போது உண்டான துர்ப்பிக்ஷாத்ய நிஷ்ட நிவ்ருத்தியையும், தீர்க்காயுஸ் ஸந்ததிவ்ருத்தி முதலான இஷ்டப்ராப்திகளையும், ஸ்ரீராமாயண ச்ரவண படநாதிகளின் பலங் களையும் சொல்லுகிறது பட்டாபிஷேக ஸர்க்கம்.

'ஶிரஸ்யஞ்ஜலிமாதாய' என்று தொடங்கி, 'தாவத் த்வமிஹ ஸர்வஸ்ய ஸ்வாமித்வ மநுவர்த்தய' என்னுமளவும் பரதாழ்வான் செய்கிற ப்ரார்த்தன ப்ரகாரங்களைச் சொல்லுகிறது. 'நபர்யதேவந் விதவா ந ச வ்யாலக்ருதம் பயம்' என்று தொடங்கி 'ஸர்வே தர்மபராயணா:' என்னுமளவும் பெருமாள் ராஜ்யபாலநம் பண்ணும் போது உண்டான அநிஷ்டநிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளையும், நிகமத்திலே 'தந்யம் யஶஸ்யமாயுஷ்யம்' என்று தொடங்கி 'தேஷாம் வாஸஸ் த்ரிவிஷ்டபே' என்னுமளவும் இப்பிரபந்தம் கற்றார்களுக்கு உண்டாகக்கடவ பலன்களையும் சொல்லித் தலைக்கட்டுகிறது.



# अथ पट्टाभिषेकसर्गः ।

**शिरस्यञ्जलिमाधाय कैकेय्यानन्दवर्धनः ।**
**बभाषे भरतो ज्येष्ठं रामं सत्यपराक्रमम् ॥ १ ॥**

ஶிரஸ்யஞ்சலிமாதாய கைகேய்யாநந்தவர்த்தநஃ ।
பபாஷே பரதோ ஜ்யேஷ்ட்டம் ராமம் ஸத்யபராக்ரமம் ॥1॥

[பதவுரை] **கைகேய்யாநந்தவர்த்தநஃ** - கைகேயியின் ஆநந்தத்துக்கு வர்த்தகராயுள்ள, பரத: - பரதாழ்வான், ஶிரஸி - தலையிலே, **அஞ்ஜலிம்** - அஞ்ஜலியை, **ஆதாய** - வஹித்துக்கொண்டு, **ஸத்ய பராக்ரமம்** - ஸத்யமான பராக்ரம குணத்தையுடைய, ஜ்யேஷ்ட்டம் - தமையனாரான, **ராமம்** - பெருமாளைக் குறித்து, **பபாஷே** - வ்யக்தமாக ஒரு வார்த்தை சொன்னார்.

[விசேஷார்த்தம்] ஶிரஸி இத்யாதி. **கைகேய்யாநந்தவர்த்தந:**—பரதாழ்வான் பண்ணுகிற ப்ரார்த்தனையைக் கண்டு கைகேயிக்கு ஆநந்தவ்ருத்தி. ஆனால், முன் திருவபிஷேகத்திற்கு விக்நத்தை விளைத்துப் பெருமாளைக் காட்டிற்குப் போகவிட்டபடி எங்ஙனே யென்னில்,—'ராமே வா பரதே வா஽ஹம் விஶேஷம் நோபலக்ஷயே' என்று இருக்கும் இவளை ராவணவதார்த்திகளான தேவதைகள் இவள் ஹ்ருதயப்ரவிஷ்டர்களாய்க் கலக்கினார்கள். அதனால், இவளுடைய ராமப்ரீதி பரிபூதமாய்க் கிடந்தது. இப்போது, ராவண வதம் நிறைவேறினபடியால் தேவதைகளால் உண்டான மனக்கலக்கமில்லை. ஆகவே, முன்னிருந்த ராமப்ரீதி ப்ரகாஶித்தது. அது, பரத ப்ரார்த்தனையாலே வ்ருத்தியாயிற்று. அன்றிக்கே, சிலர் கைகேயிக்குத்தான் சொன்னபடி பெருமாள் பதினான்கு வருஷங்கள் வநவாஸஞ்செய்ததைப்பற்றி ஹ்ருதயகாலுஷ்யம் நீங்கி ஆநந்தம் விளைந்தது என்றுஞ் சொல்லுவர்.

பரத:—பெருமாள் இல்லாதபோது ராஜ்ய பரணம் இவரதீநம் என்பதை நினைத்தே வஸிஷ்டபகவான் இப்படித் திருநாமம் சாத்தினார்: 'பரத இதி ராஜ்யஸ்ய பரணாத்'' என்னக் கடவதிறே. இதனால், ராஜ்ய பரணமே யொழிய, ராஜ்ய போக்த்ருத்வம் இல்லை யென்றபடி.

ஶிரஸ்யஞ்ஜலி மாதாய—இங்கே 'மத்தகத்திடைக்கைகளைக் கூப்பி' என்கிற ஸ்ரீஸூக்தி அநுஸந்திக்கக்கடவது. இதனால், காயிகப்ரபத்தி சொல்லப்பட்டது. ஆகிலும், இந்த ச்லோகத்தில் 'பபாஷே' என்று இருப்பதனால், வாசிகப்ரபத்திதான் முக்யம்.

ஸத்ய பராக்ரமம்—ஸத்யம் பராக்ரமம் முதலிய கல்யாண குணங்களையுடையவர் என்றும், அன்றிக்கே 'ஸத்யேந லோகாஞ் ஜயதி' என்கிறபடியே ஸத்யத்தாலே பரலோகங்களை ஆக்ரமிக்க வல்லவர் என்றும், இங்ஙனுமன்றிக்கே 'நாவிஜித்ய நிவர்த்ததே' என்கிறபடியே ஸத்யமாக சத்ருக்களை ஆக்ரமிப்பவரென்றும், அதவா ஸத்யபரரான பரதாதிகளைக் குணங்களாலே ஈடுபடுத்தித் தம் வசமாக்கிக் கொள்ளுமவர் என்றும் இப்படி அனேக அர்த்தங்கள் உண்டு.

ஜ்யேஷ்டம்—இதனால், ராஜ்யார்ஹதை சொல்லிற்றாய்த்து. ஜ்யேஷ்டபதம் 'ப்ரஹ்மஜ்யேஷ்ட முபாஸதே' என்கிறபடியே ப்ரம்மவாசியாகையாலே, ப்ராப்தஶேஷிவிஷயத்தில் இப்ப்ரார்த்தனை என்னுமிடம் காட்டப்பட்டது. ராமம்—'ரமயதீதி ராமः' என்கிற வ்யுத்பத்தியின்படி நாட்டையடையத் தம் திருமேனியின் ஸௌந்தர்யத்தினால் ரமிப்பிக்குமவர். இந்த ஸௌந்தர்யம் ராஜ்யபாலந ஸாமர்த்யமாகிற மஹிமையைக் காட்டுகிறது. ஸௌந்தர்யம் பாலந ஸாமர்த்யமஹிமையைக் காட்டுமோ வென்னில்,—'ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே' என்னக்கடவதிறே. பபாஷே-'பாஷ வ்யக்தாயாம் வாசி' என்கிறபடியே உள்ளிருக்கும் ஆற்றாமை பேச்சில்தானே காணலாம்படி வ்யக்தமாகச் சொன்னார். இது, வாசிகப்ரபத்தி. பூர்வம் சித்திரகூடத்திலே ப்ரபத்திபண்ணின பரதாழ்வான் அந்த நிமித்தமாகவே மீளவும் இப்போது ப்ரபத்தி பண்ணினால், 'ஸக்ருதேவ ப்ரபந்நாய' என்கிற ப்ரமாணத்தோடு விருத்தமாகாதோவெனில்,—இப்போது செய்யும் ப்ரபத்தி ஶரண்யனை பெருமாளுடைய திருவுள்ளத்திற்குப் பொருந்தியதாகையால், ஸக்ருத்த்வஹாநியாகிற ப்ரபத்திதோஷமில்லை. பரதாழ்வானுடைய முதல் ப்ரபத்தி பெருமாளுடைய திருவுள்ளத்துக்குப் பொருந்தாமைக்கு ஹேது என்னவெனில்,—இதற்கு முன்பே தேவதைகள் ராவணவதார்த்தமாகப் பண்ணின ப்ரபத்தி ஸபலமாக வேண்டுகையே ‖ 1 ‖

पूजिता मामिका माता दत्तं राज्यमिदं मम ।
तद्ददामि पुनस्तुभ्यं यथा त्वमददा मम ॥ २ ॥

பூஜிதா மாமிகா மாதா தத்தம் ராஜ்யமிதம் மம ।
தத் ததாமி புநஸ்துப்யம் யதா த்வமததா மம ॥ 2 ॥

[ப-ரை] மாமிகா - என்ஸம்பந்தமுடைய, மாதா - தாயாரான கைகேயி, பூஜிதா - ஸந்துஷ்டையானாள். இதம் - இந்த, ராஜ்யம் - ராஜ்யமானது, மம - எனக்கு, தத்தம் - கொடுக்கப்பட்டது. தத் - அந்த ராஜ்யத்தை, யதா - எந்தப்ரகாரமாக, மம - எனக்கு, அததா:-தந்தருளினீரோ,* (ததா - அந்த ப்ரகாரமாகவே), துப்யம் - தேவரீர்பொருட்டு, ததாமி - கொடுக்கின்றேன்.

[வி-ம்] இந்த ச்லோகம் தொடங்கி 'யாவதாவர்த்ததே' என்னுமளவும் பரதாழ்வான் பெருமாளைக் குறித்து ராஜ்யத்தைப் பரிக்ரஹிக்கிற விஷயத்திலே அவர் மறுக்காமைக்காக த்ருடமான ஹேதுக்களைச் சொல்லுகிறார். மாமிகா—இத்தால், கைகேயியினிடத்தில் என் ஸம்பந்தமே தேவரீர் வநவாஸம்பண்ணுகைக்குஹேது வாயிற்று என்ற பரதாழ்வான் எண்ணம் ஸூசிதம். 'மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத் வநப்ரவேசே ரகுநந்தநஸ்ய' என்றாரிறே இவர்தாம். பூஜிதா - தேவரீர் ராஜ்யத்யாகபூர்வகமாகக் காட்டுக்கு எழுந்தருளினதாலேயே ஸந்துஷ்டையானாள் என்கை. ராஜ்யம் - 'ராஜ்ஞ: கர்ம, பாவோ வா, ராஜ்யம்' ஆகையாலே, ராஜா இல்லாத போது இதற்கு ஸ்திதியில்லாமை காட்டப்பட்டது. மம - 'மஹ்யம்' என்று ஸம்ப்ரதாந சதுர்த்தி யன்றிக்கே ஸம்பந்த ஸாமாந்ய ஷஷ்ட்டி யிருப்பதினாலே, 'தனக்கு ஸ்வத்வம் இல்லை, சரணஸம்பந்தமே உள்ளது' என்கையைத் தெரிவித்தபடி. யதா த்வம் அததா மம-தேவரீர் ந்யாஸரூபமாக என்னிடத்தில் இதைத் தந்தருளினமையால், அப்படியே ந்யாஸரூபத்வம் விடாமல் கொடுக்கிறேன் என்றபடி. ந்யாஸரூபமாய்க் கொடுத்ததை மீளவும் வாங்கிக்கொள்ளுகை அவச்யமிறே. ஆக, தேவரீர் வநத்திற்கு எழுந்தருளினமையாலேயே என் தாயார் ஸந்துஷ்டையாய்விட்டாள். தேவரீர் ந்யாஸரூபமாய்க் கொடுத்த இந்த ராஜ்யத்தைத் தேவரீரே திருவுள்ளம் பற்றவேணும் என்றபடி ॥ 2 ॥

---

* சேர்த்துக் கொள்ளவேண்டிய பதங்கள் ப்ராகெட்டுக்குள் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆங்காங்கு அப்படியே கண்டு கொள்வது.

धुरमेकाकिना न्यस्तामृषभेण बलीयसा ।
किशोरीव गुरुं भारं न वोढुमहमुत्सहे ॥ ३ ॥

துரமேகாகிநா ந்யஸ்தாம் ருஷபேண பலீயஸா ।
கிஶோரீவ குரும் பாரம் ந வோடுமேஹமுத்ஸஹே ॥ 3 ॥

[ப - ரை] ஏகாகிநா - தனியாயிருப்பதாயும், பலீயஸா - அதிக பலத்தையுடையதுமான, ருஷபேண - எருதினுல், ந்யஸ்தாம் - வைக்கப்பட்டிருக்கிற, துரம் - பாரத்தை, கிஶோரீவ - குட்டியானது போல, குரும் - பெரியதான, பாரம் - ராஜ்யபாரத்தை, அஹம் - நான், வோடும் - சுமப்பதற்கு, நோத்ஸஹே - ஶக்தனல்லேன்.

[வி - ம்] நான் வாங்கிக்கொள்ளுமளவும் ந்யாஸ ரூபமாய்க் கொடுத்த வஸ்துவை நீ வஹித்துக்கொண்டுதான் இருக்கவேணுமென்று பெருமாளுக்குத் திருவுள்ளமானதாகக்கொண்டு பரதாழ்வான் பேசுகிறுன். ஏகாகிநா - பாரவஹநத்திலே ஸஹாயாந்தர நிரபேக்ஷதையைக் காட்டுகிறது; இத்தால், 'நஹி பாலநஸாமர்த்த்யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்' என்கிறபடியே எம்பெருமானுக்கே நிரபேக்ஷரக்ஷகத்வம் என்கை ஸூசிதமாயிற்று. பலீயஸா - கீழ்ச் சொல்லியபடி ரக்ஷணத்தில் நிரபேக்ஷதைக்கு ஹேது தூர்வஹந ஸாமர்த்த்ய விஶேஷம் என்கை வ்யஞ்ஜிதம். கிஶோரீவ—இது அஸாமர்த்த்ய ஸூசகமான த்ருஷ்டாந்தம். குரும் பாரம்—இங்கு, பாரத்துக்குப் பெருமையாவது தன்னால் தாங்கமுடியாமை. அஹம்—அஸ்மச்சப்தம் புத்திஸ்த்தவாசகமாகையால், அஶக்தனைப் பரதந்த்ரனை நான் என்றபடி. கரசரணாதி விக்ஷேபங்களும் பகவததீநமன்றே. 'தேந விநா த்ருணாக்ரமபி ந சலதி'. இந்த ச்லோகத்தினுல், பரதாழ்வான் தன்னுடைய அஶக்தியையும் பெருமாளுடைய சக்தியையும் வெளியிட்டபடியால், ந்யாஸ ரூபமான வஸ்துவானாலும் கடுகத் தேவரீர் வாங்கிக்கொள்ளவேண்டும் என்கிற அர்த்தம் காட்டப்பட்டது. ॥ 3 ॥

वारिवेगेन महता भिन्नः सेतुरिव क्षरन् ।
दुर्बन्धनमिदं मन्ये राज्यच्छिद्रमसंवृतम् ॥ ४ ॥

வாரிவேகேந மஹதா பிந்நஸ் ஸேதுரிவ க்ஷரந் ।
துர்பந்தநமிதம் மந்யே ராஜ்யச்சித்ரமஸம்வ்ருதம் ॥ 4 ॥

[ப - ரை] மஹதா - பெரியதான, வாரிவேகேந - ஜலத்தின் வேகத்தாலே, பிந்ந: - உடைக்கப்பட்டதாய், க்ஷரந் - (உடைபட்ட விடத்திலே) ஜலத்தைப் பெருக்குகிற, ஸேதுரிவ - அணைபோல, இதம் - இந்த, அஸம்வ்ருதம் - மறைக்கப்படாமலிருக்கிற, ராஜ்யச் சித்ரம் - ராஜ்யத்திலுண்டான கலகமாகிற ரந்த்ரத்தை, துர்பந்தநம் - கட்டுவதற்கு அரிதாக, மந்யே - எண்ணுகின்றேன்.

[வி - ம்] கீழ் ச்லோகத்தில் நோத்ஸஹே என்று பரதாழ்வான் தன் அசக்தியைச் சொன்னதற்கு ஹேதுவைக் காட்டுகிறார் இதில். வாரிவேகேந என்று துடங்கி க்ஷரந் என்னு மளவும் த்ருஷ்டாந்தத்தைச் சொன்னபடி. இங்கு வேகத்தின் மஹத்வ மாவது, கட்டுவதற்கு அரிதாயிருக்கை. இதம் ராஜ்யச்சித்ரம் என்று ப்ரத்யக்ஷமாகச் சொன்னபடியால், இந்த ராஜ்யத்தின் ஸ்வபாவத்தை அடியேன் தேவரீருக்குச் சொல்லவேணுமோ? முன்பு கூனியா லேற்பட்ட ராஜ்ய கலகத்திற்குத் தேவரீரே அநுபோக்தாவன்றோ என்கை ஸூசிப்பிக்கப்பட்டது. அஸம்வ்ருதம் என்பதால் ராஜ் யாநுகூலமான ஆலோசனையாகிற மறைவில்லாமை சொல்லப்பட் டது. துர்பந்தநம் என்பது, ராஜ்யபரிபாலநாசக்யதையைக் காட்டு கிறது. மந்யே என்பது, த்ருவார்த்தகமாய்க்கொண்டு நிச்சயமாய் எண்ணுகிறேன் என்றபடி. 'ராஜ்ஞ: கர்ம பாவோவா' என்கிறபடி ராஜாவின் ஊாவமும் கார்யமும் ஸம்வ்ருதமாயில்லாதபோது ராஜ்ய பாலநம் அஸக்யமன்றோ? ஆனால், பெருமாளில்லாதபோது இவர் ராஜ்யத்தைப் பரிபாலித்தபடி எங்ஙனே யென்னில்,—மீளவும் பெரு மாள் எழுந்தருளி ராஜ்யத்தைக் கைக்கொண்டு ரக்ஷிப்பர் என்னும் நசையாலே. 'நந்திக்ராமேऽகரோத்ராஜ்யம் ராமாகமநகாங்க்ஷயா' என்னக்கடவதிறே ‖ 4 ‖

**गतिं खर इवाश्वस्य हंसस्येव च वायसः ।**
**नान्वेतुमुत्सहे राम तव मार्गमरिन्दम ॥ ५ ॥**

கதிம் கர இவாஸ்வஸ்ய ஹம்ஸஸ்யேவ ச வாயஸ: |
நாந்வேதுமுத்ஸஹே ராம தவ மார்க்கமரிந்தம ‖ 5 ‖

[ப - ரை] அஸ்வஸ்ய - குதிரையினுடைய், கதிம் - கமநத்தை, கரஇவ - கழுதை போலவும், ஹம்ஸஸ்ய - ஹம்ஸத்தினுடைய, கதிம் - கமநத்தை, வாயஸ இவ - காக்கை போலவும், அரிந்தம

ஶத்ருக்களை நிரஸிக்கவல்ல, ராம - ராமனே! தவ - உம்முடைய, மார்க்கம் - பரிபாலநமார்க்கத்தை, அந்வேதும் - அநுஸரிப்பதற்கு, நோத்ஸஹே - சக்தியுடையேனல்லேன்.

[வி - ம்] எனக்கும் ஔதார்யாதி குணங்களாலேயன்றோ ராஜ்யபாலநஶக்தியுள்ளது. என்னைப்போலவே, நீயும் ஔதார்யாதி குணங்களாலே உலகத்தை வஶீகரித்தால் ராஜ்ய பரிபாலநம் ஶக்யமிறே என்று பெருமாளுக்குத் திருவுள்ளமானதாகக்கொண்டு, பரதாழ்வான், தனக்குக் குணமில்லாமையால் பாலநஶக்தியில்லை யென்பதைத் திருஷ்டாந்தத்தாலே உபபாதிக்கிறார் இதில். இங்கு கதிம் கர இவ அஶ்வஸ்ய என்கிற த்ருஷ்டாந்தபாவத்தில் குதிரையைச் சொன்னபடியால் குதிரைக்கு வேகாதிஶயம் ஸ்வபாவமாகுமாபோலே தேவரீருக்குப் பாலநஸாமர்த்யம் ஸ்வபாவம் என்கை ஸூசிதம். கழுதையைச் சொன்னதால், தோஷ ஸம்பந்தமும் வேகமாந்த்யமும் தெரிவிக்கப்பட்டன. இதனால் லபித்தது, தமக்கு அஶக்தியும் தோஷவத்த்வமும். கைகேயியின் குடல் துடக்கை தோஷமாகவிறே இவர் எண்ணியிருப்பது. ஹம்ஸஸ்யேவ ச வாயஸ: என்கிற த்ருஷ்டாந்தபாவத்தில் ஹம்ஸத்தை எடுத்ததனால் பெருமாளுக்கு ஶுத்த ஸ்வபாவத்வம் சொல்லிற்று. காக்கையை எடுத்ததனால், நைல்ய ஸ்வபாவத்தைக் காட்டித் தம்முடைய ஹேயகுண ஸம்பந்தம் வெளியிடப்பட்டது. ஆக, பெருமாளுக்கு ஔதார்யாதி ஸகல குணயோகத்தால் பாலநஸாமர்த்யமும், தனக்கு ஹேயகுண ஸம்பந்தத்தால் பாலநாஸாமர்த்யமும் காட்டப்பட்டன. அரிந்தம - இதுவும் பரிபாலநஸாமர்த்ய த்யோதகம்; அன்றிக்கே, ராவண வதம் முடிந்ததாகையால், இனி பரிபாலநத்திற்கு யாதொரு ப்ரதிபந்தகமும் இல்லையே என்கிற கருத்தும் இதில் உண்டு. ராம—வடிவழகாலும் லோகத்தை வஶீகரிக்கை அத்தலைக்கே உள்ளதிறே. இத்தால், பரிபாலநஶக்தரான தேவரீருடைய பாலநமார்க்கத்தை அநுஸரிப்பதற்கு நான் அஶக்தனாகையால் தேவரீரே பரிபாலிக்கவேண்டும் என்றபடி ‖ 5 ‖

**यथा चारोपितो वृक्षो जातश्चान्तर्निवेशने ।**
**महांश्च सुदुरारोहो महास्कन्धः प्रशाखवान् ॥ ६ ॥**

शीर्येत पुष्पितो भूत्वा न फलानि प्रदर्शयन् ।
तस्य नानुभवेदर्थं यस्य हेतोः स रोप्यते ॥ ७ ॥
एषोपमा महाबाहो त्वमर्थं वेत्तुमर्हसि ।
यद्यस्मान्मनुजेन्द्र त्वं भक्तान् भृत्यान्न शाधि हि ॥ ८ ॥

யதா சாரோபிதோ வ்ருக்ஷோ ஜாதஶ்சாந்தர்நிவேஶநே ।
மஹாம்ஶ்ச ஸுதுராரோஹோ மஹாஸ்கந்த: ப்ரஶாகவாந் ॥ 6 ॥
ஶீர்யேத புஷ்பிதோ பூத்வா ந பலாநி ப்ரதர்ஶயந் ।
தஸ்ய நாநுபவேதர்த்தம் யஸ்ய ஹேதோஸ் ஸ ரோப்யதே ॥ 7 ॥
ஏஷோபமா மஹாபாஹோ த்வமர்த்தம் வேத்துமர்ஹஸி ।
யத்த்யஸ்மாந் மநுஜேந்த்ர த்வம் பக்தாந்ப்ருத்யாந் ந **ஶாதி ஹி** ॥ 8 ॥

[ப - ரை.] அந்தர்நிவேஶநே - *கிருஹத்துக்குள்ளே,* ஆரோபிதஃ - *விதைக்கப்பட்டதாய்,* ஜாதஶ்ச - *முளைத்ததாயுமுள்ள,* வ்ருக்ஷஃ - *மரம்,* மஹாந் - *பெரியதாய்,* ப்ரஶாகவாந் - *பிரிவுக்கிளைகளை யுடையதாயும்,* மஹாஸ்கந்தஃ - *பெருங்கிளைகளை யடையதாயும்,* ஸுதுராரோஹஃ - *(ஒருவராலும்) ஏறுவதற்கு அஶக்யமாய்க் கொண்டு,* புஷ்பிதோ பூத்வா - *பரப்புமாறப் பூத்த பிறகு,* பலாநி - *பழங்களை,* ந ப்ரதர்ஶயந் - *காட்டாமல்,* யதா - *எப்படி,* ஶீர்யேத - *சிதறிப்போமோ,* (யேந) யஸ்ய ஹேதோஃ - *(எவனால்) எந்த காரணத்துக்காக,* ரோப்யதே - *உண்டாக்கப்படுகின்றதோ,* ஸஃ - *அந்தப் புருஷன்,* தஸ்ய - *அந்த மரத்தினுடைய,* அர்த்தம் - *ப்ரயோஜநத்தை,* (யதா) நாநுபவேத் - *(எப்படி) அநுபவிக்க மாட்டானோ,* மஹாபாஹோ - *நீண்டதடக்கைகளை யுடையவனே!* த்வம் - *தேவரீர்,* பக்தாந் - *குணாநுபவ நிஷ்டராயும்,* ப்ருத்யாந் - *கைங்கர்ய நிஷ்டராயுமுள்ள,* அஸ்மாந் - *எங்களை,* ந ஶாதி யதி - *பாலநஞ் செய்யா விஷயத்தில்,* ஏஷாஉபமா (஭வதி) - *இந்த உபமாநம் (ஆகின்றது).* மநுஜேந்த்ர - *மநுஷ்யஶ்ரேஷ்டரே!* த்வம் - *தேவரீர்,* அர்த்தம் - *இந்த அர்த்தத்தை,* வேத்தும் அர்ஹஸி - *அறிவதற்கு உரியவர்.* ஹி - *இது ப்ரஸித்த மன்றோ.*

[வி - ம்] :—*இதில், 'ராஜ்ய பரிபாலநத்தில் நான் உனக்கு ஸஹகாரியாகிறேன். நீயே ராஜ்யந்தன்னை ஆளக்கடவை'* என்று *பெருமாளுடைய திருவுள்ளமாகக்கொண்டு, பரதாழ்வான் அப்படி*

யாகிறபோது தேவரீரைப் புத்ரனாகப் பெறுகைக்குப் பண்ணின சக்ரவர்த்தியினுடைய பரிஶ்ரமமெல்லாம் வ்யர்த்தமாகுமே என்கிறார். 'ராஜ்ய பரிபாலநத்துக்காகப் பிள்ளை வேண்டும்' என்றன்றோ சக்ரவர்த்தி 'மஹதா தபஸா ராம' என்கிறபடியே பரிஶ்ரமப்பட்டது. இந்த ஶ்லோகங்களில் வ்ருக்ஷத்திற்கும் பெருமாளுக்கும், வ்ருக்ஷாதபாதகனுக்கும் சக்ரவர்த்திக்கும், விதை விதைத்தலுக்கும் புத்ரகாமேஷ்டிக்கும், பெரியகிளைகளுக்கும் ப்ராதாக்களுக்கும், பிரிவுக்கிளைகளுக்கும் ஸுக்ரீவாதிகளுக்கும், புஷ்பங்களுக்கும் கல்யாணகுணங்கள் யௌவநாதிகள் இவற்றிற்கும் திருஷ்டாந்த தார்ஷ்டாந்திகபாவம். இங்கு த்வம் அர்த்தம் வேத்தும் அர்ஹஸி என்று பெருமாளைக்குறித்து தேவரீரே இவ்வர்த்தம் அறிவீர் என்றதனால், ஸித்தித்த ஓர் அர்த்தவிஶேஷமுண்டு: அதாவது "காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி" என்கிறபடியே திருமேனியின் ஸௌந்தர்யத்தாலே தேவரீர் சேதநருக்குப் பக்தியை விளைவித்துப் பக்தியின் பலமான கைங்கர்யத்தை ஆஶ்ரிதர்களிடமிருந்து கொள்ளாவிடில் தேவரீருக்கு உண்டாகும் மநோவ்யதை தேவரீருக்கே தெரியுமே என்றபடி. இது ஒரு அபியுக்தர் நிர்வாஹம். ஆக, ஒரு வ்ருக்ஷம் ஒருவரால் பலத்தை உத்தேஶித்து உண்டாக்கப்பட்டதாய் விருத்தியடைந்து புஷ்பிதமாய்ப் பலகாலத்தில் விஶீர்ணமானால் எப்படியோ, அப்படியே சக்ரவர்த்தியினால் ராஜ்யபாலநார்த்தமாக வ்ரதோபவாஸாதிகளாலே வருந்தி திருவவதரிக்கும்படி செய்யப்பட்டவரான தேவரீர் யௌவநத்தையும் அடைந்து அந்த ராஜ்யத்தைப் பரிபாலிக்காத விஷயத்தில் ஐயர் மநோரதம் விபலமாமே என்று கருத்து ॥ 6—8 ॥

जगदद्याभिषिक्तं त्वामनुपश्यतु सर्वतः ।
प्रतपन्तमिवादित्यं मध्याह्ने दीप्ततेजसम् ॥ ९ ॥

ஜகதத்யாபிஷிக்தம் த்வாமநுபஶ்யது ஸர்வத: ।
ப்ரதபந்த மிவாதித்யம் மத்யாஹ்நே தீப்ததேஜஸம் ॥ 9 ॥

[ப - ஶ்ரீ.] அத்ய - இப்பொழுது, அபிஷிக்தம் த்வாம் - ராஜ்யாபிஷிக்தரான தேவரீரை, ஜகத் - லோகமானது, மத்யாஹ்நே - பகலில், தீப்ததேஜஸம் - ப்ரகாஶிக்கிற தேஜஸ்ஸை யுடையவனாய்,

ஸர்வதஃ - நான்கு பக்கங்களிலும் ப்ரதபந்தம் - ஜ்வலிக்கிற, ஆதித்ய மிவ - ஸூர்யனைப்போல், அநுபஶ்யது - நன்ருகப்பார்க்கட்டும்.

[வி - ம்] :—இந்த ஶ்லோகத்தில், அநுபோக்தாவான நம்முடைய பிதா இப்போது இல்லையே என்று பெருமாள் கருத்தாகக் கொண்டு, ஐயர் ஸ்வர்க்கத்தை அடைந்தாலும் அவர் கருத்தையறிந்தவர்களாயும் பெருமாளை அனுபவிப்பதில் சக்ரவர்த்தியைப்போல் தாங்களும் இச்சையுடையராயுமுள்ள உலகத்தார் அபிஷிக்தரான உம்மை அநுபவிக்கட்டும் என்கிருர். அத்ய - ஏவகாரத்தோடு கூடி ஸாவதாரணமாய் இப்பொழுதே என்று தாத்பர்யம். ஒரு கார்யத்திற்கு ஏதோ ஒருகாலம் தன்னடையே ப்ராப்தமாயிருக்க அத்ய என்ருல் அத்யைவ என்று அவதாரணம் ஏற்படுமிறே; ' ப்ராங்முகோ புஞ்ஜீத ' என்னுமாபோலே. இந்தால், பரதனுக்கு விலப்பாக்ஷமதை சொல்லப்பட்டது. அபிஷிக்தம் த்வாம் என்றதால், அபிஷேக ஸமயத்திலுண்டான திருமேனி ஶோபையைக் காட்டுகிறது. மத்யாஹ்நே தீப்ததேஜஸம் என்றதால், “ பகல் கண்டேன் நாரணனைக்கண்டேன் ” என்கிறபடியே பகவதநுபவகாலமெல்லாம் பகல் என்கையும், திருமேனியின் ஶோபாதிஶயத்தாலே சேதநரை வஶீகரிக்கையும் சொல்லப்பட்டன. ப்ரதபந்தம் என்று ஶத்ருக்களால் அணுகவொண்ணுமை காட்டப்பட்டது. தீப்ததேஜஸம் ப்ரதபந்தம் என்ற இவ்விரண்டு பதங்களும், ராஜ்ய பரிபாலநத்துக்கு உறுப்பான ஶக்தி விஶேஷங்களைக் காட்டுகின்றன. ஆக, கீழ் மூன்று ஶ்லோகங்களினுல், சக்ரவர்த்தியின் அபிஸந்திக்காகவும், இந்த ஶ்லோகத்தினுல் லோகாநந்தத்திற்காகவும் தேவரீரே அபிஷிக்தராய் ராஜ்யத்தை ஆளவேணும் என்கை சொல்லப்பட்டது. ॥ 9 ॥

**तूर्यसङ्घातनिर्घोषैः काञ्चीनूपुरनिस्वनैः ।**
**मधुरैर्गीतशब्दैश्च प्रतिबुध्यस्व राघव ॥ १० ॥**

தூர்யஸங்காதநிர்க்கோஷைஃ காஞ்சீநூபுரநிஸ்வநைஃ ।
மதுரைர்கீதஶப்தைஶ்ச ப்ரதிபுத்யஸ்வ ராகவ ॥ 10 ॥

[ப - ரை] ராகவ - ராகவனே ! தூர்யஸங்காத நிர்க்கோஷைஃ- தூர்யமென்ற வாத்யங்களின் ஸமூஹத்தினுடைய மிக்க கோஷங்

களாலும், காஞ்சீநூபுர நிஸ்வனை: - (அரையில் தங்கிய பொன் வடத்தின்) மணிகளுடையவும் பாத சிலம்புகளினுடையவும் த்வநிக ளாலும், மதுரை: - மாதுர்யத்தையுடைய, கீதஶப்தைஶ்ச - கான ஶப்தங்களாலும், ப்ரதிபுத்யஸ்வ - திருப்பள்ளியுணரவேணும்.

[வி - ம்.] இந்த ஶ்லோகத்தில், ராஜ்ய பாலனஞ்செய்து அதி லுண்டான போகங்களையும் தேவரீரே அநுபவிக்கவேண்டும் என் கிறார். தூர்யஸங்காத நிர்க்கோஷை: - ஆற்றாமையின் மிகுதியால் ஒன்றிரண்டு வாத்யமாக வொண்ணாது; வாத்ய ஸமூஹங்களாக வேணுமென்கிறார்: பசியன் கல அரிசிச்சோறு உண்ணவேணும் என்னுமாபோலே. இத்தால், காட்டில் எழுந்தருளியிருந்த போது ஸிம்ஹவ்யாக்ராதிகளினுடைய அதிபயங்கரமான கோஷங் களினாலே பெருமாள் கண்விழிப்பதை நினைத்து உள்கரைந்து உருகினவராகையாலே, பரதாழ்வான் அதைத் தவிர்த்துத் தூர்யாதி கோஷங்களடியாகப் பெருமாள் கண்விழித்தலே தமக்குப் பரம ப்ரயோஜநம் என்று அதை ப்ரார்த்திக்கிறார் என்றபடி. காஞ்சீநூபுரநிஸ்வனை: - இத்தால், நர்த்தந விஶேஷங்களும் ஸூசி தம். நர்த்தனமடியாகவிறே நூபுராதிகள் த்வநிப்பன. மதுரை: - ஆரோஹாவரோஹ ஸ்வரக்ரமத்தோடு கூடியனவாகையாலே மாதுர் யம் ஸித்தமிறே. கீதை: என்னாதே கீதஶப்தை: என்றதால் காநயுக்தமான ஸ்தோத்ரஶப்தங்கள் விவக்ஷிதங்கள். ப்ரதி புத்யஸ்வ என்பது, உபலக்ஷணமாய் நித்ரை செய்வதும், அவை களாலேயாகவேணும் என்றபடி. இந்த ஶ்லோகத்திற் சொல்லப் பட்ட போகம் மற்ற ராஜபோகங்களுக்கும் உபலக்ஷகம் ॥ 10 ॥

**यावदावर्तते चक्रं यावती च वसुन्धरा ।**
**तावत्त्वमिह सर्वस्य स्वामित्वमनुवर्तय ॥ ११ ॥**

யாவதாவர்த்ததே சக்ரம் யாவதீ ச வஸுந்தரா ।
தாவத்த்வமிஹ ஸர்வஸ்ய ஸ்வாமித்வமநுவர்த்தய ॥ 11 ॥

[ப - ரை.] சக்ரம் - சந்திரஸூர்யாதி ஜ்யோதிஸ் ஸமூஹ மானது, யாவத் ஆவர்த்ததே - எவ்வளவு காலம் சுற்றிக்கொண்டுவரு கிறதோ, வஸுந்தரா - பூமியானது, யாவதீ-எவ்வளவு பர்யந்தமோ, தாவத் - அவ்வளவு காலதேஶங்களும், த்வம் - தேவரீர், ஸர்வஸ்ய -

எல்லாவற்றிற்கும், ஸ்வாமித்வம் - யாஜமான்யத்தை, அநுவர்த்தய - அநுவர்த்திக்கவேண்டும்.

[வி - ம்.] இந்த ஶ்லோகத்தில், பரதன், இந்த ராஜ்யஶ்ரீயானது தேவரீருக்கே ஸர்வ காலத்திலும் ஸர்வ தேஶத்திலும் அவிச்சிந்நமாய்ச் செல்லவேண்டும் என்று ஸ்வபாரதந்த்ரயத்தை முன்னிட்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார். யாவதாவர்த்ததே சக்ரம்- இங்கு 'பீஷோதேதி ஸூர்ய:, பீஷாஸ்மாதக்நிஶ்ச' என்கிறபடியே தேவரீரிடத்தில் பீதியினாலே சுற்றிக்கொண்டிருக்கிற ஸூர்யாதி ஜ்யோதிஃ பதார்த்தங்களை இப்போதாக நிறுத்தவொண்ணுமோ? அவற்றின் ஸஞ்சாரம் யாவத்காலஶாவியாமாபோலே; தேவரீர் பாலநமும் அவிச்சிந்நமாய்ச் செல்லவேணும் என்று கருத்து. ஸ்வாமித்வமநுவர்த்தய—இங்கு அநு என்று சொன்னதால், முன்னமே தேவரீருக்கு ஸித்தமான ஸ்வாமித்வத்தை இப்போது அநுஸரிப்பதே வேண்டுவது என்கை ஸூசிதம். வஸுந்தரா யாவதீச-இங்கு தேஶாவதியைக் காட்டினபோதிலும் ச என்ற சகாரம் அநுக்த நித்ய விபூதி ஸமுச்சாயகமாகையாலே விபூதித்வயமும் தேவரீர் ஆளுகைக்கு விஷயம் என்கை ஸூசிக்கப்பட்டது. "பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்" என்னக் கடவதிறே. த்வம் என்று ஸர்வநாமபதமாகையாலே, புத்திஸ்த்தவாசகமாய் ஸ்வதந்த்ரனான தேவரீர் என்று அர்த்தம். இத்தால் தம்மிடத்தில் பாரதந்த்ர்யம் ஸூசிதம். அநுவர்த்தய என்பது ப்ரார்த்தநாயாம் லோட். ஆக, இந்த ஶ்லோகத்தால் ஸர்வதேஶ ஸர்வ காலங்களிலும் ஸர்வத்துக்கும் தேவரீரே ஸ்வாமியாய்ப் பரிபாலிக்கவமையும் என்கை சொல்லப்பட்டது || 11 ||

**भरतस्य वचः श्रुत्वा रामः परपुरञ्जयः ।**
**तथेति प्रतिजग्राह निषसादासने शुभे ॥ १२ ॥**

பரதஸ்ய வச: ஶ்ருத்வா ராமஃ பரபுரஞ்ஜயஃ ।
ததேதி ப்ரதிஜக்ராஹ நிஷஸாதாஸநே ஶுபே || 12 ||

[ப - ரை.] பரபுரஞ்ஜயஃ - ஶத்ரு பட்டணத்தை ஜயித்தவரான, ராமஃ - ராமன், பரதஸ்ய - பரதாழ்வானுடைய, வசஃ - வார்த்தையை, ஶ்ருத்வா - கேட்டு, ததா இதி - அப்படியே என்று, ப்ரதிஜக்ராஹ -

அங்கீகரித்தார். (பரதஃ) - (பரதாழ்வான்), ஶுபே ஆஸநே - மங்கள கரமான ஆஸநத்திலே, நிஷஸாத - வீற்றிருந்தார்.

[வி - ம்.] இப்படிப் பரதாழ்வான் ப்ரார்த்தித்தவாறே திருவுள்ளமுவந்து அபிஷேகத்துக்குப் பெருமாள் இசைந்தபடியைச் சொல்லுகிறது இந்த ஶ்லோகத்திலே. பரபுரஞ்ஜயஃ - இத்தால், முன்பு சித்ரகூடந்தன்னில் பரதாழ்வான் பண்ணின ப்ரார்த்தனைக்கு ஶத்ருபுரஜயாபேக்ஷை பெருமாளிடத்தில் இருந்தது. இப்போது, அவ்வபேக்ஷை தலைக்கட்டினமையால் பரதப்ரார்த்தநாங்கீகாரம் உண்டாகப்பெற்றது என்கை ஸூசிதம். தநேதி ப்ரதிஜ்க்ராஹ-பதினன்கு வருஷங்களிலே வநவாஸப்ரதிஜ்ஞை நிறைவேறியதுங்கூட பரத ப்ரார்த்தநாங்கீகாரத்துக்கு ஹேதுவிறே. ஶுபே ஆஸநே - ராஜார் ஹமான ஆஸநத்திலே என்றபடி. பெருமாள் காட்டிற்குப்போனது தொடங்கி மீண்டு எழுந்தருளியதற்கு முன்வரையில் முனிவர்க்கு உரிய ஆஸநத்திலேயிறே பரதன் வீற்றிருந்தது. கீழ் ஸர்க்கத்திலே ‘ ஸஹைவ தேநோபவிவேஶ ராகவஃ ’ என்று பெருமாள் வீற்றிருந்தமையைச் சொல்லிற்றுகையால், இங்கு ப்ரார்த்தநாகாரியாய் நின்று கொண்டிருந்த பரதாழ்வானுடைய வீற்றிருக்கையைச் சொல்லுகையே உசிதம். ॥ 12 ॥

ततः शत्रुघ्नवचनान्निपुणाः श्मश्रुवर्धकाः ।
सुखहस्ताः सुशीघ्राश्च राघवं पर्युपासत ॥ १३ ॥

தத: ஶத்ருக்நவசநாந் நிபுணாஃ ஶ்மஶ்ருவர்த்தகாஃ ।
ஸுகஹஸ்தாஃ ஸுஶீக்ராஶ்ச ராகவம் பர்யுபாஸத ॥ 13 ॥

[ப - ரை.] ததஃ - பிறகு, ஶத்ருக்நவசநாத் - ஶத்ருக்நனுடைய ஆஜ்ஞாவசநத்தினால், நிபுணாஃ - ஸமர்த்தர்களாயும், ஸுகஹஸ்தாஃ - ஸுககரமான கைத்தொழில்களை யுடையவராயும், ஸுஶீக்ராஶ்ச - மிகவும் சீக்ரகாரிகளுமான, ஶ்மஶ்ருவர்த்தகாஃ - திவாகீர்த்திகள், ராகவம் - ராகவனை, பர்யுபாஸத - (தங்கள் கார்யத்தினால்) ஸந்தோஷிப்பித்தார்கள்.

[வி - ம்.] இந்த ஶ்லோகத்தில், மேற் சொல்லப்போகிற திருவபிஷேகத்துக்கு அங்கமான திவ்ய ஸ்நாநாலங்காராதிகளை ப்ரதிபாதிப்பதாய் முன்னம் வநவாஸத்தில் ஏறிட்டுக்கொண்ட ஜடை

யினுடைய நிவர்த்தநத்திற்காக திவாகீர்த்திகள் வந்து தங்கள் காரியமான ஶ்மஶ்ருச்சேதாதிகளைச் செய்து ராகவனை உகப்பித்தார்கள் என்கிறது. நிபுணா: என்றதால், ப்ரபுவினுடைய இச்சையை அநுஸரிப்பதில் ஸாமர்த்த்யமுள்ளவர்கள் என்றபடி. மேலே ஸுகஹஸ்தா: என்று கார்ய ஸாமர்த்த்யம் சொல்லப்பட்டதிறே. ஸுஶீக்ராஶ்ச என்றதால், திருவபிஷேக மங்கள முகூர்த்தத்தில் அதிக்ரமணமன்றிக்கே கார்யகாரித்வம் வ்யஞ்ஜிதம். சகாரத்தால், கீழ்ச் சொல்லிய மூன்று குணங்களும் அந்த க்ஷௌர கர்மகாரிகள் எல்லோருக்கும் ப்ரத்யேகம் உண்டு என்கை காட்டப்பட்டது. ‘வர்த்தநச்சேதநேத த்வே’ என்கிறபடியே வர்த்தகஶப்தம் ஶ்மஶ்ருச்சேதநத்தைக் காட்டுகிறது. இங்கு, பஹுவசநம் பரதலக்ஷ்மணாதிகளுக்காக வந்தவர்களையும் சேர்த்துக்கொண்டு. ராகவம் என்றதால் ரகுகுலத்தாருக்கு இந்த திவாகீர்த்திகள் பரம்பரையாய் இப்பணி செய்கையை முறையாக உடையவர்கள் என்கை ஸூசிதமாயிற்று. பர்யுபாஸத என்பதும் ப்ரீதிபுரஸ்ஸரமாகச்செய்தமையைக் காட்டுகிறது. ॥ 13 ॥

पूर्वं तु भरते स्नाते लक्ष्मणे च महाबले ।
सुग्रीवे वानरेन्द्रे च राक्षसेन्द्रे विभीषणे ॥ ॥ १४ ॥
विशोधितजटः स्नातः चित्रमाल्यानुलेपनः ।
महार्हवसनो रामस्तस्थौ तत्र श्रिया ज्वलन् ॥ १५ ॥

பூர்வம் து பரதே ஸ்நாதே லக்ஷ்மணே ச மஹாபலே ।
ஸுக்ரீவே வாநரேந்த்ரே ச ராக்ஷஸேந்த்ரே விபீஷணே ॥ 14 ॥
விஶோதிதஜட: ஸ்நாத: சித்ரமால்யாநுலேபந: ।
மஹார்ஹவஸநோ ராமஸ் தஸ்த்தௌ தத்ர ஶ்ரியா ஜ்வலந்॥15॥

[ப - ரை] பரதே - பரதாழ்வான், பூர்வம் - (பெருமாளுடைய ஸ்நாநத்துக்கு) முன், ஸ்நாதே - ஸ்நாநம் பண்ணின வளவில், மஹாபலே - அதிகபலமுடைய, லக்ஷ்மணே - லக்ஷ்மணன், ஸ்நாதேச - ஸ்நாநம் பண்ணினவளவில், வாநரேந்த்ரே - வாநரர்களுக்கு நிர்வாஹகனான, ஸுக்ரீவே - மஹாராஜரும், ஸ்நாதே - ஸ்நாநம் பண்ணினவளவில், ராக்ஷஸேந்த்ரே - ராக்ஷஸாதிபதியான, விபீஷணே - விபீஷணாழ்வானும், ஸ்நாதே - ஸ்நாநம் பண்ணினவளவிலே, விஶோதித

ஜடஃ - எடுக்கப்பட்ட ஜடையையுடையரான, ராமஃ - பெருமாள், ஸ்நாதஃ - மங்களஸ்நாநம் பண்ணவராய், மஹார்ஹவஸநஃ - மஹான்களுக்கு அர்ஹமான திவ்யவஸ்த்ரத்தை அணிந்தவராய், சித்ரமால்யாநுலேபநஃ - ஆஶ்சர்யகரமான மாலை சந்தனம் இவற்றையும் அணிந்தவராய், ஶ்ரியா - அலங்கார ஶோபையினால், தத்ர - அந்த ஸிம்ஹாஸநத்தில், ஜ்வலந் - ப்ரகாஶித்துக் கொண்டு, தஸ்த்தௌ - இருந்தார்.

[வி - ம்] இவ்விரண்டுஶ்லோகங்களும், ஏகாந்வயங்கள். பூர்வம்து பரதே ஸ்நாதே—விபீஷணாழ்வான் லங்கையில் ராவணவதாநந்தரம் பெருமாளை மங்களஸ்நாநத்துக்காகப் ப்ரார்த்தித்தபொழுது 'நமே ஸ்நாநம் பஹுமதம் தம் விநா கைகயீஸுதம்' என்று பரதன் மங்கள ஸ்நாநம் பண்ணாமல் நான் மங்கள ஸ்நாநம் பண்ணுவதில்லை என்று இசையாமலிருந்தாராகையாலே, இப்பொழுது பரதஸ்நாநாநந்தரமே பெருமாளுடைய ஸ்நாநாங்கீகாரம் சொல்லப்பட்டது. மஹாபலே என்று இளையபெருமாளுக்கு விஶேஷணம். இத்தால், பெருமாளுடைய அநவரதகைங்கர்யத்திலும் இளையபெருமாளுக்கு ஶ்ரமஹாநி சொல்லப்பட்டது. 'ஶ்ரமஹாநிஸ்து யா தஸ்ய' என்கிறவிடத்தில் ஶ்ரமஹாநியே ஃபலமாகச் சொல்லப்பட்டதிறே. லக்ஷ்மணேச-இங்கு ச என்பது, விருத்தார்த்தகமாய் ராமகைங்கர்யத்திலே அநவரதம் ஆஸக்தராய் ஸ்வகார்யகரண விமுகரான லக்ஷ்மணருங்கூட ராமஆஜ்ஞயத்தாலே ஸ்நாநம்பண்ணினமையைக் காட்டுகிறது. வாநரேந்த்ரே-இதனால், மிகவும் சபலரான வானரர்களை நிர்வஹித்துக் கொண்டுபோகிறவராகையாலே கார்யாந்தரவ்யாப்ருதரான மஹாராஜரும் பெருமாளுடைய இச்சாநுகுணமாக ஸ்நாநாதிகளை அங்கீகரித்தார் என்கை ஸூசிதம். ஸுக்ரீவனுக்குக் கிஷ்கிந்தாநகரத்திலிருந்து புறப்பட்டதுமுதல் மங்களஸ்நாநமில்லையிறே. இங்கு ஸகல கார்யநிர்வஹணத்தில் ஊன்றி இருந்ததால் ஶத்ருக்நனுடைய ஸ்நாநம் சொல்லப்படவில்லை. பெருமாளுடைய மங்களஸ்நாநாநந்தரத்திலே ஶத்ருக்நன் ஸ்நாநம்பண்ணினாராகையாலே இவர்ஸ்நாநம் சொல்லப்படவில்லைஎன்றும் சிலர்கருத்து. விஶோதிதஜடஃ-முன்பெல்லாம் ஜடையுடன் ஶௌசார்த்தமாக ஸ்நாநம் பண்ணினவர் இப்போது ஜடையைப்போக்கி மங்களஸ்நாநம் பண்ணினார் என்கை சொல்லப்

பட்டது. சித்ரமால்யாநுலேபநঃ - இத்தால், நாநாவர்ணபுஷ்பங்களி ஞல் தொடுக்கபட்ட மாலே என்பதும் குங்குமாதிகளால் சேர்க்கப் பட்ட சந்தநம் என்பதும் ப்ரதிபாதிக்கப்பட்டன. மஹார்ஹவஸநঃ - முன் கைகேயிகொடுத்த மரவுரியைப் போகட்டு இப்பொழுது அவள் புத்ரஞன பரதன்கொடுத்த திவ்யவஸ்த்ரத்தை அணிந்தமைதோன்று கிறது. ஶ்ரியா ஜ்வலந் - அலங்காரஶோபையிஞலும் ப்ரகாசித்தார் என்கை. பரதாழ்வானே அடைந்தபின்பே பெருமாளுடைய திரு மேனிஶோபையும் அலங்காரஶோபையும் உஜ்ஜ்வலமாயின என்கிறது. " அந்தாமத்தன்பு " என்கிற திருவாய்மொழியில் ஆழ்வாரைப்பெற்ற பின்பிறே எம்பெருமானுக்கு எல்லாம் உஜ்ஜ்வலமாயின. அப்படியே இங்கும் ‖ 14, 15 ‖

**प्रतिकर्म च रामस्य कारयामास वीर्यवान् ।**
**लक्ष्मणस्य च लक्ष्मीवानिक्ष्वाकुकुलवर्धनः ॥ १६ ॥**

ப்ரதிகர்ம ச ராமஸ்ய காரயாமாஸ வீர்யவாந் ।
லக்ஷ்மணஸ்ய ச லக்ஷ்மீவா நிக்ஷ்வாகுகுலவர்த்தநঃ ‖ 16 ‖

[ப - ரை] வீர்யவாந் - வீர்யஶாலியாயும், லக்ஷ்மீவாந் - ஶோபையை உடையவராயும், இக்ஷ்வாகுகுலவர்த்தநঃ-இக்ஷ்வாகுவம் சத்துக்கு வர்த்தகராயுமுள்ள ஶத்ருக்நாழ்வான், ராமஸ்ய - பெருமா ளுக்கும், லக்ஷ்மணஸ்ய ச - இளேயபெருமாளுக்கும், ப்ரதிகர்ம - அலங்காரத்தை, காரயாமாஸ - செய்வித்தார்.

[வி - ம்] இந்த ஶ்லோகத்திலே, கீழ்ச்சொல்லிய திருமேனி யின்ஶோபைக்குக் காரணமாயுள்ள அலங்காரத்தின் அழகையும் ஶ்ரியா ஜ்வலந் என்கிறவிடத்தில் சேர்த்து அவ்வலங்காரந்தான் ஹரதப்ரேரிதரான ஶத்ருக்நாழ்வாஞல் பெருமாளுக்கும் இளேயபெரு மாளுக்கும் செய்யப்பட்டது என்று மஹர்ஷி சொல்லுகிருர். இங்கு வீர்யவாந் என்கிற விஶேஷணம், ஶத்ருக்நாழ்வானுக்கு ஸகலகைங் கர்யகரணத்திலும் ஶ்ரமமில்லாமையைக் காட்டுகிறது. லக்ஷ்மீவாந் என்று பாகவதஶேஷத்வப்ரயுக்த ஸ்ரீமத்த்வத்தைச் சொல்லுகிறது. இக்ஷ்வாகுகுலவர்த்தநঃ - ஶத்ருக்நாழ்வானிறே இக்ஷ்வாகுகுலவர்த்த கர். எங்ஙனேயென்னில், ஜ்யேஷ்டாநுவர்த்தநம் இக்குடிக்கு உள்ள ப்ரதாநஸ்வபாவம். அதைத் தான் கடைக்கோடியாயிருந்து பழ

தறச்செய்தவரன்றே இவர். பரதலக்ஷ்மணர்களுக்கும் ஜ்யேஷ்ட்டாநுவர்த்தநம் உண்டேயாகிலும் கநிஷ்ட்டரான இவராலே தாங்கள் அநுவர்த்திக்கப்பட்டவர்களாயிருக்கின்றார்கள். அன்றிக்கே, கேவல ஜ்யேஷ்ட்டாநுவர்த்தநம்உள்ளது இவர்ஒருவருக்கே. ஆகவே, இக்ஷ்வாகுகுலவர்த்தந: என்று இவர்தமக்கு இதையே ப்ரதானநிரூபகமாகச்சொன்னார் வால்மீகிபகவான். ராமஸ்ய-ரமயதீதி ராம: என்று திருமேனியினுடைய ஶோபையினால் நாடடைய ரமிப்பிக்கிறவர்: ஆகையாலே, ஆபரணத்துக்கும் ஆபரணமாயுள்ளவர்க்கு. ப்ரதிகர்ம காரயாமாஸ-அலங்காரம்பண்ணினார். இத்தால், ஶோபைக்காகவல்லாமல் த்ருஷ்டிதோஷம் வாராமைக்காக ஆபரணங்களால் திருமேனியைமறைத்தாரென்கை ஸூசிதம். காரயாமாஸ என்கிறவிடத்தில் ணிச்சுக்குத் தாத்பர்யமில்லை. தாமேசெய்தார்என்கையே முக்யார்த்தம். லக்ஷ்மணஸ்ய-பாகவதஶேஷத்வமுடையவரான ஶத்ருக்நாழ்வான் பகவச்சேஷத்வமுடைய இளையபெருமாளுக்கும் கைங்கர்யம்பண்ணுகை கர்த்தவ்யமிறே. பதினான்குவருஷங்கள் வநவாஸம்செய்துவந்தவர்கள் என்று பரதாழ்வான் இவர்களிடத்தில் பரிவினால் அலங்காரஞ்செய்யும்படி ஶத்ருக்நாழ்வானை நியமிக்க, அதனால் அவர்செய்தபடியாலே பரதாலங்கரணம் சொல்லப்படவில்லை ॥ 16 ॥

प्रतिकर्म च सीतायाः सर्वा दशरथस्त्रियः ।
आत्मनैव तदा चक्रु र्मनस्विन्यो मनोहरम् ॥ १७ ॥

ப்ரதிகர்ம ச ஸீதாயாః ஸர்வா தஶரதஸ்த்ரியஃ ।
ஆத்மநைவ ததா சக்ருர் மநஸ்விந்யோ மநோஹரம் ॥ 17 ॥

[ப-ரை] மநஸ்விந்யஃ - விசாலமான மனஸ்ஸையுடையவர்களான, தஶரதஸ்த்ரியஃ - சக்ரவர்த்தியின் பத்நிகள், ஸர்வா: - எல்லாரும், ஸீதாயாஃ - பிராட்டிக்கு, ப்ரதிகர்ம - அலங்கரணத்தை, ஆத்மநைவ - தாங்களே, மநோஹரம் - ரமணீயமாகும்படி, சக்ருஃ - செய்தார்கள்.

[வி-ம்] இதில், ஸீதாலங்காரம், சொல்லப்படுகின்றது. மநஸ்விந்யஃ - இத்தால் அந்தஃபுரத்திலுள்ள சக்ரவர்த்தியின் பத்நிகள் பதினான்கு வருஷங்களிலும் திவாராத்ர விஹாரமின்றிக்கே

பிராட்டியினுடைய இவ்வலங்காரத்திலேயே மனஸ்ஸுக்களை விசாலப்படுத்திக்கொண்டிருந்தமை ஸூசிதம். ஸர்வாः - அந்தப் புரத்திலுள்ள ஸ்திரீகள் எல்லோரையும் குறிப்பிட்டமையால் கைகேயியுமுட்பட அலங்கரித்தாளென்கை. ஸீதாயாः - 'ஸீதா லாங்கலபத்ததி:' என்கிறபடியே லாங்கலத்தின் அருகே பொற்கொடிபோலேயன்றோ இவள் அவதரித்தது: இத்தால், ஆபரணத்துக்கு அழகு கொடுக்குமவளென்கை. ஆத்மனைவ—இது ஜாத்யேகவசநம். 'மநோஹரம்' என்கையால், மநஸ்விந்ய: என்கிறவிடத்திலே சொன்ன மனஸ்ஸும் இவளழகிலே பரிவுகொண்டமை தோற்றுகிறது. சக்ரு: - அதிமநோஹரதிவ்யமங்களவிக்ரஹத்தையுடைய பிராட்டிக்கு இவர்கள் செய்கிற அலங்காரம் ஶோபாவஹமோ என்னில், 'கிமிவஹி மதுராணும் மண்டநம் நாக்ருதீநாம்' என்கிறபடியே ஆக்ருதியின் ஸௌஷ்ட்டவத்தாலே இதுவும் அலங்காரமாவதற்குத் தட்டில்லை ‖ 17 ‖

**ततो वानरपत्नीनां सर्वासामेव शोभना ।**
**चकार यत्नात् कौसल्या प्रहृष्टा पुत्रलालसा ॥ १८ ॥**

ததோ வாநரபத்நீநாம் ஸர்வாஸாமேவ ஶோபநா ।
சகார யத்நாத் கௌஸல்யா ப்ரஹ்ருஷ்டா புத்ரலாலஸா ‖ 18 ‖

[ப - ரை.] ததः - பிராட்டிக்கு அலங்கரித்த பிறகு, புத்ரலாலஸா- பிள்ளையினிடத்தில் வாத்ஸல்யத்தையுடையவளான, கௌஸல்யா- ஸ்ரீகௌஸல்யையானவள், ஶோபநா - ஶுபஹ்ருதயத்தையுடையவளாய், ப்ரஹ்ருஷ்டா - மிகவும் ஸந்தோஷத்தையுடையவளாய்க் கொண்டு, ஸர்வாஸாம் வாநரபத்நீநாம் - எல்லாவாநரஸ்த்ரீகளுக்கும், (ப்ரதிகர்ம) - அலங்காரத்தை, யத்நாத் - யத்நத்தால், சகார - செய்தாள்.

[வி - ம்] புத்ரலாலஸா - பிள்ளையான ஸ்ரீராமனிடத்திலுண்டான ப்ரீதி ப்ரேரிக்கச் செய்தாளென்கை. இத்தால், ஒரு விஷயத்தில் ப்ரீதி யுண்டானால் அவ்விஷயத்தினுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் அந்த ப்ரீதியின் கார்யம் நடக்குமென்கை . ஸூசிதம். ஶோபநா - இத்தால், அந்த வாநரஸ்த்ரீகள் திர்யக்குகளாய்த் தான் ராஜமஹிஷியாயிருக்கச்செய்தேயும், மனத்தில் அருவருப்பின்றிச்

செய்தாளென்கை வ்யஞ்ஜிதம். ப்ரஹ்ருஷ்டா - இப்படி அலங்கரிக்கை தனக்கே ஸ்வயம் ப்ரயோஜநமென்கையானது உடம்பிலே தொடைகொள்ளலாம்படி ஹர்ஷப்ரயுக்தரோமாஞ்சிதகாத்ரையாளென்கிறது. ஸர்வாஸாம் - ஒருத்தியையும் விடாமல் செய்தாள். வாநரமுகத்தார்க்குச் செய்கை க்லேஶாவஹமிறே. யத்நாத் - தான் வ்ருத்தையாய் அஶக்தையாயிருந்தும், ராமாபிநிவேஶம் கைகொடுக்கச் செய்தாளென்கை. ஆக, கௌஸல்யையார் ஸ்ரீராமனிடத்தில் ப்ரீதியினாலே வாநரபத்நிகளை அலங்கரித்தமை சொல்லப்பட்டது.

ततः शत्रुघ्नवचनात् सुमन्त्रो नाम सारथिः ।
योजयित्वाऽभिचक्राम रथं सर्वाङ्गशोभनम् ॥ १९ ॥

ததஃ ஶத்ருக்நவசநாத் ஸுமந்த்ரோ நாம ஸாரதிஃ ।
யோஜயித்வாऽபிசக்ராம ரதம் ஸர்வாங்கஶோபநம் ॥ 19 ॥

[ப - ரை] ததஃ - எல்லாருக்கும் அலங்காரமானபின்பு, ஸுமந்த்ரோ நாம - ஸுமந்த்ரனென்னும் பெயரையுடைய, ஸாரதிஃ - ஸாரதியானவர், ஶத்ருக்ந வசநாத் - ஶத்ருக்நாழ்வானுடைய ஆஜ்ஞாவசநத்தினால், ஸர்வாங்கஶோபநம் - ஸர்வாவயவங்களிலும் ஸுந்தரமாயுள்ள, ரதம் - தேரை, யோஜயித்வா - உசிதோபகரணங்களோடு சேர்த்து, அபிசக்ராம - பெருமாளிடம் கொண்டுவந்தார்.

[வி - ம்] கீழ்ஶ்லோகம்வரையில் நந்திக்ராமத்தில் நடந்த வ்ருத்தாந்தம். இனி, திருவயோத்யைக்குப் பெருமாள் ஸபரிகரராய் எழுந்தருளும்படியைச் சொல்லுவதாக நினைத்து அதற்காக ஸுமந்த்ரன் பெருமாளிடம் தேரைக்கொண்டுவந்தபடியை வால்மீகி இந்த ஶ்லோகத்தில் சொல்லுகிறார். ஸுமந்த்ரோ நாம - இப்போதன்றோ இந்த நாமதேயம் அந்வர்த்தமாயிற்று; முன்பு பட்டாபிஷேகத்தில் இவருடைய மந்த்ரம் கார்யகரமாயிற்றில்லையிறேஃ இதை அநுஸரித்தே வால்மீகி இப்போது ஸுமந்த்ர: என்னாமல், ஸுமந்த்ரோ நாம என்று கொண்டாடுகிறார். ஶத்ருக்நவசநாத் - பிறர் ஏவக் கார்யம் செய்கையிறே ஸத்துக்களுடைய க்ருத்யம். 'தேவிமாராவார் திருமகள்·பூமி ஏவ·மற்றமர ராள்செய்வார்' என்னக்கடவதிறே. இளையபெருமாள் கைங்கர்யம் பண்ணும் போதும் 'க்ரியதாமிதி மாம் வத' என்கிறபடியே ஏவிக் கார்யங்கொள்ளவேணு மென்றிறே

பெருமாளைப் ப்ரார்த்தித்தது. ஸர்வாங்கஶோஹநம்—பெருமாள் 'ஸமஸ் ஸமவிஹக்தாங்ம:' என்று அவயவங்களுடைய அழகிய ஸந்நிவேஶங்களையுடையராமாபோலே ரதமும் ஸர்வாங்கஸுந்தரமான படி சொல்லிற்று ;; 19 ॥

**अर्कमण्डलसंकाशं दिव्यं दृष्ट्वा रथोत्तमम् ।**
**आरुरोह महाबाहू रामः सत्यपराक्रमः ॥ २० ॥**

அர்கமண்டலஸங்காஶம் திவ்யம் த்ருஷ்ட்வா ரதோத்தமம் ।
ஆருரோஹ மஹாபாஹு ராமஸ் ஸத்யபராக்ரமः ॥ 20 ॥

[ப - ரை] மஹாபாஹு: - நீண்டு திரண்ட திருக்கைகளையுடையராயும், ஸத்யபராக்ரமः - ஸத்யமென்ன பராக்ரமமென்ன இவைகளையுடையராயுமுள்ள, ராமः - பெருமாள், அர்க்கமண்டலஸங்காஶம் - ஸூர்யமண்டலத்திற்கு ஸமாநமாயிருப்பதாயும், திவ்யம் - ஸ்தோத்ரார்ஹமுமான, ரதோத்தமம் - ரதஶ்ரேஷ்டத்தை, த்ருஷ்ட்வா - பார்த்து, ஆருரோஹ - ஏறியருளினார்.

[வி - ம்] அர்க்கமண்டலஸங்காஶம்-உயர்த்தியாலும் ப்ரகாஶத்தாலும் ஸூர்யமண்டலத்தோடு ஸமாநமாயிருக்கை. திவ்யம்— 'ஸ்துதி க்தி மோத' என்று ஸ்துத்யர்ஹத்வமும் கமநவிஶேஷவத்த்வமும் ஸந்தோஷஹேதுத்வமும் இவையனைத்தும் தோன்றுகின்றது. மஹாபாஹு:—இங்கு மஹத்த்வமாவது 'பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மந:' என்கிறபடியே இக்கைகளின் நிழலிலே ஸமஸ்த ஜுவநங்களும் ஒதுங்கிக்கிடக்க இடந்தருகை. ஸத்யபராக்ரமः - ஸத்யாஶ்ரிதமான பாத விக்ஷேபத்தையுடையவரென்கை. பதினாலாண்டு கழிந்த பின்பிறே திருவயோத்யைக்கு வர அடியிட்டது. அன்றிக்கே, ஸத்யபரரான பரதாழ்வானுடைய ப்ரார்த்தனையாலே ஆக்ரமிக்கப்பட்டவ ரென்னவுமாம். இந்த ஶ்லோகத்தில் பெருமாள் ஸுமந்த்ரன் கொண்டுவந்த ரதத்தின்மீது ஏறியருளினாரென்கை சொல்லப்பட்டது ॥ 20 ॥

**सुग्रीवो हनुमांश्चैव महेन्द्रसदृशद्युती ।**
**स्नातौ दिव्यनिभैर्वस्त्रैर्जग्मतुश्शुभकुण्डलौ ॥ २१ ॥**

ஸுக்ரீவோ ஹநுமாம்ஶ்சைவ மஹேந்த்ரஸத்ருஶத்யுதீ ।
ஸ்நாதௌ திவ்யநிபைர்வஸ்த்ரைர் ஜக்மதுஶ்ஶுபகுண்டலௌ ॥

[ப - ரை.] மஹேந்த்ரஸத்ருஶத்யுதீ - இந்திரனோடொத்த காந்தியை யுடையவர்களான, ஸுக்ரீவः - மஹாராஜரும், ஹநுமாம்ஶ்ச - சிறியதிருவடியும் (தௌ - அவர்கள்,) ஸ்நாதௌ - மங்களஸ்நாநம் பண்ணினவர்களாயும், திவ்யநிபைः - திவ்யமான வஸ்திரங்களோடு ஸமாநமான, வஸ்த்ரைः - வஸ்திரங்களோடு, (யுக்தௌ) - கூடினவர்களாயும், ஶுபகுண்டலௌ - அழகிய கர்ணபூஷணங்களையுடையவர்களாயும், ஜக்மதுः - சென்றார்கள்.

[வி - ம்] மஹேந்த்ரஸத்ருஶத்யுதீ - இப்போது பரதப்ரார்த்தனையைத் தலைக்கட்டுவதாகப் பெருமாள் திருவயோத்யைக்கு எழுந்தருள யத்னித்தவாறே இவர்களுக்கு ஹர்ஷப்ரயுக்தமாக வடிவில்புகர் உண்டாயிற்று என்றபடி. திவ்யநிபைர் வஸ்த்ரைः இத்யாதி - லோகாதீதமான காந்திவெள்ளத்தையுடைய பெருமாளோடு சேஷபூதர்கள் செல்லும்போது திவ்யவஸ்த்ரதிவ்யாபரணத்யலங்க்ருதராயன்றோ செல்லுவது ப்ராப்தம்; இது, பெருமாளுக்கு அதிஶயகரமிறே. பட்டர் பெருமாளுடைய உத்ஸவகாலங்களில் திருவீதியுலாவும்போது திவ்யாலங்க்ருதராயன்றோ கூடச் செல்லுவது. இதைப்பற்றி, அவரைச் சிலர் கேட்க, அவர் உத்ஸவகாலங்களில் மதிளுக்கு மாணிக்கப்பட்டையடிக்குமாபோலே சேஷபூதர்கள் அலங்கரித்துக்கொள்வதும் அத்தலைக்கு அதிஶயகரமென்று பணித்தார். ஆக, இஶ்ஶ்லோகத்தில், மஹாராஜரான ஸுக்ரீவனும் சிறியதிருவடியும் அலங்கரித்துக்கொண்டு பெருமாளுடன் சென்றமை சொல்லப்பட்டது ‖ 21 ‖

वराभरणसंपन्ना ययुस्ताश्शुभकुण्डलाः ।
सुग्रीवपत्न्यस्सीता च द्रष्टुं नगरमुत्सुकाः ‖ २२ ‖

வராபரணஸம்பந்நா யயுஸ்தாஶ்ஶுபகுண்டலாः ।
ஸுக்ரீவபத்ந்யஸ் ஸீதா ச த்ரஷ்டும் நகரமுத்ஸுகாः ‖ 22 ‖

[ப - ரை.] ஸுக்ரீவபத்ந்யः - மஹாராஜருடைய பார்யைகளும், ஸீதா ச - பிராட்டியும், வராபரணஸம்பந்நாः - உத்க்ருஷ்டமான ஆபரணங்களால் நிறைந்தவர்களாயும், ஶுபகுண்டலாः - ஸுந்தர கர்ணாபரணங்களையுடையவர்களாயும், நகரம் - திருவயோத்யையை,

த்ரஷ்டும் - பார்ப்பதற்கு, உத்ஸுகாః - ஆசையையுடையவர்களாய், யயுః - சென்றார்கள்.

[வி - ம்.] ஸுக்ரீவபத்ந்யः - இங்கு பஹுவசநத்தால் மஹாராஜருக்கு ருமாதிகளான அநேகபத்நிகளுண்டு என்கை காட்டப்படுகிறது. பெருமாளைப்போலே ஏகதாரவ்ரத நிஷ்டரன்றே இவர். ஸீதா - ஆபிஜாத்யமும் ஸௌந்தர்யமும் விவக்ஷிதம். சகாரம் அந்வாசயத்திலேயாய்ப் பிராட்டிக்கு அப்ராதாந்யத்தைத் தோற்றுவிக்கிறது. அப்ராதாந்யம் பிராட்டியின் நினைவாலே. நகரம் த்ரஷ்டும் உத்ஸுகாః யயுః - இவ்வாநரபத்நிகளுடன்சேர்ந்து நகரதர்ஶநம் இது பர்யந்தம் இல்லாமையால் பிராட்டிக்கும் நகரதர்ஶநேச்சை உண்டு. அன்றிக்கே, பதினான்காண்டு நகரதர்ஶநமில்லாமையாலே இவளுக்கே இச்சையுண்டு என்னவுமாம். வராபரணஸம்பந்நாః என்று ஸ்ரீகௌஸல்யையார் பூட்டின ஆபரணஶோபையைக் காட்டுகிறது. ஆனால், ஶுபகுண்டலாః என்கிறவிடத்தில் சொன்ன கர்ணாபரணமும் அவ்வாபரணங்களில் சேராதோ வென்னில், முகத்துக்குக் கர்ணாபரணம் அதிகஶோபாவஹமாகையாலே, இதை ப்ரத்யேகமாகச் சொல்லிற்று. ஆகவே, ஆபரண ஶப்தம் இதுவன்றி மற்ற ஆபரணங்களைக் காட்டுகின்றது ॥ 22 ॥

**अयोध्यायां तु सचिवा राज्ञो दशरथस्य ये ।**
**पुरोहितं पुरस्कृत्य मन्त्रयामासुरर्थवत् ॥ २३ ॥**

அயோத்யாயாம் து ஸசிவா ராஜ்ஞோ தஶரதஸ்ய யே ।
புரோஹிதம் புரஸ்க்ருத்ய மந்த்ரயாமாஸுரர்த்தவத் ॥ 23 ॥

[ப - ரை.] தஶரதஸ்ய ராஜ்ஞః - தஶரத மஹாராஜாவுக்கு, யே ஸசிவாః - எந்த மந்திரிகளோ, (தே - அவர்கள்யாவரும்,) அயோத்யாயாம் - அயோத்யையிலே, (கத்வா) - (சென்று), புரோஹிதம் - வஸிஷ்டபகவானை, புரஸ்க்ருத்ய-முன்னிட்டுக்கொண்டு, அர்த்தவத் - ப்ரயோஜனமுடையதாயிருக்கும்படி, மந்த்ரயாமாஸுः - ஆலோசித்தார்கள்.

[வி - ம்.] இந்த ஶ்லோகத்தில், இங்ஙனம் பெருமாள் ஸபரிகரராய்த் திருவயோத்யையைக் குறித்து எழுந்தருளாநிற்க, அப்

பொழுது திருவயோத்யையிலே மந்த்ரிகள் வஸிஷ்டபகவானை முன்னிட்டுக்கொண்டு ஆலோசித்தமையைச் சொல்லுகின்றது. அயோத்யாயாம் து - இங்கு து ஶப்தம் வைலக்ஷண்யத்தைக் காட்டுகிறது. அதாவது பெருமாள் எழுந்தருளுகிறபடியாலே முன்னைவிட நகரத்துக்கு ஶோபை மிகுதியாக விளங்குகை. 'யே' என்றிருப்பதனால் 'தே' என்று வருகை ந்யாய ஸித்தம். புரோஹிதம் - இங்கு வஸிஷ்டம் என்னாமல் புரோஹிதம் என்று வால்மீகி பணித்தது புரஃ ஹிதம் பஶ்யதீதி புரோஹிதஃ என்ற வ்யுத்பத்தியின்படி வருங்காலத்தில் ஹிதத்திலே நோக்கமுடையவராகையாலே இவர்தம்மை முன்னிட்டாலல்லது கார்யஸித்தியில்லையென்னும் நினைவாலே. அர்த்தவத் - ப்ரயோஜநத்தையுடையதாகும்படி ஆலோசித்தார்கள். இத்தால், முன்னைய அபிஷேகத்தில் ஆலோசனை அப்ரயோஜிகை என்கை ஸூசிதமாயிற்று. இத்தால், பெருமாள் திருவயோத்யைக்கு எழுந்தருளுகிற அழகைக் கண்டு அஸ்தாநேஸயஶங்கையாலே நன்முனிவர்கள் இந்தத் திருவபிஷேகம் நிர்விக்நமாய் நடக்கவேண்டுமென்று மங்களாஶாஸநம்பண்ணினமை தோற்றுகின்றது ॥ 23 ॥

**अशोको विजयश्चैव सुमन्त्रश्चैव सङ्गताः ।**
**मन्त्रयन् रामवृध्यर्थमृध्यर्थं नगरस्य च ॥ २४ ॥**

அஶோகோ விஜயஶ்சைவ ஸுமந்த்ரஶ்சைவ ஸங்கதாஃ ।
மந்த்ரயந் ராமவ்ருத்யர்த்தம் ருத்யர்த்தம் நகரஸ்ய ச ॥ 24 ॥

[ப - ரை] அஶோகஃ விஜயஃ ஸுமந்த்ரஃ - அஶோகன் விஜயன் ஸுமந்த்ரன் என்கிற நாமதேயங்களையுடைய மந்த்ரிகள், ஸங்கதாஃ - ஒன்று சேர்ந்து, ராமவ்ருத்யர்த்தம் - பெருமாளுடைய வ்ருத்திக்காவும், நகரஸ்ய ருத்யர்த்தஞ்ச - பட்டணத்தினுடைய அபிவிருத்திக்காகவும், மந்த்ரயந் - ஆலோசித்தார்கள்.

[வி - ம்.] கீழ்ச் சொன்ன ஆலோசனை இந்தவிதமான ப்ரயோஜநத்துக்காக என்பதை, இந்த ஶ்லோகம் காட்டுகிறது. அஶோக இத்யாதி. நாமதேயங்களைக் கேட்டபோதே ஆலோசனகார்யம் முடிவு பெறுமென்கை தோற்றுகின்றது. ஸங்கதாஃ - மநோவாக்காயங்களாலே ஒத்திருந்தார்களென்றபடி. 'மநஸ்யேகம் வசஸ்யேகம் கா

மண்யேகம் மஹாத்மநாம்' என்கிறபடியே த்ரிகரணங்களும் ஒத்திருக்கையிறே மஹாத்மாக்களின் லக்ஷணம். இப்படித் த்ரிகரணங்களாலும் ஐக்யத்தை யடைந்த மஹாத்மாக்கள் கூடினால்,பலஸித்திக்குத் தடை யேதுமில்லையிறே. ராமவ்ருத்த்யர்த்தம் இத்யாதி - ஸ்வாமியின் அபிவிருத்திக்காகவும் ஸொத்துக்களின் அபிவிருத்திக்காகவும் ஆலோசித்தார்களென்கை. அன்றிக்கே நகரஸ்ய என்றது பட்டணத்திலுள்ளார்களைக் குறிக்கிறது; அவர்களின் அபிவிருத்திக்காகவும் என்னவுமாம். உலகத்தில் ஸொத்தினால் ஸ்வாமிக்கும் ஸ்வாமியினால் ஸொத்துக்கும் அபிவிருத்தி யுண்டாமிறே ॥ 24 ॥

**सर्वमेवाभिषेकार्थं जयार्हस्य महात्मनः ।**
**कर्तुमर्हथ रामस्य यद्यन्मङ्गलपूर्वकम् ॥ २५ ॥**
**इति ते मन्त्रिणस्सर्वे सन्दिश्य तु पुरोहितम् ।**
**नगरान्निर्ययुस्तूर्णं रामदर्शनबुद्धयः ॥ २६ ॥**

ஸர்வமேவாபிஷேகார்த்தம் ஜயார்ஹஸ்ய மஹாத்மந: ।
கர்துமர்ஹத ராமஸ்ய யத்யந் மங்கலபூர்வகம் ॥ 25 ॥
இதி தே மந்த்ரிணஸ்ஸர்வே ஸந்திஶ்ய து புரோஹிதம் ।
நகராந் நிர்யயுஸ்தூர்ணம் ராமதர்ஶநபுத்தய: ॥ 26 ॥

[ப - ரை.] ஜயார்ஹஸ்ய - ஜயத்துக்கே அர்ஹராய், மஹாத்மந: - மஹாத்மாவான, ராமஸ்ய - பெருமாளுக்கு, அபிஷேகார்த்தம் - பட்டாபிஷேகத்துக்காக (வேண்டியது) யத் யத் - எந்த எந்த கார்யமோ, (தத் தத்) ஸர்வமேவ - (அந்த அந்த) எல்லாவற்றையுமே, மங்கலபூர்வகம் - மங்கலத்தை முன்னிட்டு, கர்த்தும் - செய்வதற்கு, அர்ஹத-தகுந்தவராயிருக்கிறீர், இதி-என்று, தே ஸர்வே மந்த்ரிண: - அந்த எல்லா மந்த்ரிகளும், புரோஹிதம் - வஸிஷ்ட்டபகவானிடம், ஸந்திஶ்ய - தெரிவித்து, ராமதர்ஶநபுத்தய: - பெருமாளுடைய தர்ஶநத்தில் இச்சையுடையவர்களாய், நகராத் - பட்டணத்திலிருந்து, தூர்ணம் - சீக்ரமாக, நிர்யயு: - வந்தார்கள்.

[வி - ம்] :—அந்த மந்திரிகள் தாங்கள் ஆலோசித்தப்ரகாரம் நடத்தும்படி வஸிஷ்ட்ட பகவானுக்குத் தெரிவித்துப் பெருமாளிடம் வந்தார்களென்கிறார், இவ்விரண்டு ஶ்லோகங்களாலே. ஜயார்ஹஸ்ய-

ஜயஶப்தத்துக்குத் தகுந்தவர். அதாவது - ப்ராதஃகாலாதிகளிலே ஸ்துதிபாடகர்கள் வந்து பாட்டோடு கூட ஜய விஜயீபவ என்று ஸ்துதிப்பதற்குத் தகுமவர் என்கை. மஹாத்மநஃ - ஆத்ம சப்தம் ஸ்வபாவத்தையும் திருமேனியையும் காட்டக்கடவது. ஆகவே, ஜநங்களை அநுவர்த்தநாதிகளாலே வஶீகரிக்கும் ஸ்வபாவமுடையராவதோடு, ஸௌந்தர்யத்தாலே வஶீகரிக்கும் திருமேனியை யுடையவரென்கை. அரசர்களுக்கு முதலிலே தேஹகாம்பீர்யமும் ஔதார்யாதி குணங்களும் ராஜ்யபாலநத்துக்கு அபேக்ஷிதமிறே. அர்ஹாத இது பூஜாயாம் பஹுவசநம். அன்றிக்கே, அவருடைய பரிகரங்களையும் கூட்டி பஹுவசநமாகவுமாம். ராமதர்ஶநபுத்தய: - இங்கு புத்திபதம் இச்சாவாசியாயுள்ளது. 'இச்சா வயுநம் ஜ்ஞாநம்' என்று இச்சாபர்யாயம் ஜ்ஞாநபதம். ஆக, ராமதர்ஶநத்திலே இச்சையுடையவர்களாயென்கை. தூர்ணம் நிர்யயுஃ-அதிசீக்ரமாக வந்தார்கள். பெருமாளான இவ்விலக்ஷண விஷயத்திலும் காணவேணுமென்கிற த்வரையானது பிறவாவிடில், இவ்விஷயத்துக்கும் நாட்டார் பற்றும் விஷயத்துக்கும் வைலக்ஷண்யமின்றிக்கே யொழியுமே ॥ 25-26 ॥

**हरियुक्तं सहस्राक्षो रथमिन्द्र इवानघः ।**
**प्रययौ रथमास्थाय रामो नगरमुत्तमम् ॥ २७ ॥**

ஹரியுக்தம் ஸஹஸ்ராக்ஷோ ரதமிந்த்ர இவாநகஃ ।
ப்ரயயௌ ரதமாஸ்த்தாய ராமோ நகர முத்தமம் ॥ 27 ॥

[ப - ரை.] அநகஃ - தோஷமற்ற, ராமஃ - பெருமாள், ஹரியுக்தம் - குதிரைகளோடு கூடின, ரதம் - தேரை, ஆஸ்த்தாய - அடைந்து, ஸஹஸ்ராக்ஷஃ - ஆயிரங்கண்களையுடைய, இந்த்ர இவ - இந்திரன்போல, உத்தமம்-ஶ்ரேஷ்ட்டமான, நகரம் - பட்டணத்தை, ப்ரயயௌ - சென்றார்.

[வி - ம்] :—இதில், பெருமாள் அயோத்யையின் திருவீதியிலெழுந்தருளும்போது உண்டான திருமேனிஶோபையை வர்ணிக்கிறார் மஹர்ஷி. அநகஃ - இங்கு அகஶப்தத்தாலே தோஷம் சொல்லப்பட்டதாய், நகாரத்தாலே அது இல்லாமை தெரிவிக்கப்படுகிறது. அதாவது தம்மை ஸேவிக்கவிரும்புமவர்களுக்குத் தம்மைக் காட்டாமையாகிற தோஷமில்லாதவரென்கை. இந்தப்ரகரணத்தில்

வேறுதோஷப்ரஸக்தியில்லையிறே. தேரில் பெருமாளெழுந்தருளு கிறபோதுண்டான ஶோபையைக் கண்டு 'ராமஃ' என்கிறார் மஹர்ஷி. ஸஹஸ்ராக்ஷஃ - இத்தால், பெருமாள் திருமேனியில் அணிந்த கவசத்திலுள்ள ரத்னங்கள் இந்த்ரன் ஶரீரத்திலுள்ள ஸஹஸ்ரநேத்ரஸ்த்தாநீயங்களாய்ப் ப்ரகாசிக்கின்றனவென்கை ஸூசிதம். உத்தமம் நகரம் - இப்போதிறே நகரத்துக்கு ஶோபை மிகுந்திருப்பது. பெருமாள் எழுந்தருளுவதற்குமுன் 'நஷ்டசந்த்ர மிவாம்பரம்' என்கிறபடியே சந்திரனில்லாத ஆகாயம்போலன்றோ இந்த நகரம் இருந்தது. ஆகவே, ராமசந்த்ரப்ரவேஶத்தாலே யுண்டான ஶோபையை நினைத்து மஹர்ஷி உத்தமம் என்று பணித்தார். ப்ரயயௌ - யயௌ என்னுமல் ப்ரயயௌ என்னத்தால் எழுந்தருளுவதிலுண்டாகிய அழகும் அதைச்கண்டு ஜனங்களுக் குண்டாகிய ஹர்ஷப்ரகர்ஷமும் ஸூசிதமாயிற்று ‖ 27 ‖

जग्राह भरतो रश्मीन् शत्रुघ्नश्छत्रमाददे ।
लक्ष्मणो व्यजनं तस्य मूर्ध्नि संपर्यवीजयत् ॥ २८ ॥
श्वेतञ्च वालव्यजनं जग्राह पुरतः स्थितः ।
अपरं चन्द्रसङ्काशं राक्षसेन्द्रो विभीषणः ॥ २९ ॥

ஜக்ராஹ பரதோ ரஶ்மீந் ஶத்ருக்நஶ்ச்சத்ரமாததே ।
லக்ஷ்மணோ வ்யஜநம் தஸ்ய மூர்த்நி ஸம்பர்யவீஜயத் ‖ 28 ‖
ஶ்வேதஞ்ச வாலவ்யஜநம் ஜக்ராஹ புரதஃ ஸ்த்திதஃ ।
அபரம் சந்த்ரஸங்காஶம் ராக்ஷஸேந்த்ரோ விபீஷணஃ ‖ 29 ‖

[ப - ரை.] பரதஃ - பரதாழ்வான், ரஶ்மீந் - கடிவாளங்களை, ஜக்ராஹ - க்ரஹித்தார். ஶத்ருக்நஃ - ஶத்ருக்நாழ்வான், சத்ரம் - குடையை, ஆததே - ஸ்வீகரித்தார். லக்ஷ்மணஃ - இளையபெருமாள், தஸ்ய - அந்தப்பெருமாளுடைய, மூர்த்நி - ஶிரஸ்ஸிலே, வ்யஜநம் - விசிறியை, ஸம்பர்யவீஜயத் - பாங்காக வீசினார். புரதஃ ஸ்த்திதஃ - எதிரில்நின்றவராய்க்கொண்டு, ஶ்வேதம் வாலவ்யஜநம் ச - வெண்சாமரையையும், ஜக்ராஹ - க்ரஹித்தார். ராக்ஷஸேந்த்ரஃ - ராக்ஷஸ ராஜாவான, விபீஷணஃ - விபீஷணாழ்வான், சந்த்ரஸங்காஶம் - சந்திரனோடொத்த, அபரம் - மற்றொருசாமரத்தை, ஜக்ராஹ - க்ரஹித்தார்

[வி - ம்.] :—'விசித்ரா தேஹஸம்பத்தி ரீஸ்வராய நிவேதிதும்' என்றும் 'மாயவன் தன்னை வணங்கவைத்த கரணமிவை' என்றுஞ் சொல்லுகிறபடியே கரணகளேபரங்களைப் பெற்றது அத்தலைக்குக் கைங்கர்யார்த்தமாகவன்றே. ஆகவே, இவ்வர்த்தத்தை அநுஷ்டான முகத்தாலே காட்டுவதற்காக அவதரித்தவர்களாகையாலே பரதாழ்வான் முதலானவர்கள் அந்தந்தக் கைங்கர்யங்களை நான் முன்னே நான் முன்னே என்று அநுஷ்டிக்கிற ப்ரகாரத்தை இரண்டு ஶ்லோகங்களாலே வர்ணிக்கிறார் மஹர்ஷி. ஜக்ராஹ பரதோ ரஶ்மீந் என்று பரதாழ்வானுக்கு ஸாரத்யகைங்கர்யஞ்சொன்னதால், இவர் தமக்கு அத்யந்தப்ரியதமமான ராமனுடைய அயோத்யா ப்ரவேசத்தில் என்ன விக்க்நம் வருமோ என்று 'ப்ரேம பஶ்யதி பயாந்யபதேऽபி' என்கிறபடியே அஸ்த்தாநேபயஶங்கியாய், வேறொரு கைங்கர்யத்திலு மிழியாமல் திருவயோத்யைக்கு ஶீக்ரமாக ப்ரவேசிப்பதில் முக்ய ஸாதநமாயிருந்துள்ள ஸாரத்யக்ருத்யத்திலே இழிந்தாரென்கை ஸூசிதம். ஶத்ருக்நஶ்ச்சத்ரமாததே - இங்கு பரதகைங்கர்யத்துக்கு அடுத்தபடியாக ஶத்ருக்நாழ்வான் கைங்கர்யத்தைச் சொன்னதால் ஶத்ருக்நாழ்வான் பரதாழ்வானுக்கு கரசரணாத்யவயவம்போல் அத்யந்த பரதந்த்ரரென்கை ஸூசிதம். இவ்விருவருடைய கைங்கர்யங்களுக்கும் 'சென்றால் குடையாம்' என்று கமநோபயோகித்வமுண்டிறே. 'லக்ஷ்மணோ + வீஜயத் ஶ்வேதஞ் ச + புரதஃஸ்திதஃ என்று இளையபெருமாள் ஶ்ரமபரிஹாரார்த்தமாக திருமுடிப்ரதேஶத்திலே வ்யஜநத்தாலே வீசுகிறதும் எதிரேநின்றுகொண்டு சாமரத்தைப் பரிமாருகிறதும் ஆக இரண்டு கைங்கர்யங்களிலும் அந்வயித்தது 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' [எல்லாவடிமைகளும் செய்வேன்]' என்று ப்ரதிஜ்ஞைபண்ணிப் பெருமாளுடன் புகுந்து காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூண் உண்ணமாட்டாமையாலேயன்றே. 'நிவாஸஶய்யாஸநபாதுகாம்சுகோபதாந வர்ஷாதபவாரணாதிபிஃ' என்றும் 'சென்றால் குடையாம்' என்றும் சொல்லுகையாலே ஸர்வவித கைங்கர்யங்களும் செய்கை இவருக்கு ஸ்வரூபமிறே. அபரம் விபீஷணஃ - விபீஷணாழ்வானுக்கு ராமாநுவ்ருத்தியே பலமாகையாலே அவர் கைங்கர்யம் சொல்லப்பட்டது.

ஸுக்ரீவன் மஹாராஜாவாகையாலே அவர் கைங்கர்யம் சொல்லப் படவில்லை. || 28 29 ||

**ऋषिसङ्घैस्तदाऽऽकाशे देवैश्च समरुद्गणैः ।**
**स्तूयमानस्य रामस्य शुश्रुवे मधुरध्वनिः ॥ ३० ॥**

ருஷிஸங்கைஸ்ததாऽऽகாஶே தேவைஶ்ச ஸமருத்கணை: ।
ஸ்தூயமாநஸ்ய ராமஸ்ய ஶுஶ்ருவே மதுரத்வநி: || 30 ||

[ப - ரை.] ஆகாஶே - ஆகாயத்தில், ருஷிஸங்கை: - ருஷிக் கூட்டங்களாலும், ஸமருத்கணை: - மருத்கணங்களோடு கூடின, தேவை: - தேவதைகளாலேயும், ததா - அந்த நகரப்ரவேஶ ஸமயத்திலே, ஸ்தூயமாநஸ்ய - ஸ்துதிக்கப்படுகிற, ராமஸ்ய - பெருமாளைப்பற்றின, மதுரத்வநி: - மதுரமான ஶப்தமானது, ஶுஶ்ருவே - கேட்கப்பட்டது.

[வி - ம்] :— ஆகாஶே என்பது, ஆகாயத்தில் இருப்பவர்களான ருஷிகளையும் தேவதைகளையும் காட்டுகிறது. இங்கு, ருஷி ஶப்தத்தாலே 'ருஷிர் ஜ்ஞாநே' என்கிறபடி ஸர்வஸாக்ஷாத்கார க்ஷமதை காட்டப்பட்டதாய், 'மநஸா து விஶுத்தேந' என்று சொல்லுகிறபடியே பெருமாளுடைய பரத்வத்தையும் அவதாரரஹஸ்யத்தையும் ருஷிகள் உள்ளபடி அறியுமவர்களாகையால், இப்போது பெருமாள் மந்த சேதநர்களோடு புரையறக் கலந்திருக்கையாகிற ஸௌஶீல்யத்தையைக்கண்டு விஸ்மிதர்களாய் ஸ்துதித்தார்கள் என்கை ஸூசிதம். தேவதைகள் ஸ்துதிப்பது தங்கள் கார்யமான ராவணவதம் தலைக்கட்டின ஹர்ஷத்தாலும், பெருமாளுடைய நிரதிஶயஸௌந்தர்யதர்ஶநத்தாலும். ராமஸ்ய என்று விஷயஷஷ்டியாய் ராமன்விஷயமான என்று மதுரத்வனியில் அந்வயிக்கிறது. மதுரத்வநி: - 'ரஸோ வை ஸ:' என்கிறபடியே பரம போக்யனை பெருமாளை விஷயீகரித்த த்வநியாகையாலே மாதுர்யத்துக்குச் சொல்ல வேண்டாவிறே || 30 ||

**ततः शत्रुञ्जयं नाम कुञ्जरं पर्वतोपमम् ।**
**आरुरोह महातेजाः सुग्रीवः प्लवगर्षभः ॥ ३१ ॥**

தத: ஶத்ருஞ்ஜயம் நாம குஞ்ஜரம் பர்வதோபமம் ।
ஆருரோஹ மஹாதேஜா: ஸுக்ரீவ: ப்லவகர்ஷப: || 31 ||

[ப - ரை.] ததஃ - அநந்தரம், மஹாதேஜாஃ - மஹாதேஜஸ்வியும், ப்லவகர்ஷஃ - வானரஶ்ரேஷ்ட்டருமான, ஸுக்ரீவஃ - மஹாராஜர், பர்வதோபமம் - மலைபோன்ற, ஶத்ருஞ்ஜயம் நாம - ஶத்ருஞ்ஜயனென்று ப்ரஸித்திபெற்ற, குஞ்ஜரம் - யானையை, ஆருரோஹ - ஏறினார்.

[வி - ம்.]:—இதில், மஹாராஜர் அரசராகையால் யானையின் மீதேறிப் பெருமாளுடன் சென்றாரென்கிறது. மஹாதேஜா: என்று ஸுக்ரீவனுக்கு விஶேஷணமிட்டதின் கருத்து என்னவென்றால், முன் தான் ராஜ்யத்தையும் தாரயாதிகளையும் அடைந்தபோது தேஜஸ்வியானார். இப்போது, பெருமாள் பிராட்டியை லபித்து ராஜ்யத்தையும் அடைகிறபடியைக் கண்டு மஹாதேஜஸ்வியானாரென்கை. பர்வதோபமம் - ஸ்வயம்வாநரமாகையாலே மலையேறுகை பொருந்துமிறே. ஶத்ருஞ்ஜயம் - முன்பு காட்டிற்கு எழுந்தருளினபோது பெருமாள் தாநமாகக்கொடுத்த யானை தமக்கு மாதுலனாலே கொடுக்கப்பட்டது. இது, பைத்ருகமானது.

**नवनागसहस्राणि ययुरास्थाय वानराः ।**
**मानुषं विग्रहं कृत्वा सर्वाभरणभूषिताः ॥ ३२ ॥**

நவநாகஸஹஸ்ராணி யயுராஸ்த்தாய வாநராஃ ।
மாநுஷம் விக்ரஹம் க்ருத்வா ஸர்வாभரணभூஷிதாஃ ॥

[ப - ரை.] வாநரா:—ஸுக்ரீவபரிவாரங்களான வாநரர்கள், ஸர்வாभரணभூஷிதா: - எல்லா ஆभரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களாய், மாநுஷம் விக்ரஹம் - மநுஷ்யஶரீரத்தை, க்ருத்வா - எடுத்துக்கொண்டு, நவநாகஸஹஸ்ராணி - ஒன்பதினாயிரம் யானைகளை, ஆஸ்த்தாய - அடைந்து, யயு: - சென்றார்கள்.

[வி - ம்.]:—ஸர்வாभரணभூஷிதா:-இங்கு, ஸர்வபதம் ஆத்மாभரணம் தேஹாभரணம் எல்லாவற்றையும் காட்டுகிறது. ஆத்மாभரணமாவது - விநயாதி. தேஹாभரணம் - கடகாதி. மாநுஷம் விக்ரஹம் க்ருத்வா - இவர்கள் காமரூபிகளாகையாலே, மனுஷ்ய தேஹங்களைப் பரிக்ரஹித்தார்கள். भரதயர்கள் வாஹநமேறுவதும் அலங்கரித்துக் கொள்வதும் ப்ரभுசித்தாநுவர்தநத்தாலே என்று அறிய

வும், இங்கு ஒன்பதினாயிரம் யானைகள்மீது என்றதால், ஸுக்ரீவ ஸஹாயரான வானரர்கள் ஒன்பதினாயிரமென்கை ஸூசிதம். அல்லா தார், பதாதிகளாய்ச் சென்றார்கள் ॥ 32 ॥

**शङ्खशब्दप्रणादैश्च दुन्दुभीनां च निस्वनैः ।**
**प्रययौ पुरुषव्याघ्रस्तां पुरीं हर्म्यमालिनीम् ॥ ३३ ॥**

ஶங்க்கஶப்தப்ரணாதைஶ்ச துந்துபீநாம் ச நிஸ்வநை: ।
ப்ரயயௌ புருஷவ்யாக்ரஸ்தாம் புரீம் ஹர்ம்யமாலிநீம் ॥ 33 ॥

[ப - ரை.] புருஷவ்யாக்ர: - புருஷஶ்ரேஷ்டரான பெருமாள், ஶங்க்கஶப்தப்ரணாதைஶ்ச-சங்குகளின் சப்தங்களென்ன ஜநகோஷங் களென்ன இவற்றோடும், துந்துபீநாம் - துந்துபிவாத்யங்களுடைய நிஸ்வநைஶ்ச - ஶப்தங்களினோடும், ஹர்ம்யமாலிநீம் - ப்ராஸாத வரிசைகளையுடைய, தாம் புரீம் - அந்த அயோத்யாபட்டணத்தை, ப்ரயயௌ - சென்றார்.

[வி - ம்.] ஶங்க்கஶப்தப்ரணாதைஶ்ச - ஶங்கஶப்த என்று ஶங் கம் முதலிய மங்களார்த்தங்களான வாத்ய கோஷங்களும் ப்ரணாத என்று பெருமாள் எழுந்தருளும் அழகைக்கண்டு ஹர்ஷம் உள் ளடங்காமையாலே யுண்டான ஜநகோஷங்களும், ச என்று அஸ்த்ராநேபயஶங்காஜநித மங்களாஶாஸந கோஷங்களும் இங்கு விவக்ஷிதங்கள். துந்துபீநாம் ச - இங்கு பஹுவசநமும் சகாரமும் சேர்ந்து தேவதுந்துபிகளின் த்வநிகளையும் காட்டுகிறது. ஹர்ம்ய மாலிநீம் என்றதால், நகரஶோபையும் உப்பரிகைகளின் மீது இருக் கிற நகரஸ்த்ரீகளினுடைய மங்களார்த்தமான லாஜவருஷங்களும் விவக்ஷிதங்கள். ப்ரயயௌ - ப்ரஶப்தம் கமநஶோபையைக் காட்டு கிறது ॥ 33 ॥

**ददृशुस्ते समायान्तं राघवं सपुरस्सरम् ।**
**विराजमानं वपुषा रथेनातिरथं तदा ॥ ३४ ॥**

தத்ருஶுஸ் தே ஸமாயாந்தம் ராகவம் ஸபுரஸ்ஸரம் ।
விராஜமாநம் வபுஷா ரதேநாதிரதம் ததா ॥ 34 ॥

[ப - ரை.] தே - அவர்கள், வபுஷா - திருமேனியாலே, விராஜ மாநம் - பிரகாசித்துக் கொண்டும், ஸபுரஸ்ஸரம் - ஜயகோஷம்

செய்துகொண்டு, முன்போகிறவர்களுடன் கூடிக்கொண்டும், அதி ரதம் - மஹாரதிகரும், ரதேந ஸமாயாந்தம் - தேரோடு எழுந்தருளும வருமான, ராகவம் - பெருமாளை, தத்ருஶு: - கண்டார்கள்.

[வி - ம்.] :— தே என்கிறது, திருவயோத்யையிலே பட்டாபிஷேக நிமித்தம் ஆலோசனை செய்த மந்த்ரி முதலானோர்களைக் காட்டுகிறது. அவர்கள் பெருமாள் திருவீதியிலெழுந்தருளும் அழகைக் கண்டு அநுபவிக்கவேண்டுமென்னும் ஆசையினால் த்வரையுடன் வந்தார்களென்றபடி. விராஜமாநம் வபுஷா - இங்கு ஆபரணங்களைச் சொல்லாமல் வபுஷா என்று சொன்னதால், ஆபரணத்துக்கு அழகு கொடுக்கும் திருமேனியே சேதநர் கண்டு வாழுகைக்குப் போதுமானது என்கை 'அபிமதோருதேஹ:' என்றபடியே திருமேனிதான் தமக்கும் போக்யமாயன்றோ, இருப்பது. 'பக்தாநாம்' என்று ஆஶ்ரிதார்த்தமாகச் சொல்லப்பட்ட அந்தத் திருமேனியை அவன் காட்டாதபோதும் இவன் காணாதபோதும், 'நிந்திதஸ்ஸ வஸேல் லோகே ஸ்வாத்மாஸப்யேநம் விகர்ஹதே' என்கிறபடியே பிறராலே நிந்திக்கப்பட்டும் தன்னைத்தானே நிந்தித்து மன்றோ போருவது. ரதேந ஸமாயாந்தம் தத்ருஶு: - தேரின்மீது எழுந்தருளுவதைக் காண்கையே இவர்களுக்கு முக்யப்ரயோஜநம். முன்பும், 'கஜேந மஹதா யாந்தம்' என்று யானைவாஹநத்தின் மீது எழுந்தருளுவதையே இச்சித்தார்களிறே ‖ 34 ‖

**ते वर्धयित्वा काकुत्स्थं रामेण प्रतिनन्दिताः ।**
**अनुजग्मुर्महात्मानं भ्रातृभिः परिवारितम् ॥ ३५ ॥**

தே வர்த்தயித்வா காகுத்ஸ்த்தம் ராமேண ப்ரதிநந்திதா: ।
அநுஜக்முர் மஹாத்மாநம் ப்ராத்ருபி: பரிவாரிதம் ‖ 35 ‖

[ப - ரை.] தே - அந்த மந்த்ரிகள், காகுத்ஸ்த்தம் - பெருமாளை, வர்த்தயித்வா - மங்களாசாஸநம் பண்ணிவிட்டு, ராமேண - அந்தப் பெருமாளாலே, ப்ரதிநந்திதா: - ஸந்தோஷிக்கப் பெற்றவர்களாய், ப்ராத்ருபி: பரிவாரிதம் - தம்பிகளோடுச் சேர்ந்து சூழப்பெற்றிருக்கிற, மஹாத்மாநம் - நல்ல ஸ்வபாவமுடைய அந்தப் பெருமாளை, அநுஜக்மு: - பின் சென்றார்கள்,

[வி - ம்.] :—காகுத்ஸ்தம்—பரோபகாரகாமான ககுத்ஸ்தவம்ஶத்திலே பிறந்தவர்: இத்தால், பிறப்பிலேற்றம் சொல்லிற்று. வர்த்தயித்வா—காணதபோதிறே ஸ்வப்ரயோஜநார்த்தமாக ப்ரவர்த்திப்பது: கண்டால், அத்தலைக்கு மங்களாஶாஸநம் செய்யுமிறே: 'என்னை வெள்ளுயிராக்கவல்லபையுடைநாகப்பகைக் கொடியானுக்குப் பல்லாண்டு' என்னக்கடவதிறே. ப்ரதிநந்திதா:—இனிய சொற்களாலே ஸ்வாகத பூர்வமாகப் பேசியும் மதுர வீக்ஷணங்களாலே தாபமெல்லாம் ஆறும்படி கடாக்ஷித்தும் பெருமாளால் கொண்டாடப் பட்டார்களென்கை மஹாத்மாநம்—இங்கு, ஸ்வபாவத்தினுடைய சீர்மையும் திருமேனியின் ஸௌபாக்யமும் விவக்ஷிதம்: ஆத்ம ஶப்தம் ஸ்வபாவத்தையும் திருமேனியையும் காட்டக்கடவது. அநுஜக்மு:—மங்களாஶாஸநம் பண்ணிக்கொண்டே பெருமாளை அநுஸரித்தார்களென்கை. ॥ 35 ॥

अमात्यैर्ब्राह्मणैश्चैव तथा प्रकृतिभिर्वृतः ।
श्रिया विरुरुचे रामो नक्षत्रैरिव चन्द्रमाः ॥ ३६ ॥

அமாத்யைர்ப்ராஹ்மணைஶ்சைவ ததா ப்ரக்ருதிபிர்வ்ருத: ।
ஶ்ரியா விருருசே ராமோ நக்ஷத்ரைரிவ சந்த்ரமா: ॥ 36 ॥

[ப - ரை] ராம:—பெருமாள், அமாத்யை: - அந்தரங்க மந்திரிகளாலும், ப்ராஹ்மணைஶ்சைவ - ப்ராஹ்மணர்களாலும், ததா - அப்படியே, ப்ரக்ருதிபி: - ப்ரஜைகளாலும், வ்ருத: - சூழப்பட்டவராய், நக்ஷத்ரை: - நக்ஷத்திரங்களாலே, (வ்ருத:) - (சூழப்பட்டிருக்கிற), சந்த்ரமா இவ - சந்திரன்போல, ஶ்ரியா - காந்தியினால், விருருசே - ப்ரகாஶித்தார்.

[வி - ம்] :—அமாத்யை:—இங்கு அமா ஶப்தம் ஸமீபவாசியாய் அந்தரங்க மந்த்ரிகளைக் காட்டுகிறது. அந்தரங்கதை கைங்கர்யமடியாக வந்ததாகையாலே, கைங்கர்ய நிஷ்டர்களாலே என்றபடி. ப்ராஹ்மணை: - ப்ராஹ்மண ஶப்தம் ப்ருஹ்மஜ்ஞாநிகளைக் காட்டி, ஜ்ஞாந பர்யாயமான வேதநம் ஸகுணப்ருஹ்மத்யாந ரூபமாகையாலே குணநிஷ்டராலே என்றபடி. ஆக, பரமபதத்திற் போல இங்கும் இரண்டுபடியும் உண்டிறே: "பக்தைர் பாகவதைஸ் ஸஹ" என்னக் கடவது. ஶ்ரியா விருருசே - சேர்த்தியழகைக் காட்டுகிறது. ஆக,

5

மந்த்ரி முதலானோர்களாலே சூழப்பட்ட பெருமாள் நக்ஷத்திர பரிவ்ருதனை சந்திரன்போலே சேர்த்தியழகினுல் ப்ரகாசித்தாரென்றதாயிற்று. || 36 ||

स पुरोगामिभिस्तूर्यैस्तालस्वस्तिकपाणिभिः ।
प्रव्याहरद्भिर्मुदितैर्मङ्गलानि ययौ वृतः ॥ ३७ ॥

ஸ புரோகாமிபிஸ்தூர்யைஸ்தாலஸ்வஸ்திகபாணிபிঃ |
ப்ரவ்யாஹரத்பிர் முதிதைர்மங்கலாநி யயௌ வ்ருதঃ || 37 ||

[ப - ரை.] ஸঃ - அந்தப் பெருமாள், புரோகாமிபிঃ - முன்னே செல்லுகிற, தூர்யை: - வாத்யங்களாலும், தால ஸ்வஸ்திக பாணிபிঃ- தாளங்களையும் ஸ்வஸ்திகம் என்கிற வாத்யங்களையும் கைகளால் பற்றிக்கொண்டு வருகிறவர்களாலும், முதிதைঃ - ஸந்துஷ்டர்களாய்க்கொண்டு, மங்களாநி - பெருமாளுடைய மங்களங்களை, ப்ரவ்யாஹரத்பிঃ - வ்யக்தமாகச் சொல்லுகிற ஸ்துதி பாடகர்களாலும், வ்ருதঃ - சூழப்பட்டவராய், யயௌ - சென்றார்.

[வி - ம்] :—தூர்யைঃ - இந்த பதம், லக்ஷணையால் தூர்யம் வாசிப்பவர்களைக் காட்டுகிறது; இல்லாவிடில், அசேதநமான தூர்யங்களுக்கு புரோகாமிபிঃ என்று பெருமாளுக்கு முன்னே செல்லுகை கூடாதிறே. முதிதை: என்று ஸ்துதி பாடகர்களுக்கு விசேஷணம். இத்தால், அவர்கள் மங்களங்களைச் சொல்லுகிறது ஸந்தோஷப்ரயுக்தம். ஜீவிகார்த்த மல்ல என்கை ஸூசிதமாயிற்று. ப்ரவ்யாஹரத்பிঃ-ப்ர என்கிற உபஸர்க்கத்தாலே, அர்த்தமாதுர்ய ஶப்த மாதுர்யங்களால் ஸகல மநுஜ மநோரஞ்ஜகத்வம் காட்டப்படுகிறது. ஆக, பெருமாள் தூர்யாதி முழக்கங்களோடும் ஸ்துதி பாடகர்களுடைய மங்கள கீதங்களோடும் கூடினவராய் எழுந்தருளினர் என்றபடி. || 37 ||

अक्षतं जातरूपं च गावः कन्यास्तथा द्विजाः ।
नरा मोदकहस्ताश्च रामस्य पुरतो ययुः ॥ ३८ ॥

அக்ஷதம் ஜாதரூபம் ச காவঃ கந்யாஸ்ததாத்விஜாঃ |
நரா மோதகஹஸ்தாஶ்ச ராமஸ்ய புரதோ யயுঃ || 38 ||

[ப - ரை] ஜாதரூபம் - மஞ்சளால் உண்டாகிய வர்ணவிசே ஷத்தையுடைய, அக்ஷதம் - சோபநாக்ஷதைகளின் ஸமூஹமும், காவ: - பசுக்களும், கந்யா: - கன்னிகைகளும், த்விஜா: - பிராமணர் களும், மோதகஹஸ்தாச்ச - பக்ஷ்யங்களைக் கைகளில் தரிக்குமவ ரான, நரா: - மனிதர்களும், ராமஸ்ய - பெருமாளுடைய, புரத: - முன்னே, யயு: - சென்றார்கள்.

[வி - ம்] :—இதில், மங்களோபகரணங்களைக் கைகளில் ஏந்திக் கொண்டு பெருமாள் முன்னே சென்றவர்களைச் சொல்லுகிறது. அக்ஷதம் - இது ஜாத்யேகவசநம். ஆகவே, ஸமூஹத்தைக் காட்டு கிறது. சோபநாக்ஷதை முன்னே செல்லுகையாவது, அதை வஹித் துக் கொண்டு சிலர் முன்னே சென்றார்களென்கை. கந்யா: - 'அஷ்ட வர்ஷா பவேத் கந்யா' என்கிற சாஸ்த்ரத்தின்படியே இருக்குமவர்கள். இச்லோகத்தில் சொல்லியிருக்கிற கன்னிகைகளும் ப்ராஹ் மணர்களும் பக்ஷ்யத்தைக் கையிற் கொண்ட மனிதர்களும், பெருமாள் முன்னே த்ருஷ்டி தோஷ பரிஹாரார்த்தமாகச் சென்றார்களென்ற படி. || 38 ||

सख्यं च रामस्सुग्रीवे प्रभावं चानिलात्मजे ।
वानराणां च तत्कर्म राक्षसानां च तद्बलम् ॥ ३९ ॥
विभीषणस्य संयोगमाचचक्षे च मन्त्रिणाम् ।
श्रुत्वा तु विस्मयं जग्मुरयोध्यापुरवासिनः ॥ ४० ॥

ஸக்யம் ச ராமஸ்ஸுக்ரீவே ப்ரபாவம் சாநிலாத்மஜே ।
வாநராணும் ச தத்கர்ம ராக்ஷஸாநாம் ச தத் பலம் || 39 ||
விபீஷணஸ்ய ஸம்யோகமாசசக்ஷே ச மந்த்ரிணும் ।
ச்ருத்வாது விஸ்மயம் ஜக்மு ரயோத்யாபுரவாஸிந: || 40 ||

[ப - ரை.] ராம: - பெருமாள், மந்த்ரிணும் - மந்த்ரிகளுக்கு, ஸுக்ரீவே - மஹாராஜரிடத்தில், ஸக்யம் ச - ஸ்நேஹத்தையும், அநி லாத்மஜே - வாயுபுத்ரனை ஹநுமானிடத்திலே, ப்ரபாவம் ச - மாஹாத்ம்யத்தையும், வாநராணும் - (அங்கதாதி) வாநரர்களுடைய, தத் கர்ம ச - அந்த ப்ரஸித்தமான க்ருத்யத்தையும், ராக்ஷஸாநாம் - ராவணுதிகளுடைய, தத் பலம் ச - அப்படிப்பட்ட பலத்தையும், விபீ

ஷணஸ்ய - ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய, ஸம்யோகம் ச - சேர்த்தியையும், ஆசசக்ஷே - சொன்னார். அயோத்யாபுரவாஸிநः - திருவயோத்யையில் உள்ளவர்கள், ஶ்ருத்வா - (இவற்றைக்) கேட்டு, விஸ்மயம் - ஆச்சர்யத்தை, ஜக்முः - அடைந்தார்கள்.

[வி - ம்] இங்கு, ஸக்யம் ச - என்று ஆரம்பித்து ஆசசக்ஷே என்கிறவரையில் ஒரு வாக்யார்த்தம்; மேலே ஶ்ருத்வா என்று ஆரம்பித்து அயோத்யாபுரவாஸிநः என்கிறவரையில் மற்றொரு வாக்யார்த்தம். மந்த்ரிணாம் என்பது மந்த்ரிப்ய: என்றபடி; மந்த்ரிகளின் பொருட்டு என்று அர்த்தம். ஸுக்ரீவே ஸக்யம் - அதாவது, 'ஏகம் து:கம் ஸுகம் ச நௌ' என்கிறபடியே ஸுகது:கங்களை ஸமமாக அநுபவிக்கையாகிற ஸ்நேஹத்தைச் சொல்லுகிறது. அநிலாத்மஜே ப்ரபாவம் - ஸமுத்ரதரணம், லங்காப்ரவேஶம், ராத்ரியில் அந்வேஷணம், ஜாநகீதர்ஶநம், அஶோகவநிகாபஞ்ஜநம், ராக்ஷஸ ஸைந்யநிரஸநம் இவற்றாலுண்டான ஹநுமானுடைய மாஹாத்ம்யத்தை என்றபடி. வாநராணாம் ச தத்கர்ம - அங்கதாதிகளின் ஸாஹஸக்ருத்யத்தை என்றர்த்தம். அதாவது ராக்ஷஸர்களால் நிறைந்த ஸ்தாநத்துக்குச் சென்று ராவணனுடன் தனியாக மிகவும் தீரமாய்ப் பேசுகை முதலான க்ருத்யங்களை என்றபடி. கர்ம என்கிறது - ஜாத்யேகவசநம். வாநராணாம் என்ற பஹுவசநத்தால் நீலன் முதலானோர்களுடைய ஸாஹஸக்ருத்யமும் சொல்லப்படுகிறன. அவையாவன - யுத்தாரம்பத்தில் யுத்தகளத்தில் வந்த ராவணன் மீது ஏறித் தலைகளிலும் தோள்களிலுமிருந்துகொண்டு பரிபவிப்பித்தமை முதலானவை. ராக்ஷஸாநாம் ச தத் பலம் - 'பலம்' என்கிறது தேஹபலத்தையும் ஸைந்யத்தையும் காட்டுகிறது. இவ்விரண்டும் மிகுந்திருப்பவர்களிறே ராக்ஷஸர்கள். விபீஷணஸ்ய ஸம்யோகம், இதை நடுவிற்சொல்லவேண்டியிருக்க, முடிவிற் சொன்னது, ராக்ஷஸ வதத்துக்குக் காரணம் ஸஹாயபூதனான விபீஷணன் சேர்க்கை என்கைக்காக. ஶ்ருத்வா து-துகாரத்தால் கேட்ட மாத்திரத்திலே திருவயோத்யையிலுள்ளார்க்கு இவ்வளவு வேறுபாடுண்டானால், நேராகப் பார்த்திருந்தால் இவர்கள் என் படுவார்களோ என்கை ஸூசிதம். அயோத்யாபுரவாஸிநः - பெருமாள் சொன்னது மந்த்ரிகளுக்காகிலும், கேட்டு ஆநந்திப்பது எல்லார்க்கும் உண்டு. ‖ 39-40 ‖

द्युतिमानेतदाख्याय रामो वानरसंवृतः ।
हृष्टपुष्टजनाकीर्णामयोध्यां प्रविवेश ह ॥ ४१ ॥

த்யுதிமாநேததாக்யாய ராமோ வாநரஸம்வ்ருதஃ ।
ஹ்ருஷ்டபுஷ்டஜநாகீர்ணமயோத்யாம் ப்ரவிவேஶ ஹ ॥ 41 ॥

[ப - ரை] த்யுதிமாந் - காந்தியையுடையவராய், வாநர ஸம்வ்ருத: - வாநரர்களால் சூழப்பட்டிருக்கிற, ராமஃ - பெருமாள், ஏதத் ஆக்யாய - இந்த எல்லா வ்ருத்தாந்தங்களேயுஞ் சொல்லி, ஹ்ருஷ்ட புஷ்ட ஜநாகீர்ணம் - ஸந்துஷ்டர்களும் தேஹபௌஷ்கல்யத்தை யுடையவர்களுமான ஜநங்களாலே நிறைந்திருக்கிற, அயோத்யாம் - திருவயோத்யையை, ப்ரவிவேஶ - ப்ரவேஶித்தார். ஹ - ஆச்சர்யம்.

[வி - ம்] :—வாநரஸம்வ்ருதஃ-ஸம், இத்தால் கீழ்க் கிஷ்கிந்தா ப்ரவேஶம் தொடங்கி இவ்வளவுகாலம் வாநரர்களுடன் பெருமாளிருக்கச் செய் தேயும் பெருமாளுக்கு அச்சேர்த்தி ஆநந்தாவஹமாயிற்றில்லே ; அயோத்யா வாஸிஜநங்களுடன் சேர்ந்த பிறகுதான் அந்த வாநரங்களுடன் சேர்த்தி இவர்க்கு ஆநந்தாவஹமாய்த் தலைக்கட்டிற்று என்பது காட்டப்பட்டது. ஆகையாலிறே, த்யுதிமாந் என்று பெருமாளே மஹர்ஷி வர்ணித்தது. ஹ்ருஷ்டபுஷ்டஜநாகீர்ணம் இங்கு 'அபிவ்ருக்ஷாஃ பரிம்லாநாஃ' என்று, பெருமாளுடைய விஶ்லேஷத்திலே அசேதநமான மரங்களு முட்பட வாடிக்கிடந்தன. அவை, பெருமாளுடைய ஸம்ஶ்லேஷம் பெற்றபோது 'அகாலபலிநோ வ்ருக்ஷாஃ' என்கிறபடியே அகாலத்திலும் பலித்து பௌஷ்கல்யத்தை அடைந்தன வென்ருல், சேதநர்களான ஜநங்களுக்கு ராமஸம்ஶ்லேஷத்தில் ஆநந்தம் விளையச் சொல்லவேணுமோ? ஹ என்று மஹர்ஷி, பெருமாள் அயோத்யையிலிருந்து வநத்துக்குப் புறப்பட்டபோது இருந்த நிலைமையையும் அயோத்யையில் ப்ரவேஶிக்கும் இப்போது இருக்கும் நிலைமையையும் கண்டு ஆச்சர்யப்படுகிருர். இஶ்லோகத்தில் பெருமாளுடைய அயோத்யாப்ரவேஶம் சொல்லப்பட்டது. ॥ 41 ॥

ततो ह्यभ्युच्छ्रयन् पौराः पताकास्ते गृहे गृहे ।
ऐक्ष्वाकाध्युषितं रम्यमाससाद पितुर्गृहम् ॥ ४२ ॥

ததோஹ்யப் யுச்ச்ரயந் பௌராः பதாகாஸ்தே க்ருஹேக்ருஹே।
ஐக்ஷ்வாகாத்யுஷிதம் ரம்யமாஸஸாத பிதுர்க்ருஹம். ॥ 42. ॥

[ப-ரை] ததः - பிறகு, தே பௌராः - அந்தப்பட்டணத்து ஜநங்கள், க்ருஹே க்ருஹே - வீடுகள் தோறும், பதாகாः - பெருங்கொடிகளை, அப்யுச்ச்ரயந் - உயரத்தூக்கிக் கட்டினார்கள். (ராமः) - (பெருமாள்), ஐக்ஷ்வாக அத்யுஷிதம் - இக்ஷ்வாகுவம்ஶத்தாரால் வாஸஞ்செய்யப்பட்ட, ரம்யம் - ரமணீயமான, பிதுः க்ருஹம் - பிதாவான சக்ரவர்த்தியினுடைய வீட்டை, ஆஸஸாத - அடைந்தார்.

[வி-ம்] :—பதாகாः அப்யுச்ச்ரயந் - இது அநுவாதம். பெருமாள் திருவயோத்தியில் ப்ரவேஶிப்பதற்கு முன்னமே பட்டணத்து ஜநங்கள் தங்கள் தங்கள் க்ருஹங்களில் ஸந்தோஷாதிஶயத்தாலே செய்த அலங்காரங்களை மஹர்ஷி இப்போது வர்ணிக்கிறார். அன்றிக்கே, பௌர ஜநங்கள் பெருமாளுடைய வரவைக்கேட்டு ஆநந்த பரவஶர்களாய் மெய்ம்மறந்து நந்திக்ராமத்துக்கு வந்தபடியாலும் பெருமாளை க்ஷணங்கூடப் பிரிந்திருப்பது அஸஹ்ய மாகையாலும் பெருமாள் திருவயோத்யையில் ப்ரவேஶித்தபிறகுதான் அவருடன் கூடவந்த பௌர ஜநங்கள் தங்கள் க்ருஹங்களை அலங்கரித்தார்கள் என்றும் சொல்லுவர்கள். இங்கு, அபி என்கிற உபஸர்க்கத்தாலே, ராஜாஜ்ஞையினலன்றிக்கே ஸ்வயம் ப்ரயோஜநமாகப் பக்தியினால் செய்தமை ஸூசிதம். ரம்யம் பிதுः க்ருஹம் ஆஸஸாத - இதனால், முன்பு பிதா வஸித்திருந்த திருமாளிகையே பெருமாள் திருவுள்ளத்துக்கு ப்ரீதி விஷயமாயிருந்தது ; ஆகவே, அதை அடைந்தார் என்கை சொல்லப்பட்டது. முன் 'நஷ்டசந்த்ரமிவாம்பரம்' என்று சந்திரனில்லாத ஆகாயம் போல இருந்த க்ருஹம் இப்போது ராமசந்த்ர ப்ரவேஶத்தாலே 'ஶரச்சந்த்ரயுதம் நபः' என்கிறபடியே ஶரத்காலத்துச் சந்திரனோடு கூடிய ஆகாயம் போலே ப்ரகாஶிக்கத் தொடங்கிற்று. ॥ 42 ॥

अथाब्रवीद्राजसुतो भरतं धर्मिणां वरम् ।
अर्थोपहितया वाचा मधुरं रघुनन्दनः ॥ ४३ ॥

पितुर्भवनमासाद्य प्रविश्य च महात्मनः ।
कौसल्यां च सुमित्रां च कैकेयीं चाभिवाद्य च ॥ ४४ ॥

**यच्च मद्भवनं श्रेष्ठं साशोकवनिकं महत् ।**
**मुक्तावैडूर्यसंकीर्णं सुग्रीवाय निवेदय ॥ ४५ ॥**

அதாப்ரவீத் ராஜஸூதம் பரதம் தர்மிணும் வரம் ।
அர்த்தோபஹிதயா வாசா மதுரம் ரகுநந்தந: ॥ 43 ॥
பிதுர்ப்பவநமாஸாத்ய ப்ரவிஸ்ய ச மஹாத்மந: ।
கௌஸல்யாம் ச ஸூமித்ராம் ச கைகேயீம் சாபிவாத்ய ச ॥
யச்ச மத்பவநம் ஸ்ரேஷ்ட்டம் ஸாஸோகவநிகம் மஹத் ।
முக்தாவைடூர்ய ஸங்கீர்ணம் ஸூக்ரீவாய நிவேதய ॥ 45 ॥

[ப - ரை] அத - *பிறகு*, ராஜஸூத: - *சக்ரவர்த்தித் திருமகனுரான*, ரகுநந்தந: - *பெருமாள்*, பித்ரு: - *தகப்பனுருடைய*, பவநம் - *வீட்டை*, ஆஸாத்ய - *அடைந்து*, ப்ரவிஸ்யச - *உள்ளே புகுந்ததும்*, கௌஸல்யாம் - *ஸ்ரீகௌஸல்யையையும்*, ஸூமித்ராம் ச - *ஸூமித்ரையையும்*, கைகேயீம் ச - *கைகேயியையும்*, அபிவாத்ய - *தண்டன் ஸமர்ப்பித்து*, தர்மிணும் - *தர்மாத்மாக்களுக்கெல்லாம்*, வரம் - *ஸ்ரேஷ்ட்டரான்*, பரதம் - *பரதாழ்வானைக்குறித்து*, அர்த்தோபஹிதயா - *அர்த்தத்தோடு கூடியதான*, வாசா - *வார்த்தையினாலே*, மதுரம் (யதாததா) - *மதுரமாய்* (இருக்கும்படி), அப்ரவீத் - *சொன்னார்:* முக்தாவைடூர்யஸங்கீர்ணம் - *முத்துக்கள் வைடூர்யங்கள் என்ற இவற்றால் வ்யாப்தமாயுள்ளதும்*, ஸ்ரேஷ்ட்டம் - *சிறந்ததும்*, ஸாஸோகவநிகம் - *உத்யானத்தோடு கூடியதுமான*, யச்ச - *யாதொரு*, மத் பவநம் - *என்னுடைய க்ருஹமுண்டோ*, (தத்) - (*அதை*), ஸூக்ரீவாய - *ஸூக்ரீவ மஹாராஜாவின் பொருட்டு*, நிவேதய - (*வஸிக்கும் படி*) *காட்டிக்கொடு*. ॥ 43-45 ॥

[வி - ம்.]:—*இங்கு ஸ்லோகத்ரயம் ஏகான்வயம்*. ராஜஸூத: ரகுநந்தந: *என்று பெருமாளுக்கு இரண்டு விஸேஷணங்கள் சொல்லுகையால் ராஜாவான தஸரதனுக்கு மாத்திரமன்றிக்கே பெருமாள் ரகு குலத்தார்க்கெல்லாம் ஆநந்தகராய் இருந்தார் என்கை வ்யஞ்ஜிதம். அதாவது, அக்குலத்திலே வந்தவ்தரித்துத் தன் ஸம்பந்தத்தாலே அக்குலத்தை உஜ்ஜீவிப்பித்தாரென்கை*. 'கைகேயீம் 'ச.' *என்கிற விடத்தில், ச காரம் துக்ாரார்த்தகமாய் அவளுக்கு வைலக்ஷண்யத்தைக் காட்டுகிறது. எங்ஙனே என்னில், வாத்வய வ்யாஜமாகப் பெருமாளை*

வநத்துக்கு எழுந்தருளச் செய்யவே, அதனடியாக லோகோபகாரமான ராவணவதம் நேர்ந்தபடியால், அதனாலுண்டான பெருமாளுடைய கீர்த்திக்குக் காரணம் கைகேயியே யாகையால் இவளுக்கு வைலக்ஷண்யமுண்டே. ஸுக்ரீவனுக்குத் தன் திருமாளிகையை விடுதியாகக் கொடுப்பதற்காகவே முன் தான் சக்ரவர்த்தியின் திருமாளிகையை யடைந்தாரென்பதும் காட்டப்பட்டது என்று சிலர் அபிப்ராயம். ॥ 43, 44, 45 ॥

**तस्य तद्वचनं श्रुत्वा भरतस्सत्यविक्रमः ।**
**पाणौ गृहीत्वा सुग्रीवं प्रविवेश तमालयम् ॥ ४६ ॥**

தஸ்ய தத்வசநம் ஶ்ருத்வா பரதஸ் ஸத்யவிக்ரம: ।
பாணௌ க்ருஹீத்வா ஸுக்ரீவம் ப்ரவிவேஶ தமாலயம் ॥ 46 ॥

[ப - ரை.] ஸத்ய விக்ரம: - ஸத்யமான பராக்ரமத்தையுடைய, பரத: - பரதாழ்வான், தஸ்ய - அந்தப் பெருமாளுடைய, தத் வசநம் - அந்த வார்த்தையை, ஶ்ருத்வா - கேட்டு, ஸுக்ரீவம் - மஹாராஜரை, பாணௌ - கையில், க்ருஹீத்வா - க்ரஹித்துக்கொண்டு, தம் ஆலயம் - அந்தப் பெருமாள் திருமாளிகையை, ப்ரவிவேஶ - ப்ரவேஶித்தார்.

[வி - ம்.] :—ஸத்யவிக்ரம: - இங்குப் பதினான்கு வருஷங்களில் திருவயோத்யையில் ப்ரவேஶியாமலிருந்தமையைப் பெற்ற பரதாழ்வானுக்கு இவ்விஶேஷணமிட்டார் மஹர்ஷி. 'க்ரமு பாதவிக்ஷேபே' என்கிறபடி திருவயோத்திக்குப் போவதாக ஓரடியும் வைத்ததில்லையென்கை. தஸ்ய தத் வசநம் - இங்கு தத் என்று வசநத்துக்கு விஶேஷணம். இத்தால், வசனத்தில் ஓர் வைலக்ஷண்யம் காட்டப்பட்டது. அதாவது ஸ்வாஶ்ரிதரான மஹாராஜரைப் போகவிட்டுத் தம்மாளிகையைப் புகுதமாக்குகையாகிற அர்த்தத்தை ஸூசிப்பிக்கை. இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம், ஸ்ரீபாத்ம புராணத்தில் 'ஸ்வம் ஶ்ரீமத் பவநம் ராஜா பக்தபாதாப்ஜரேணுபி:' என்கிற ஶ்லோகம். ஸுக்ரீவம் பாணௌ க்ருஹீத்வா-இது ஸ்நேஹத்தின் கார்யம். ப்ராத்ருமித்ரன், தனக்கும் மித்ரனிறே. ஆகவே, கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பெருமாள் திருமாளிகையை ப்ரவேஶித்தார். ॥ 46 ॥

**ततस्तैलप्रदीपांश्च पर्यङ्कास्तरणानि च ।**
**गृहीत्वा विविशुः क्षिप्रं शत्रुघ्नेन प्रचोदिताः ॥ ४७ ॥**

ததஸ்தைலப்ரதீபாம்ஸ்ச பர்யங்காஸ்தரணானி ச ।
க்ருஹீத்வா விவிஶு: க்ஷிப்ரம் ஶத்ருக்னேந ப்ரசோதிதா:॥ 47॥

[ப - ரை.] தத: - பிறகு, (க்ருஹபாலகா:) - (மாளிகையைக் காக்குமவர்கள்), ஶத்ருக்னேந - ஶத்ருக்நாழ்வானாலே, ப்ரசோதிதா: - தூண்டப்பட்டவர்களாய், தைலப்ரதீபாந் ச - எண்ணெய்விளக்குகளையும், பர்யங்க ஆஸ்தரணானி ச-கட்டில்கள் அவற்றின்மேல் விரிப்புக்கள் இவற்றையும், க்ருஹீத்வா - எடுத்துக்கொண்டு, க்ஷிப்ரம் - ஶீக்ரமாக, விவிஶு: - ப்ரவேஶித்தார்கள்.

[வி - ம்]:—இந்த ஶ்லோகந்தன்னிலே உபகரணங்களைக் கொண்டுபோனார்களென்பது சொல்லப்படுகிறது. ஶத்ருக்னேந ப்ரசோதிதாः - ஶத்ருக்நாழ்வான் பரதாழ்வானுக்குப் பரதந்த்ரராகையால், அவருக்குப் பெருமாளிட்ட நியமநம் இவருக்கும் ஸித்தம் என்கை ஸூசிதமாயிற்று. தைலப்ரதீபாம்ஸ்ச - இங்கு, சகாரத்தால் ராஜார்ஹமான வேறு தீபங்களும் கொண்டுவரப்பட்டன என்கை; தைலதீபம் மங்களார்த்தமாக என்றறியவும். ॥ 47 ॥

उवाच च महातेजास्सुग्रीवं राघवानुजः ।
अभिषेकाय रामस्य दूतानाज्ञापय प्रभो ॥ ४८ ॥

உவாச ச மஹாதேஜாஸ் ஸுக்ரீவம் ராகவாநுஜ: ।
அபிஷேகாய ராமஸ்ய தூதாநாஜ்ஞாபய ப்ரபோ ॥ 48 ॥

[ப - ரை] மஹாதேஜாः - அதிக தேஜஸ்ஸையுடைய, ராகவ அநுஜः - பெருமாளுடைய திருத்தம்பியாரான பரதாழ்வான், ஸுக்ரீவம்-மஹாராஜரைக் குறித்து, உவாச - சொன்னார்: ப்ரபோ - ப்ரபுவானவரே! ராமஸ்ய - ராமனுடைய, அபிஷேகாய - திருவபிஷேகத்திற்காக, தூதாந் - தேவரீருடைய வேலைக்காரர்களை, ஆஜ்ஞாபய - ஆஜ்ஞாபிக்க வேண்டும்.

[வி - ம்]:—மஹாதேஜாः - இது பரதாழ்வானுக்கு விஶேஷணம். பெருமாள் திருவயோத்யைக்கு எழுந்தருளின பின்பு பரதாழ்வானுடைய வடிவில் பிறந்த தேஜோவிஶேஷத்தைக் காட்டுகிறது. ராகவத்வம் பெருமாளுக்கு உஜ்ஜ்வலமானாற்போல். அநுஜத்வம் பரதாழ்வானுக்கு உஜ்ஜ்வலதரமாகையாலே, 'ராகவாநுஜः' என்கிற பதம் இங்கு பரதாழ்வானைக் காட்டுகிறது. மற்ற தம்பிகளைக் காட்டா

தொழிவதற்குக் காரணம், பெருமாள் 'ந ஸர்வே ப்ராதரஸ்தாத பவந்தி பரதோபமா:' என்று தம்பி பரதனுக்கு ஒப்பான ப்ராதாக்களுண்டோ என்றாரிறே; ஆகையாலே, அநுஜத்வம் பரதனிடத்திலே ஊன்றிக் கிடக்கும். சகாரம் உக்த ஸமுச்சாயகமாய் ஸுக்ரீவனோடு கூட ப்ரவேஶத்தையும் காட்டுகிறது. ப்ரபோ—'ஸுக்ரீவம் நாத மிச்சதி' என்கிற படியே பெருமாளுக்கு நாதனைபோதே எங்கள் எல்லோருக்கும் நாதனிறே நீர். ஆகவே ப்ரபோ என்று பொதுவாகப் பேசுகிறார். இப்படி வாழப் பெற்றது மஹாராஜ ஸஹாயத்தாலல்லவோ. தூதாந்ஆஜ்ஞாபய - திருவபிஷேகத்துக்குரிய தீர்த்தங்களைக் கொண்டுவரும்படி தூதர்களை நியமிக்கவேணுமென்றபடி. ||48||

**सौवर्णान् वानरेन्द्राणां चतुर्णां चतुरो घटान् ।**
**ददौ क्षिप्रं स सुग्रीवस्सर्वरत्नविभूषितान् ॥ ४९ ॥**

ஸௌவர்ணாந் வாநரேந்த்ராணாம் சதுர்ணாம் சதுரோ கடாந் ।
ததௌ க்ஷிப்ரம் ஸ ஸுக்ரீவஸ் ஸர்வரத்நவிபூஷிதாந் ॥ 49 ॥

[ப - ரை] ஸ: ஸுக்ரீவ: - அந்த மஹாராஜர், ஸௌவர்ணாந்-பொன்மயமாயும், ஸர்வரத்ந விபூஷிதாந் - எல்லா ரத்நங்களாலும் அலங்க்ருதமாயுமுள்ள, சதுர: கடாந் - நான்கு குடங்களை, சதுர்ணாம் வாநரேந்த்ராணாம் - ஸுஷேணன், ருஷபன், கவயன், நளன் என்கிற நான்கு வாநர ஶ்ரேஷ்டர்களுக்கு, க்ஷிப்ரம் - ஶீக்ரமாக, ததௌ - கொடுத்தார்.

[வி - ம்]:—ஸ: என்று மஹாராஜருக்கு விஶேஷண மிட்டதற்குக் கருத்து - எப்போதும் இவர் பெருமாளுடைய அபிப்ராயத்திலேயே ஊன்றியிருக்குமவ ரென்பது. ஆனால், பரதாழ்வான் சொல்லுவதற்கு முன்னமே தீர்த்தங்களைக் கொண்டுவரும்படி வாநரர்களைத் தூண்டாமலிருந்தது ஏனெனில், 'க்ரியதா மிதி மாம் வத' என்கிறபடியே செய் என்று ஒருவன்சொல்லத் தான் செய்யவேணும் என்கிற கருத்தால் என்றறியவும். க்ஷிப்ரம் ததௌ - இத்தால், முன்னமே தீர்த்தங்கொண்டுவரும் கைங்கர்யத்தில் மஹாராஜருக்கு எண்ணமிருந்தமை தோற்றுகிறது ॥ 49 ॥

**यथा प्रत्यूषसमये चतुर्णां सागराम्भसाम् ।**
**पूर्णैर्घटैः प्रतीक्षध्वं तथा कुरुत वानराः ॥ ५० ॥**

யதா ப்ரத்யூஷஸமயே சதுர்ணாம் ஸாகராம்ஹஸாம் ।
பூர்ணைர்கடை: ப்ரதீக்ஷத்த்வம் ததா குருத வாநரா: ॥ 50 ॥

[ப - ரை] வாநரா: - வாநரர்களே! சதுர்ணும் ஸாகராம்ஹஸாம் - நான்கு ஸமுத்ர ஜலங்களாலும், பூர்ணை: - நிறைக்கப்பட்டிருக்கிற, கடை: - குடங்களோடு, (உபலக்ஷிதா:) - கூடினவர்களாய்க் கொண்டு, ப்ரத்யூஷஸமயே - நாளை யுதய காலத்திலே, யதா - எப்படி, (அஸ்மாந்) - (நம்மை), ப்ரதீக்ஷத்த்வம் - எதிர்பார்ப்பீர்களோ, ததா - அப்படி, குருத - பண்ணுங்கள்.

[வி - ம்]:—ஸாகராம்ஹஸாம்-இங்கு ஸம்பந்த ஸாமாந்ய ஷஷ்டியாகையாலே த்ருதீயார்த்தமான கரணத்வத்தைக் காட்டுகிறது. அதாவது - ஸமுத்ர ஜலங்களாலே என்றபடி. ஆக, ஸமுத்ர ஜல பூரித கும்பங்களோடுகூட நாளை உதய காலத்தில் நீங்கள் என்னை எதிர்பார்க்க வேணுமேயன்றிப் பட்டாபிஷேகஸமயத்தில் ஸமுத்ர ஜலங்களுக்காக நான் உங்களை எதிர்பார்க்க வொண்ணுது என்று மஹாராஜா வாநரஸ்ரேஷ்டர்களான ஸுஷேண-கவய-ருஷப-நளர்களுக்கு ஆஜ்ஞாபித்தாரென்றபடி. இது, நதீஜலங்களைக்கொண்டு வருவதற்கு ஜாம்பவான், ஹநுமான், வேகதர்ஶி, ருஷபன் ஆகிய வேறு வாநர முதலிகளை ஆஜ்ஞாபித்தற்கும் உபலக்ஷகம். ஸுக்ரீவாஜ்ஞையன்றோ இது. இதைத் தவற வொண்ணுமோ? ॥ 50 ॥

**एवमुक्ता महात्मानो वानरा वारणोपमाः ।**
**उत्पेतुर्गगनं शीघ्रं गरुडा इव शीघ्रगाः ॥ ५१ ॥**

ஏவமுக்தா மஹாத்மாநோ வாநரா வாரணோபமா: ।
உத்பேதுர்ககநம் ஶீக்ரம் கருடா இவ ஶீக்ரகா: ॥ 51 ॥

[ப - ரை] மஹாத்மாந:—நல்ல ஸ்வபாவத்தை யுடையவர்களான, வாரணோபமா: - யானைபோன்ற, வாநரா: - ஸுஷேண-ருஷப-கவய-நளர்கள், ஏவம் உக்தா: - கீழ்ச்சொல்லியபடி ஆஜ்ஞாபிக்கப்பட்டவர்களாய், ஶீக்ரகா: - ஶீக்ரமாகச் செல்லத்தகுந்த, கருடா இவ - கருடர்கள் போல, ஶீக்ரம் - ஶீக்ரமாக, ககநம் - ஆகாயத்தைக்குறித்து, உத்பேது: - கிளம்பினுர்கள்.

[வி - ம்]:—மஹாத்மாந:—விநயம், ப்ரபுசித்தாநுவர்த்தநம், ப்ரபுவுக்கு அதிஶயத்தைத்தேடுகை முதலான நல்ல ஸ்வபாவங்களை யுடை

யவர்கள் என்று தாத்பர்யம். வாரணோபமா: - வர்ணத்திலும் பரிமாணத்திலும் யானைகளை இவர்களுக்குத் த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறது. ஶீக்ரகா: கருடா இவ - இத்தால், பகவானுக்கு வாஹநமாக இன்னும் சில கருடர்கள் உண்டாகும் பக்ஷத்தில் அந்த கருடர்கள் இந்த வாநரர்களுக்கு ஒப்பாவார்களென்கை ஸூசிதமாயிற்று. ஆக, அதிவேகவான்களான கீழ்ச்சொல்லப்பட்ட வாநரர்கள் நதீ ஸமுத்ர ஜலாஹரணார்த்தமாக ஆகாஶத்திலே கிளம்பினார்களென்றதாயிற்று॥ 51 ॥

**जाम्बवांश्च हनूमांश्च वेगदर्शी च वानरः ।**
**ऋषभश्चैव कलशाञ्जलपूर्णानथानयन् ॥**
**नदीशतानां पञ्चानां जलं कुम्भेषु चाहरन् ॥ ५२॥ ॥**

ஜாம்பவாம்ஶ்ச ஹநூமாம்ஶ்ச வேகதர்ஶீ ச வாநர: ।
ருஷபஶ்சைவ கலஶாஞ்ஜலபூர்ணாநதாநயந் ॥
நதீஶதாநாம் பஞ்சாநாம் ஜலம் கும்பேஷு சாஹரந் ॥ 52½ ॥

[ப - ரை] அத—ஸுக்ரீவன் ஆஜ்ஞாபித்த பிறகு, ஜாம்பவாந்ச - ஸ்ரீஜாம்பவானும், ஹநுமாந் ச - ஹநுமானும், வேகதர்ஶீ ச - வேகதர்ஶி என்பவரும், ருஷப:-ருஷபன் என்கிற, வாநர: ச - வாநரனும், ஜலபூர்ணாந் - ஜலங்களால் நிறைந்த, கலஶாந் - குடங்களை, ஆநயந் - கொண்டுவந்தார்கள். பஞ்சாநாம் நதீஶதாநாம் - ஐந்நூறு நதிகளின், ஜலம் - தீர்த்தத்தை, கும்பேஷு - (ஸ்வர்ணமயமான) குடங்களில், ஆஹரந் - கொண்டு வந்தார்கள்.

[வி - ம்] :—இதில், நதீஜலாஹரணம் சொல்லப்படுகின்றது. ஜாம்பவாம்ஶ்ச இத்யாதி பதங்களிலே ப்ரத்யேகம் இருக்கின்ற சகாரங்கள் ப்ரஸித்யர்த்தகங்கள். ஆகவே, மிகவும் ப்ரஸித்தமாயுள்ள ஜாம்பவான் முதலானோர் என்று அர்த்தம். இங்ஙனம் கொள்ளாமல், ஸமுச்சயார்த்தமாகக் கொள்ளில், ஒரு சகாரமே அமையுமிறே. இந்த ஶ்லோகத்திலே சொல்லப்பட்ட ருஷபன் ஸமுத்ர ஜலாஹரணத்திற்குச் சென்ற ருஷபனில் வேறு. இங்குச் சொல்லப்பட்ட நதீ ஜலாஹரணம் நான்கு முக்ய நதிகளிலிருந்து கொண்டு வந்ததைக் காட்டுகிறது. இத்தால் நதீஶதாநாம் என்று சொல்லப்படுகிற ஐந்நூறு நதீ தீர்த்தா ஹரணமானது வேறு வாநரர்களால்

செய்யப்பட்டது என்கை ஸூசிதமாயிற்று. அன்றிக்கே, ஜாம்பவான் முதலான நால்வரே ஐந்நூறு நதிகளிலிருந்து தீர்த்தம் கொண்டு வந்தார்கள் என்றும் சொல்லுவர்கள். || 52½ ||

पूर्वात्समुद्रात्कलशं जलपूर्णमथानयत् ।
सुषेणस्सत्त्वसंपन्नस्सर्वरत्नविभूषितम् ॥ ५३॥ ॥
ऋषभो दक्षिणात्तूर्णं समुद्राज्जलमाहरत् ॥ ५४ ॥
रक्तचन्दनशाखाभिस्संवृतं काञ्चनं घटम् ।
गवयः पश्चिमात्तोयमाजहार महार्णवात् ॥ ५५ ॥
रत्नकुम्भेन महता शीतं मारुतविक्रमः ।
उत्तराच्च जलं शीघ्रं गरुडानिलविक्रमः ॥
आजहार स धर्मात्मा नलस्सर्वगुणान्वितः ॥ ५६॥ ॥
ततस्तैर्वानरश्रेष्ठैरानीतं प्रेक्ष्य तज्जलम् ।
अभिषेकाय रामस्य शत्रुघ्नस्सचिवैस्सह ॥
पुरोहिताय श्रेष्ठाय सुहृद्भ्यश्च न्यवेदयत् ॥ ५८ ॥

பூர்வாத் ஸமுத்ராத் கலஶம் ஜலபூர்ணமதாநயத் ।
ஸுஷேணஸ்ஸத்வஸம்பந்நஸ்ஸர்வரத்நவிபூஷிதம் || 53½ ||
ருஷபோ தக்ஷிணாத்தூர்ணம் ஸமுத்ராஜ்ஜலமாஹரத் || 54 ||
ரக்தசந்தநஶாகாபிஸ்ஸம்வ்ருதம் காஞ்சநம் கடம் ।
கவயঃ பஶ்சிமாத் தோயமாஜஹார மஹார்ணவாத் || 55 ||
ரத்நகும்பேந மஹதா ஶீதம் மாருதவிக்ரமঃ ।
உத்தராச்ச ஜலம் ஶீக்ரம் கருடாநிலவிக்ரமঃ ||
ஆஜஹார ஸ தர்மாத்மா நலஸ்ஸர்வகுணாந்விதঃ || 56½ ||
ததஸ்தைர் வாநரஶ்ரேஷ்டைராநீதம் ப்ரேக்ஷ்ய தஜ்ஜலம் ।
அபிஷேகாய ராமஸ்ய ஶத்ருக்நஸ் ஸசிவைஸ்ஸஹ ||
புரோஹிதாய ஶ்ரேஷ்டாய ஸுஹ்ருத்ப்யஶ்ச ந்யவேதயத்58

[ப - ரை.] அத - பிறகு, ஸத்வஸம்பந்நঃ - பலத்தோடு கூடிய, ஸுஷேணঃ - ஸுஷேணன், பூர்வாத் ஸமுத்ராத் - கிழக்கு ஸமுத்ரத்திலிருந்து, ஸர்வரத்நவிபூஷிதம் - வைடூர்யாதி ஸர்வ ரத்நங்களாலே அலங்க்ருதமான, கலஶம்-குடத்தை, ஜலபூர்ணம்-ஜலத்தினாலே நிறைந்

திருக்கும்படி, ஆநயத்-கொண்டு வந்தான். ருஷப:-ருஷபன், தக்ஷிணாத் ஸமுத்ராத்-தென்கடலிலிருந்து, தூர்ணம் - ஸீக்ரமாக, ஜலம்-ஜலத்தை, ஆஹரத்-கொண்டுவந்தான். கவய: - கவயன், பஸ்சிமாத் - மேற்குத் திக்கிலுள்ள, மஹார்ணவாத்-பெரிய ஸமுத்திரத்திலிருந்து, தோயம் - ஜலத்தை யுடையதாயும், ரக்த சந்தநஸாகாபி: ஸம்வ்ருதம் - சிவந்த சந்தநக் கிளைகளாலே மறைக்கப்பட்டதுமான, காஞ்சநம் கடம் - ஸ்வர்ண கும்பத்தை, ஆஹரத் - கொண்டுவந்தான். ஸர்வ குணாந்வித: - விநயாதியான எல்லாக் குணங்களாலும் கூடியவனும், மாருத விக்ரம: - காற்றைப்போன்ற ஸஞ்சாரத்தை யுடையவனும், கருட ஆநில விக்ரம:-கருடன் அநுமான் இவர்களோடொத்த பராக்ரமத்தை யுடையவனும், தர்மாத்மா - தார்மிகமான ஸ்வபாவத்தை யுடையவனுமான, நல: - நளன், மஹதா - பெரியதான, ரத்ந கும்பேந - ரத்ந மயமான கும்பத்தினால், ஸீதம் ஜலம் - குளிர்ந்த தீர்த்தத்தை, உத்தராத்ச-வடக்கு ஸமுத்திரத்திலிருந்தும், ஸீக்ரம்-ஸீக்ரமாக, ஆஜஹார - கொண்டுவந்தான். தத: - பிறகு, தை: - அந்த வாநர முதலிகளாலே, ஆநீதம் - கொண்டுவரப்பட்ட, தத் - அந்த, ஜலம் - தீர்த்தத்தை, ஸத்ருக்ந: - ஸத்ருக்நாழ்வான், ராமஸ்ய-பெருமாளுக்கு, அபிஷேகாய - திருவபிஷேகத்துக்காக, ஸ்ரேஷ்டாய - ஸ்ரேஷ்டரான, புரோஹிதாய - வஸிஷ்டருக்கும், ஸுஹ்ருத்ப்ய: ச - ஸ்நேஹிதர்களுக்கும், ஸசிவை: ஸஹ - மந்த்ரிகளுடன்கூட, ந்யவேதயத் - தெரிவித்தார்.

[வி - ம்]:—பூர்வாத் ஸமுத்ராத் என்று தொடங்கி ஸுஹ்ருத்ப்யஸ்ச ந்யவேதயத் என்னுமளவும் ஸுஷேணன் முதலிய வாநர முதலிகள் கிழக்கு ஸமுத்ரம் முதலான நான்கு ஸமுத்திரங்களிலிருந்து தீர்த்தங்கொண்டுவந்ததையும் ஸத்ருக்நாழ்வான் அதை வஸிஷ்ட்டாதிகளுக்குத் தெரிவித்ததையும் சொல்லுகிறது.

கவய: பஸ்சிமாத் தோயம் இத்யாதி—கவயன் மேற்கு ஸமுத்ரத்திலிருந்து சந்தநக்கிளைகளால் மறைத்துத் தீர்த்த கும்பத்தை கொண்டுவந்ததனால், மேற்குக் கடலோரத்திலே சந்தந மரங்கள் மிகுதியாயுள்ளன வென்பதும் அவைகளின் ஸம்பந்தத்தால் தீர்த்தத்தின் பரிமளமும், இவன் மேற்குக் கடலை யடைந்ததின் உண்மையும்

ஸூசிதமாயின. மாருதவிக்ரம:—‘க்ரமு பாதவிக்ஷேபே’ என்று கமநத்தைச் சொல்லிக் காற்றோடொத்த கதி விசேஷத்தை யுடையவன் நளன் என்பதைக்காட்டுகிறது. கருடாநிலவிக்ரம: - இங்கு ஆநிலபதம் அநில புத்ரனை ஹநுமானைக் காட்டுகிறது. ஶ்ரேஷ்ட்டாய புரோஹிதாய - இங்கு ஶ்ரைஷ்ட்யாவது ஶுபகார்ய கரணத்தில் ஸாமர்த்யம். ‘புர: ஹிதம் பஶ்யதீதி புரோஹித:’ என்கிறபடி இக்குடிக்கு முன்னேடி ஹிதம் பண்ணுமவரென்பது. ஆக, நதீ ஸமுத்ர தீர்த்தங்கள் வந்தவுடன் ஶத்ருக்நாழ்வான் வஸிஷ்டருக்கும் மித்ரர்களுக்கும் கீழ்ச் செய்ததையும் இனிச் செய்யவேண்டுமவற்றையும் தெரிவித்தார் என்றதாயிற்று ॥ 53-58 ॥

ततस्स प्रयतो वृद्धो वसिष्ठो ब्राह्मणैस्सह ।
रामं रत्नमये पीठे सहसीतं न्यवेशयत् ॥ ५९ ॥

ததஸ்ஸ ப்ரயதோ வ்ருத்தோ வஸிஷ்டோ ப்ராஹ்மணைஸ்ஸஹ ।
ராமம் ரத்நமயே பீடே ஸஹஸீதம் ந்யவேஶயத் ॥ 59 ॥

[ப - ரை] தத:-நதீ ஸமுத்ர ஜலாஹரணாநந்தரம், ப்ரயத:-சிறந்த யத்நத்தோடு கூடிய, வ்ருத்த: - வ்ருத்தராயிருக்கிற, வஸிஷ்ட: - ஸ்ரீவஸிஷ்ட பகவான், ப்ராஹ்மணை: ஸஹ-(வாமதேவாதி) பிராமணர்களுடன், ரத்நமயே - ரத்நப்ரசுரமான, பீடே - ஸிம்ஹாஸநத்தில், ராமம் - ராமனை, ஸஹஸீதம் - ஸீதையோடுகூட இருக்கும்படி, ந்யவேஶயத் - வீற்றிருக்கச்செய்தார்.

[வி - ம்]:—ப்ரயத: என்று ப்ரக்ருஷ்டயத்நத்தை யுடையவர் என்பதாய், பூர்வம் பட்டாபிஷேக ப்ரயத்நாபேக்ஷயா விலக்ஷண ப்ரயத்நமுடையவரென்றபடி. இத்தால், இப்போது பட்டாபிஷேகத்திலே நிர்விக்நமாக ஸித்தியுண்டு என்கை. வ்ருத்த: - இங்கு த்ரிவித வார்த்தக்யம் விவக்ஷிதம்: வயஸ்ஸினாலும் ஜ்ஞாநத்தாலும் அநுஷ்ட்டாநத்தாலும் வ்ருத்தர் என்றபடி. வயோவார்த்தக்யம் முன்னோர்களுடைய வழக்கத்தை யறிவதற்கும், ஜ்ஞாநவார்த்தக்யம் ஶாஸ்த்ர க்ரமத்தை அறிவதற்கும், அநுஷ்ட்டாந வார்த்தக்யம் அநுஷ்ட்டாநத்திலே வழுவுதல் வாராமைக்கும் ப்ரயோஜகமாகையாலே இம்மூன்றும் இங்கே இருந்தமையால், கார்யஸித்தியின் நிஶ்சயம் ஸூசிதமாயிற்று, ஸஹஸீதம் - ‘இருவருமான சேர்த்தியிலே

அடிமைசெய்கை முறை' என்கிறபடியே ஸரதாதிகளுடைய கைங்கர்யத்துக்கு உறுப்பாக வஸிஷ்ட பகவான் பிராட்டியுடன் ஸிம்ஹாஸநத்திலே பெருமாளை எழுந்தருளப் பண்ணினரென்கை சொல்லப்பட்டது. ரத்நமயேபீடே-முன்னமே ரத்நப்ரசுரமான சிங்காஸநத்திலே ராமனுகிற நீலரத்னத்தையும் பிராட்டியாகிற மாணிக்கத்தையும் வஸிஷ்ட்ட பகவான் நாயகரத்நங்களாக இழைத்தார்போலும் ||59||

**वसिष्ठो वामदेवश्च जाबालिरथ काश्यपः ।**
**कात्यायनस्सुयज्ञश्च गौतमो विजयस्तथा ॥ ६० ॥**
**अभ्यषिञ्चन्नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।**
**सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ॥ ६१ ॥**

வஸிஷ்டோ வாமதேவஸ்ச ஜாபாலிரத காஸ்யப: ।
காத்யாநஸ்ஸுயஜ்ஞஸ்ச கௌதமோ விஜயஸ்ததா ॥ 60 ॥
அப்யஷிஞ்சந்நரவ்யாக்ரம் ப்ரஸந்நேந ஸுகந்திநா ।
ஸலிலேந ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா ॥ 61 ॥

[ப-ரை] அத - பிறகு, வஸிஷ்ட: - வஸிஷ்டர், வாமதேவ: - வாமதேவர், ஜாபாலி: - ஜாபாலி, காஸ்யப: - காஸ்யபர், காத்யாயந: - காத்யாயநர், ஸுயஜ்ஞ: - ஸுயஜ்ஞர், கௌதம: - கௌதமர், விஜய: - விஜயர் (இவர்கள்,) ப்ரஸந்நேந - நிர்மலமாய், ஸுகந்திநா - பரிமளத்தையுடைய, ஸலிலேந - ஜலத்திலுலே, வஸவ: - அஷ்டவஸுக்கள், ஸஹஸ்ராக்ஷம் - ஆயிரங் கண்களையுடைய, வாஸவம் யதா - இந்திரனை எப்படி அபிஷேகம் செய்வார்களோ (அப்படியே), நரவ்யாக்ரம் - புருஷஸ்ரேஷ்டரான பெருமாளை, அப்யஷிஞ்சந் - அபிஷேகம் பண்ணினர்கள்.

[வி-ம்.]:—ஏகாந்வயமான இந்த இரண்டு ஸ்லோகங்களால், வஸிஷ்டாதிகள் பெருமாளைத் திவ்ய தீர்த்தங்களினுல் அபிஷேகம் பண்ணினர்களென்பது சொல்லப்படுகிறது. ப்ரஸந்நேந என்ற இத்தால், ஸ்வதஸ்ஸுத்தி, மந்த்ரஸுத்தி இவ்விரண்டும் விவக்ஷிதம். ஸுகந்திநா என்று இத்கரணம் இருப்பதனுல் பரிமளத்ரவ்யங்களின் சேர்க்கையாலன்றிக்கே ஸ்வதஸ்ஸித்தமான பரிமளம் ஸூசிதமாயிற்று. ஜலத்துக்கு ஸ்வதஸ்ஸித்தமாக கந்தம் உண்டோவெனில், பஞ்சீகரணத்தால் ஜலத்திலும் ஸம்ஸாகம் உண்டு ;

ஆகவே, கந்தமும் ஸ்வதஸ்ஸித்தம் என்றபடி. ஸஹஸ்ராக்ஷம் என்று த்ருஷ்டாந்தஸூசிதனை இந்த்ரனுக்கு ஆயிரங் கண்களையு டைத்தானமையைக் காட்டினபடியால், தார்ஷ்டாந்திகமான பெருமா ளிடத்திலும் திருமேனியில் பூணப்பட்டிருக்கும் கவசத்திலுள்ள ஆயிரம் ரத்நங்களாலே யுண்டான ப்ரகாஶம் ஸூசிதமாயிற்று. ராவணனை ஜயித்தவராய் நிரதிஶயப்ரகாஶமுடைய பெருமாளுக்கு ராவணபராஜிதனாய் ஸாதிஶயப்ரகாஶமுடைய இந்திரனை உபமாந மாகச் சொல்லலாமோ வென்னில்? கண்ணெச்சில்வாராமைக்காகக் கரி பூசுகிறார் மஹர்ஷி. அதாவது - த்ருஷ்டிதோஷபரிஹாரார்த்தம் தாழ்ந்தாரை உபமாநமாகச் சொல்லுகிறாரென்றபடி. || 61 ||

ऋत्विग्भिर्ब्राह्मणैः पूर्वं कन्याभिर्मन्त्रिभिस्तथा ।
योधैश्चैवाभ्यषिञ्चंस्ते संप्रहृष्टास्सनैगमैः ॥ ६२ ॥

ருத்விக்பிர்ப்ராஹ்மணை: பூர்வம் கந்யாபிர்மந்த்ரிபிஸ்ததா ।
யோதைஶ்சைவாப்யஷிஞ்சந்ஸ்தே ஸம்ப்ரஹ்ருஷ்டாஸ்ஸநை-
கமை: || 62 ||

[ப - ரை.] தே - அந்த வஸிஷ்டாதிகள், ஸம்ப்ரஹ்ருஷ்டா:- மிகவும் ஸந்துஷ்டர்களாய்க் கொண்டு, பூர்வம் - முன்னே, ருத்விக்பி:- யாகத்தில் ருத்விக்குக்களாயிருக்கிற, ப்ராஹ்மணை: - பிராமணர் களாலும், ததா-அப்படியே, கந்யாபி:-ஷோடஶகன்னிகைகளாலும், மந்த்ரிபி: - மந்த்ரிகளாலும், ஸநைகமை: - வணிக்குகளுடன் கூடின, யோதைஶ்ச - ஸேனைத்தலைவர்களாலும், அப்யஷிஞ்சந் - திருவபி ஷேகம் பண்ணினார்கள்.

[வி - ம்]:—கீழ் ஶ்லோகத்தில் வஸிஷ்டாதிகள் தாமே அபி ஷேகம் பண்ணினமை சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில், ருத்விக்குகள் முதலானோர்களைக்கொண்டு அபிஷேகஞ் செய்தமை சொல்லப்படுகிறது. பூர்வம் என்றது, கந்யாதிகளுக்கு முன் னமே என்றபடி. இங்கு ப்ராஹ்மணஶ்சைவ மந்த்ரிபி: என்ற இரண்டாலும் கீழே சொன்ன வாமதேவாதிகளிலும் வேறுபட்ட வர்கள் சொல்லப்படுகிறார்கள். ஸம்ப்ரஹ்ருஷ்டா: என்பது வஸிஷ் டாதிகளுக்கு விஶேஷணம். ஹர்ஷம் பெருமாள் திருவயோத் யைக்கு எழுந்தருளியதால் உண்டானது. ப்ரஹர்ஷம், திருவபிஷே

காங்கீகாரத்தைப்பற்ற உண்டானது. ஸம்ப்ரஹர்ஷமாவது - அபிஷேக ஸமயத்தில் சீரிய சிங்காஸநத்திலே வீற்றிருக்கும் போக்யதையையும் அபிஷேகஜலத்தால் நனைந்த திருமேனியின் ஸௌந்தர்யத்தையும் அநுபவிப்பதைப்பற்ற உண்டானது. || 62 ||

सर्वौषधिरसैर्दिव्यैर्दैवतैर्नभसि स्थितैः ।
चतुर्भिर्लोकपालैश्च सर्वैर्देवैश्च सङ्गतैः ॥ ६३ ॥

ஸர்வௌஷதிரஸைர்திவ்யைர்தைவதைர்நபஸி ஸ்திதை: ।
சதுர்பிர்லோகபாலைஸ்ச ஸர்வைர்தேவைஸ்ச ஸங்கதை: ||63||

[ப - ரை] (தே) - (அந்த வஸிஷ்டாதிகள்), நபஸி - ஆகாயத்தில், ஸ்திதை: - இருந்துள்ள, திவ்யை: - ஸ்வர்க்கவாஸிகளான, தைவதை: - தேவதைகளோடும், ஸர்வை: தேவை: - மற்றும் பூமி முதலானவற்றிலிருக்கும் தேவர்களோடும், ஸங்கதை: - சேர்ந்திருக்கும்படியான, சதுர்பி: - நான்கு, லோகபாலைஸ்ச - லோகபாலர்களாலும், ஸர்வௌஷதிரஸை: - ஸமஸ்தமான ஓஷதி ஜலங்களைக் கொண்டு, (அப்யஷிஞ்சந்) - (அபிஷேகம் பண்ணினார்கள்).

[வி - ம்.]:—இந்த ஸ்லோகத்தில், வஸிஷ்டாதிகள் இந்திரன் முதலான ஸ்வர்க்கவாஸிகளான தேவதைகளையும் பூம்யந்தரிக்ஷாதிகளிலுள்ள தேவதைகளையும் நான்கு லோகபாலர்களையும் முன் கொண்டு திவ்யௌஷதிரஸங்களாலே அபிஷேகம் பண்ணினார்களென்கிறார். அன்றிக்கே, இந்த்ராதி தேவதைகள் பெருமானுடைய கைங்கர்யார்த்தமாக வந்து வஸிஷ்டாதிகளைப் புருஷகாரமாகக்கொண்டு அபிஷேகம் பண்ணினார்களென்னவுமாம். || 63 ||

छत्रं तु तस्य जग्राह शत्रुघ्नः पाण्डुरं शुभम् ।
श्वेतं च वालव्यजनं सुग्रीवो वानरेश्वरः ॥
अपरं चन्द्रसङ्काशं राक्षसेन्द्रो विभीषणः ॥ ६४½ ॥

சத்ரம்து தஸ்ய ஜக்ராஹ ஶத்ருக்ந: பாண்டரம் ஶுபம் ।
ஶ்வேதஞ்ச வாலவ்யஜநம் ஸுக்ரீவோ வாநரேஶ்வர: ।
அபரஞ்சந்த்ரஸங்காஶம் ராக்ஷஸேந்த்ரோ விபீஷண: || 64½ ||

[ப - ரை.] ஶத்ருக்ந: - ஶத்ருக்நாழ்வான், பாண்டரம் - வெளுப்பும், ஶுபம் - மங்களகரமுமான, சத்ரம் து - குடையையே, ஜக்

ராஹ - பிடித்தார்; வாநரேஶ்வரঃ - வாநராதிபதியான, ஸுக்ரீவঃ - மஹாராஜர், ஶ்வேதம் - வெளுப்பான, வாலவ்யஜநம் - சாமரத்தை, ஜக்ராஹ - க்ரஹித்தார்; ராக்ஷஸேந்த்ரঃ - ராக்ஷஸராஜாவான, விபீஷணঃ - விபீஷணாழ்வான், சந்த்ரஸங்காஶம் - சந்த்ரனோடு ஸமாநமான, அபரம் - மற்றொரு, வாலவ்யஜநம் - சாமரத்தை, ஜக்ராஹ - க்ரஹித்தார்.

[வி - ம்.]:—பாண்டுரம் - இதனால், வெளுப்போடு பெருமையும் காட்டப்படுகிறது. ஶுஹம் - மநு முதலானோர்கள் தங்கள் பட்டாபிஷேக ஸமயங்களில் குடையை வஹித்திருந்து சிறப்புடன் வாழ்ந்திருந்தமையால், சத்ரம் ஶுஹகரம் என்றபடி. சத்ரம் து என்ற இடத்தில் து ஏவகாரார்த்தகமாய்க் குடையையே என்றபடி. இத்தால், நகரப்ரவேஶ ஸமயத்திலே எந்த சத்ரகைங்கர்யத்தைச் ஶத்ருக்நாழ்வான் செய்தாரோ, அதையே அபிஷேக ஸமயத்திலும் பண்ணினாரென்கை. ஶ்வேதம்....வாநரேஶ்வரঃ—மஹாராஜர் இப்போது பட்டாபிஷேக ஸமயத்தில் சாமரகைங்கர்யத்தைச் செய்தார் என்பதாலும், முன் நகரப்ரவேஶகாலத்திலே இவர் கைங்கர்யஞ் சொல்லப்படாமையாலும் அப்போது பெருமாளுக்கு ஸார்வபௌமத்வம் இல்லாமையால் ஸாமந்த ராஜாவான தம்முடைய கைங்கர்யத்தைப் பெருமாள் அங்கீகரிக்கமாட்டாரென்கிற மஹாராஜருடைய தாத்பர்யம் வ்யஞ்ஜிதமாயிற்று. ஆனால், ஸ்ரீ விபீஷணாழ்வானுடைய கைங்கர்யம் நகரப்ரவேஶ ஸமயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸாமந்தராஜாவான இவ்விபீஷணனுக்கு அது கூடுமோவென்னில், மஹாராஜரைப்போல் ராஜ்யப்ராப்தி பலமல்லாமல் ராமாநுவ்ருத்தியே இவருக்குப் பலமாகையால் எப்போதும் கைங்கர்யஞ் செய்கை கூடுமென்பர். ‖ $64\frac{1}{2}$ ‖

मालां ज्वलन्तीं वपुषा काञ्चनीं शतपुष्कराम् ।
राघवाय ददौ वायुर्वासवेन प्रचोदितः ॥ ६५ ॥
सर्वरत्नसमायुक्तं मणिरत्नविभूषितम् ।
मुक्ताहारं नरेन्द्राय ददौ शक्रप्रचोदितः ॥
प्रजगुर्देवगन्धर्वा ननृतुश्चाप्सरोगणाः ॥ ६७ ॥

மாலாம் ஜ்வலந்தீம் வபுஷா காஞ்சநீம் ஶதபுஷ்கராம் ।
ராகவாய ததௌ வாயுர்வாஸவேந ப்ரசோதித: ॥
ஸர்வரத்நஸமாயுக்தம் மணிரத்நவிபூஷிதம் ।
முக்தாஹாரம் நரேந்த்ராய ததௌ ஶக்ரப்ரசோதித: ॥
ப்ரஜகுர்தேவகந்தர்வா நந்ருதுஶ்சாப்ஸரோகணா: ॥ 67 ॥

[ப - ரை.] வாஸவேந - இந்திரனாலே, ப்ரசோதித: - ஆஜ்ஞாபிக்கப்பட்ட, வாயு: - வாயு பகவான், வபுஷா - உருவத்தாலே, ஜ்வலந்தீம் - ப்ரகாஶிக்கிற, காஞ்சநீம் - ஸ்வர்ணமயமான, ஶதபுஷ்கராம் - நூறு தாமரைப்பூக்களையுடைய, மாலாம் - மாலையை, ததௌ - கொடுத்தார்; ஸர்வரத்ந ஸமாயுக்தம் - எல்லா ரத்நங்களோடுகூடி, மணிரத்ந விபூஷிதம் - ஶ்ரேஷ்டமான மணிகளால் அலங்கரிக்கப்பட்ட, முக்தாஹாரம் - முத்துமாலையை, ஶக்ர ப்ரசோதித: - இந்திரனாலே தூண்டப்பட்டவரான (வாயுபகவான்), நரேந்த்ராய - மனுஷ்ய ஶ்ரேஷ்டரான பெருமாளுக்கு, ததௌ - கொடுத்தார்; தேவகந்தர்வா: - தேவகந்தர்வர்கள், ப்ரஜகு: - பாடினார்கள்; அப்ஸரோகணா: - அப்ஸரஸ்ஸுக்களின் கூட்டங்கள், நந்ருது: - நர்த்தநம் பண்ணினார்கள்.

[வி - ம்.]:— மாலாம் ஜ்வலந்தீம் வபுஷா—இங்கு, மாலையானது தன் உருவத்தாலேயே ப்ரகாஶிக்கிறது என்றும் அன்றிக்கே மாலாதாரியின் ஶரீரத்தாலே ப்ரகாசிக்கிறதென்றும் இரண்டுவிதமுண்டு. ஆனால், இங்கு இப்போது இந்த மாலை பெருமாள் திருமேனியுடன் சேர்ந்ததால் மிகவும் ப்ரகாஶிக்கிறது என்று மஹர்ஷியின் தாத்பர்யம் கொள்ளவேணும். இந்திரன் மாலையையும், முக்தாஹாரத்தையும் பெருமாளுக்கு வாயுவைக்கொண்டு ஸமர்ப்பித்தது, ஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்கு உரியதேயல்லது, ஸ்வாஹிமதமான ராவணவதமாகிற உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக வன்று. அதற்கு ப்ரத்யுபகாரமுண்டோ? ஸ்வரூப லாபத்திற்காகவே ஸமர்ப்பித்தானென்றபடி. கிருஷ்ணவதாரத்திலும் "எந்தம்பிரானா ரெழில் திருமார்பற்குச், சந்தமழகிய தாமரைத் தாளர்க்கு, இந்திரன் தானு மெழிலுடைக் கிங்கிணி, தந்துவனாய் நின்றான் தாலேலோ தாமரைக்கண்ணனே தாலேலோ" என்று இந்திரன் ஸ்ரீக்ருஷ்ணபகவானுக்கு அரைச்சதங்கை ஸமர்ப்பித்த

தாகப் பெரியாழ்வார் அருளிச்செய்தாரிறே. மணிரத்நவிபூஷிதம் - முக்தாஹாரத்திற்கு நாயக ரத்நத்தாலே யன்றோ ப்ரகாஶம். அதையே இங்கு மணிரத்நம் என்று சொல்லுகிறது. ப்ரஜதுர்தேவ கந்தர்வாஃ - தேவகந்தர்வர்கள் என்றும், மநுஷ்ய கந்தர்வர்கள் என்றும் இரண்டு வகையுண்டு. அதில் இங்குத் தேவகந்தர்வர்களைக் காட்டுகின்றது. அவர்கள் வாசா கைங்கர்யம் பண்ணினார்களென்ற படி. தூர்யாதிவாத்யங்களும் மநுஷ்யகாநாதிகளும் இங்குச் சொல்லப்படவில்லையேயென்னில், அவையுண்டாயிருந்தாலும் அப்ரதாநங்களாய்த் தேவகந்த்தர்வ காநங்களே ப்ரதாநமாயிருப்பதால் அவைகள் சொல்லப்படவில்லை. இதனால், தேவோத்ஸவாதிகளிலே மநுஷ்ய காநத்தைவிட தேவகாநமான ப்ரபந்தாநுஸந்தானமே முக்யம் என்கிற அர்த்தம் வ்யஞ்ஜிதமாயிற்று. ஆக, இந்த ஶ்லோகத்தினால் இந்திரன் மாலையையும் முக்தாஹாரத்தையும் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தபடியும், தேவகந்தர்வாதிகள் வாசா கைங்கர்யம் செய்த படியும் சொல்லப்பட்டன. ॥ 67 ॥

अभिषेके तदर्हस्य तदा रामस्य धीमतः ।
भूमिस्सस्यवती चैव फलवन्तश्च पादपाः ॥
गन्धवन्ति च पुष्पाणि बभूवू राघवोत्सवे ॥ ६८ ॥ ॥

அபிஷேகே தத்ர்ஹஸ்ய ததா ராமஸ்ய தீமதஃ ।
பூமிஸ்ஸஸ்யவதீ சைவ பலவந்தஶ்ச பாதபாஃ ॥
கந்த்தவந்தி ச புஷ்பாணி பபூவூ ராகவோத்ஸவே ॥ 68½ ॥

[ப - ரை.] தத்ர்ஹஸ்ய - அந்தப் பட்டாபிஷேகத்துக்குரியரும், தீமதஃ - ரக்ஷணசிந்தையை வஹித்தவருமான, ராமஸ்ய - பெருமாளுடைய, அபிஷேகே - பட்டாபிஷேகத்திலே, பூமிஃ - பூமியானது, ஸஸ்யவதீ - பயிர்களையுடையதாயிற்று, பாதபாஃ - மரங்கள், பலவந்தஶ்ச - பழங்களையுடையவையாயின, ராகவோத்ஸவே - பெருமாளுடைய பட்டாபிஷேகோத்ஸவத்தில், புஷ்பாணி - புஷ்பங்கள், கந்தவந்தி - பரிமளாதிக்யத்தையுடையவைகளாக, பபூவுஃ - ஆய் விட்டன.

[வி - ம்.] :—தத்ர்ஹஸ்ய - அந்தப் பட்டாபிஷேக மங்களத்துக்குப் பெருமாளே அர்ஹர். ஆகவே, அதற்கு பரதாதிகள்

இசையவில்லை யென்றபடி. தீமத: - 'த்யை சிந்தாயாம்' என்று சிந்தையைக்காட்டுகையாலே ரக்ஷணசிந்தையை யுடையவரென்றபடி. பெருமாளுடைய திருவபிஷேக மங்கள மஹோத்ஸவத்திலே பூம்யாதிகள் அதிஶய விஶேஷங்களை அடைந்ததனால் அசேதநங்களுக்கும் பெருமாளுக்கு அதிஶயத்தைப் பண்ணுகையிலே ஊக்கம் ஏற்பட்டிருந்தமை சொல்லப்பட்டது. முன்பு பட்டாபிஷேகத்தைக் கருதினபோதே 'அகாமயத மேதிநீ' என்று பெருமாளை ஹர்த்தாவாகப் பூமிதேவி விரும்பியதென்றால், இப்பொழுது அது இவ்வதிஶயத்தை வஹிக்கச்சொல்லவேணுமோ? ப்லவந்தஶ்ச பாதபா: - ராமவிஶ்லேஷத்தில் 'அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:' என்று வாடிக்கிடந்த மரங்கள் பெருமாளுடைய சேர்க்கையையும் பெற்று அதிசயத்தையும் கண்டால் இவ்வாறு களிக்கச்சொல்ல வேண்டாவிறே. 'நாவிஷ்ணு: ப்ரதிவீபதி:' என்கிறபடியே விஷ்ணுவின் அம்ஶபூதனை ரகுமஹாராஜனுடைய பட்டாபிஷேகத்திலே "பஞ்சாநாமபி பூதாநாம் உத்கர்ஷம் புபுஷுர்குணா:" என்று ஐந்து பூதங்களுடையவும் குணங்கள் அதிஶயத்தை வஹித்ததேயானால், ஸாக்ஷாத் பகவானே ராமனாக வந்து அவதரித்து ராஜ்ய பரிபாலநத்துக்கு ஒருப்பட்டவளவில் அந்தப் பூதங்கள் இவ்வாறு பாரிக்கச்சொல்லவேண்டுமோ? ஆக, ஸ்ரீராமபட்டாபிஷேகத்தில் சேதநாசேதநங்கள் எல்லாவற்றுக்கும் ஏற்பட்ட அதிஶயம் சொல்லப்பட்டது. ॥ $68\frac{1}{2}$ ॥

सहस्रशतमश्वानां धेनूनां च गवां तथा ।
ददौ शतं वृषान् पूर्वं द्विजेभ्यो मनुजर्षभः ॥ ६९ ॥ ॥
त्रिंशत्कोटीर्हिरण्यस्य ब्राह्मणेभ्यो ददौ पुनः ।
नानाभरणवस्त्राणि महार्हाणि च राघवः ॥ ७० ॥ ॥

ஸஹஸ்ரஶதமஶ்வாநாம் தேநூநாம் ச கவாம் ததா ।
ததௌ ஶதம் வ்ருஷாந் பூர்வம் த்விஜேப்யோ மநுஜர்ஷப: ॥ $69\frac{1}{2}$ ॥
த்ரிம்ஶத்கோடீர்ஹிரண்யஸ்ய ப்ராஹ்மணேப்யோ ததௌ புந: ।
நாநாபரணவஸ்த்ராணி மஹார்ஹாணி ச ராகவ: ॥ $70\frac{1}{2}$ ॥

[ப - ரை.] மநுஜர்ஷப: - மநுஷ்யஶ்ரேஷ்டரான, ராகவ: - பெருமாள், அஶ்வாநாம் - குதிரைகளுடைய, ஸஹஸ்ரஶதம் -

லக்ஷத்தையும், தேநூநாம் - கன்றுகளோடுகூடிய பசுக்களுடைய வும், கவாம் - கன்றுகளில்லாத பசுக்களுடையவும், ததா - அப்படி, ஸஹஸ்ரமுதம் - லக்ஷத்தையும், முதம் - நூறு, வ்ருஷாந் - ருஷபங் களையும், த்விஜேப்ய: - பிராமணர்களின்பொருட்டு, ததௌ - கொடுத்தார். புந: - மீளவும், ப்ராஹ்மணேப்ய: - பிராமணர்களின் பொருட்டு, ஹிரண்யஸ்ய - ஸ்வர்ணத்தினுடைய, த்ரிம்முத்கோடீ: - முப்பதுகோடிகளையும், மஹார்ஹாணி - மஹான்களுக்குத் தகுந்த தான, நாநாபரணவஸ்த்ராணி ச - நாநாவித ஆபரணங்களையும் வஸ்தி ரங்களையும், ததௌ - கொடுத்தார்.

[வி - ம்.]:—இவ்விரண்டு ம்லோகங்களும் ஏகாந்வயங்கள். இவற்றில் பட்டாபிஷேககாலத்திலே பிராமணர்களுக்குப் பெரு மாள் தானமாகக் கொடுத்தவைகள் சொல்லப்படுகின்றன. ருஷி, தானஸமயத்தில் ராகவ: என்றதினால், ரகுகுலத்தார் ப்ராண ஹிம்ஸை பண்ணினவர்களுக்கும் ப்ராணன்களைக்கொடுத்து ரக்ஷிப் பவர்கள்; அக்குலத்தில் பிறந்தவராகையாலே இவர்க்கும் தானம் பண்ணுகை ஜந்மஸித்தம் என்கை ஸூசிதமாயிற்று. தேநூ நாம் என்று கன்றுகளையுடைய பசுக்களைத் தானமாகத் தந்தரு ளியதால், தத்கால க்ஷீரப்ரயோஜநமும், கவாம் என்று கன்று போடப்போகிற பசுக்களைக் கொடுப்பதாலும் ருஷபங் களைக் கொடுப்பதாலும் மேல்காலத்தில் க்ஷீரப்ரயோஜநமும் க்ருஷி யினால் தாந்யாதி லாபமும் பிராமணர்களுக்கு உண்டாகக்கடவன என்கிற பெருமாளுடைய தாத்பர்யம் ஸூசிதமாயிற்று. பூர்வம் - ஸுக்ரீவாதிகளுக்கு பஹுமானஞ் செய்வதற்கு முன்னமே கொடுத் தாரென்கை. அன்றிக்கே, ஹிரண்யதானாதிகளுக்கு முன்னே என் னவுமாம். ப்ராஹ்மணேப்ய: - ப்ரஹ்ம வித்துக்களுக்கு என்று அர்த் தமாய், ப்ரஹ்மஜ்ஞாநிகளுக்கு என்றபடி. நாநாபரணவஸ்த்ராணி - பலவகை ஆபரணங்களையும் வஸ்த்ரங்களையும் அவர்களுக்குப் பெரு மாள் ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொடுத்தாலும், 'உடுத்துக்களைந்த' இத்யாதிப்படியே இவற்றை பகவத்ப்ரஸாதமாகவன்றே அவர்கள் ஸ்வீகரிப்பது. இவ்வர்த்தத்துக்கு, ஒரு ஸூசகம் உண்டு. அதா வது - மஹார்ஹாணி என்கிறவிடத்தில் மஹத்பதம் பெருமாளையிறே புஷ்கலமாகக் காட்டுவது. ஆகவே, அவர்தமக்கு அர்ஹமானவை

களைக் கொடுத்தார் என்றால், இவர்கள் அவற்றை ப்ரஸாதமாகவன்றோ பற்றுவது. ‖ 70½ ‖

**अर्करश्मिप्रतीकाशां काञ्चनीं मणिविग्रहाम् ।**
**सुग्रीवाय स्रजं दिव्यां प्रायच्छन्मनुजर्षभः ॥ ७१॥ ॥**

அர்க்கரஶ்மிப்ரதீகாஶாம் காஞ்சநீம் மணிவிக்ரஹாம் ।
ஸுக்ரீவாய ஸ்ரஜம் திவ்யாம் ப்ராயச்சந்மநுஜர்ஷப꞉ ‖ 71½ ‖

[ப - ரை] மநுஜர்ஷப꞉ - *மனுஷ்யஶ்ரேஷ்டரான பெருமாள்,* அர்க்கரஶ்மிப்ரதீகாஶாம் - *ஸூர்ய கிரணங்களோடு ஸமானமாயும்,* மணிவிக்ரஹாம் - *மணிமயமான உருவத்தை யுடையதாயும்,* காஞ்சநீம் - *ஸ்வர்ணமயமாயும்,* திவ்யாம் - *தேவதாஸம்பந்தமானதுமான,* ஸ்ரஜம் - *மாலையை,* ஸுக்ரீவாய - *ஸுக்ரீவர் பொருட்டு,* ப்ராயச்சத் - *கொடுத்தார்.*

[வி - ம்]:—*ஸூர்யனை த்ருஷ்டாந்தமாகச் சொல்லவேண்டியிருக்க,* அர்க்கரஶ்மிப்ரதீகாஶாம் *என்று ஸூர்யனுடைய ஒளியை த்ருஷ்டாந்தமாக எடுத்ததின் கருத்து, ஸூர்யனுக்கு மஹிமை தன் ஒளியாலே யன்றோ: ஆகவே, அந்த ஒளியே த்ருஷ்டாந்தமாகில், மாலைக்கு ப்ரகாஶாதிஶயம் தோற்றுமென்கைக்காக.* திவ்யாம் ஸ்ரஜம் *என்கையாலே, இந்திரன் அனுப்பிவைத்த மாலை என்பது தோற்றுகிறது. இங்கு, மஹாராஜருக்கு மாலையைக்கொடுத்தது, ப்ரத்யுபகாரத்துக்காகவன்று; பரிசாகக் கொடுத்தாரென்றபடி. மஹாராஜர் செய்த உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை என்பது பெருமாள் திருவுள்ளம்.* ‖ 71½ ‖

**वैडूर्यमणिचित्रे च वज्ररत्नविभूषिते ।**
**वालिपुत्राय धृतिमानङ्गदायाङ्गदे ददौ ॥ ७२॥ ॥**

வைடூர்யமணிசித்ரேச வஜ்ரரத்நவிபூஷிதே ।
வாலிபுத்ராய த்ருதிமாநங்கதாயாங்கதே ததௌ ‖ 72½ ‖

[ப - ரை] த்ருதிமாந் - *ப்ரீதியையுடைய பெருமாள்,* வைடூர்யமணிசித்ரே - *வைடூர்யமணிகளாலிழைக்கப்பட்டு விசித்ரமாய்,* வஜ்ரரத்நவிபூஷிதே - *வஜ்ரமென்கிற ரத்நங்களாலே அலங்க்ருதமாயுள்ள,* அங்கதே - *தோள்வளைகளை,* வாலிபுத்ராய - *வாலிமகனை,* அங்கதாய - *அங்கதனுக்கு,* ததௌ - *கொடுத்தார்,*

[வி - ம்]:—அங்கதே அங்கதாய என்கையாலே, ஸாமஸாம்யத்தாலே கொடுத்தபடி தோற்றுகின்றது. வாலிபுத்ராய என்ற இத்தால், முன்னே கிஷ்கிந்தையில் வாலிமரண ஸமயத்திலே ஸுக்ரீவனுக்கு ஸமானமாகவே அங்கதனைக் கடாக்ஷிக்கவேணுமென்று வாலிசொல்லிய வார்த்தையைப் பெருமாள் இப்போது ஸ்மரித்து ஸுக்ரீவ பஹுமானாந்தரத்திலேயே அங்கதனையும் பஹுமானித்தாரென்கை தோற்றுகிறது. ‖ $72\frac{1}{2}$ ‖

**मणिप्रवरजुष्टं च मुक्ताहारमनुत्तमम् ।**
**सीतायै प्रददौ रामश्चन्द्ररश्मिसमप्रभम् ॥ ७३॥ ॥**

மணிப்ரவரஜுஷ்டம் ச முக்தாஹாரமநுத்தமம் ।
ஸீதாயை ப்ரததௌ ராமஶ்சந்த்ரரஶ்மிஸமப்ரஹம் ‖$73\frac{1}{2}$ ‖

[ப - ரை] ராம: - பெருமாள், மணிப்ரவர ஜுஷ்டம் - மணிஶ்ரேஷ்டங்களோடுகூடியதாய், சந்த்ரரஶ்மிஸமப்ரஹம் - சந்த்ரனுடைய ஒளியோடொத்ததாய், அநுத்தமம் - மிகவும் உத்தமமான, *தத் - அந்த, [இந்திரனால் அனுப்பிக்கப்பட்ட] முக்தாஹாரம் - முத்துமாலையை, ஸீதாயை - பிராட்டியின் பொருட்டு, ப்ரததௌ - கொடுத்தார்.

[வி - ம்] :—ராம: - இது 'ரமயதீதி ராம:' என்கிறபடி பிராட்டிக்கு முத்துமாலையைக் கொடுத்தருளும்போது வடிவிலுண்டாகிய அழகைக் காட்டுகிறது. ப்ரததௌ - பிராட்டிக்கு முத்துமாலையைக் கொடுத்ததை தததௌ என்னாமல் ப்ரததௌ என்று வால்மீகிபகவான் பணித்ததுபற்றி, அதிஶயமாகக் கொடுத்தமை ஸூசிதமாயிற்று. அதாவது திருவடிக்குப் பரிசாகக்கொடுக்கும்படி கொடுத்தாரென்கை. அவ்வாறன்றிப் பிராட்டிக்கே பரிசாகக்கொடுத்திருந்தால், ஸபையிலே கொடுக்கவேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லையே ; மஹிஷியாகையாலே ஏகாந்தத்திலும் கொடுக்கலாமன்றோ. ‖ $73\frac{1}{2}$ ‖

**अरजे वाससी दिव्ये शुभान्याभरणानि च ।**
**अवेक्षमाणा वैदेही प्रददौ वायुसूनवे ॥ ७४॥ ॥**

அரஜே வாஸஸீ திவ்யே ஶுபாந்யாபரணானி ச ।
அவேக்ஷமாணா வைதேஹீ ப்ரததௌ வாயுஸூநவே ‖$74\frac{1}{2}$‖

* 'ச' என்கிற இடத்திலே 'தத்' என்பது பாடாந்தரம்.

[ப - ரை] வைதேஹீ - விதேஹவம்ஶத்திலே அவதரித்த பிராட்டியானவள், அவேக்ஷமாணா - (பெருமாள் திருமுகத்தை) நன்றாகப் பார்த்தவளாய், அரஜே - நிர்மலங்களாய், திவ்யே - ப்ரகாஶிக்கின்ற, வாஸஸீ - இரண்டு வஸ்த்ரங்களையும், ஶுபாநி - மங்களகரமான, ஆபரணானி ச - ஆபரணங்களையும், வாயுஸூநவே - வாயுபுத்ரரான ஹநுமானுக்கு, ப்ரததௌ - கொடுத்தாள்.

[வி - ம்]:—வைதேஹீ—ஆசாரஶீலமான வம்ஶத்திலே பிறந்தமையால் பர்த்தாவினுடைய மனத்தை அநுவர்த்திப்பதே முறை என்கிற நினைவுடையவளென்கை ஸூசிதம். அவேக்ஷமாணா - பெருமாள் முக்தாஹாரத்தைத் தந்தருளியபோது அவருடைய திருமுக மண்டலத்தைப் பார்த்தாளென்கை. பார்த்ததன் கருத்து, தான் பர்த்தாவுக்குப் பரதந்த்ரையாகையாலே. 'ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ர்யமர்ஹதி' என்று ஸ்த்ரீகளுக்கு ஸ்வாதந்த்ர்யம் நிஷித்தமாகையால் தான் செய்யும் கார்யத்தில் பர்த்தாவின் அநுமதி வேண்டுமென்று பெருமாள் முகத்தைப் பார்த்தாளென்கை. இவள் இங்கிதஜ்ஞையாகையாலே, பெருமாள் திருவுள்ளத்தைக் குறிப்பினால் அறியக்கூடுமிறே. அன்றிக்கே, அவேக்ஷமாணா என்று திருவடியினுடைய உபகாரங்களைத் தன் ஹ்ருதயத்திலே அநுஸந்தித்துப் பார்த்தாளென்றும் சிலர் அர்த்தம் கொள்ளுவர்கள். வாயுபுத்ராய - ஸகலாத்மதாரகனான வாயுவின் மகனாகையாலே பிதாவைக்காட்டிலும் புத்ரனான திருவடிக்கு அந்த தாரகத்வம் அதிகமாயிருக்கும். பிதா லோகதாரகன்; மகனோ லோகமாதாபிதாக்களுக்கும் தாரகன். அங்குலீயக தாநத்தால் பிராட்டியையும், சூடாமணிப்ரதாநத்தால் பெருமாளையும் தரிக்கும்படி செய்தானிறே. திவ்யாபரண திவ்யவஸ்த்ராதிகளை அநுமானுக்குப் பிராட்டி கொடுத்தது, தன்னிடத்தில் முன்னமேயே இருந்தவைகளைக் கொடுத்தாளென்றபடி. கொடுத்ததும், பர்த்தாவின் அநுமதிகொண்டு கொடுத்தாள். ॥ 74½ ॥

अवमुच्यात्मनः कण्ठाद्धारं जनकनन्दिनी ।
अवैक्षत हरीन् सर्वान् भर्तारं च मुहुर्मुहुः ॥
तामिङ्गितज्ञस्संप्रेक्ष्य बभाषे जनकात्मजाम् ॥ ७६ ॥

அவமுச்யாத்மநः கண்டாத் ஹாரம் ஜநகநந்திநீ ।

அவைக்ஷத ஹரீந் ஸர்வாந் ஭ர்த்தாரஞ் ச முஹுர்முஹு: ॥
தாமிங்கிதஜ்ஞஸ்ஸம்ப்ரேக்ஷ்ய ப஭ாஷே ஜநகாத்மஜாம் ॥76॥

[ப - ரை] ஜநகநந்திநீ - ஜநகராஜன் திருமகளான ஸீதை, ஆத்மந: கண்டாத் - தன் கழுத்திலிருந்து, ஹாரம் - முத்துமாலையை, அவமுச்ய - கழற்றி, ஸர்வாந் ஹரீந்-எல்லா வாநரர்களையும், பர்த்தாரம்- பர்த்தாவான பெருமாளையும், முஹுர்முஹு: - அடிக்கடி, அவைக்ஷத - பார்த்தாள். இங்கிதஜ்ஞ: - குறிப்புகளையறியுமவரான பெருமாள், தாம் - அந்த, ஜநகாத்மஜாம் - பிராட்டியை, ஸம்ப்ரேக்ஷ்ய - நன்றாகப்பார்த்து, ப஭ாஷே - வ்யக்தமாக ஒரு வார்த்தை சொன்னார்.

[வி - ம்]:—ஜநகநந்திநீ - இந்த ஸமயத்தில் தன்பிதாவை ஸ்மரித்தாள். அதாவது பிராட்டி தன்னைப் பெருமாளுக்குத் தன் பிதா நீர் வார்த்துக் கொடுக்கும்போது 'பெருமாளுடன் அநுகூலமாக தர்மாநுஷ்டானம் செய்யக்கடவை' என்று உபதேசித்த பிதாவை நினைத்தாளென்றபடி. அவைக்ஷத ஹரீந் ஭ர்த்தாரம் ச-ஸ்ரீவாநர முதலிகளையும் பர்த்தாவான பெருமாளையும் பிராட்டி அடிக்கடி பார்த்ததின் கருத்து - இந்த வாநரமுதலிகளில் இந்த ஹாரத்தை யாருக்குப் பரிசாகக்கொடுப்பது என்று பெருமாள் திருவுள்ளத்தை அறிகைக்காக. ஸ்திரீகளுக்கு, ஸகல கார்யங்களிலும் பர்த்ருபாரதந்த்ர்யமிறே ஸ்வரூபம் 'ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ர்யமர்ஹதி' என்கிற ஸ்த்ரீஸாமாந்ய தர்மத்தை வெளியிடுவதற்காகவன்றோ, இவள் அவதரித்தது. இங்கிதஜ்ஞ: - பிராட்டியினுடைய திருவுள்ளத்தைக் குறிப்பினால் அறிந்து கொண்டவர் என்றபடி. ஜநகாத்மஜாம் ஸம்ப்ரேக்ஷ்ய - ஸம் என்கிற உபஸர்க்கத்தினால் பிராட்டியைத் தாம் பார்த்த பார்வையிலேயே தம்முடைய தாத்பர்யங்களெல்லாம் அவளுக்குத் தெரியும்படி பார்த்தாரென்கை ஸூசிதமாயிற்று. ஆக, பிராட்டி, யாருக்கு ஹாரத்தைக் கொடுப்பது என்று பெருமாள் முகத்தைப் பார்க்க, அவரும் பிராட்டியை நோக்கி வ்யக்தமாக ஒரு வார்த்தை அருளிச்செய்தாரென்றபடி. ॥ 76 ॥

प्रदेहि सुभगे हारं यस्य तुष्टाऽसि भामिनि ।
पौरुषं विक्रमो बुद्धिर्यस्मिन्नेतानि सर्वशः ॥ ७७ ॥

ப்ரதேஹி ஸுபகே ஹாரம் யஸ்ய துஷ்டா஽ஸி பாமிநி ।
பௌருஷம் விக்ரமோ புத்திர்யஸ்மிந்நேதாநி ஸர்வஶ: ॥ 77 ॥

[ப - ரை] பாமிநி - காந்திமதியே, யஸ்மிந் - யாரிடத்திலே, பௌருஷம் - ப்ரதாபமென்ன, விக்ரம: - தாண்டுகிற ஸாமர்த்ய மென்ன, புத்தி: - ஸமயோசித ஜ்ஞானமென்ன, ஏதாநி - இவைகள், ஸர்வஶ: - எல்லாம், (ஸந்தி) - (இருக்கின்றனவோ), ஸுபகே - ஓ ஸௌபாக்யமுடையவளே! யஸ்ய - எவன் விஷயமாக, துஷ்டா அஸி - ஸந்தோஷித்தவளாய் இருக்கிறாயோ, (தஸ்மை) - (அவனுக்கு), ப்ரதேஹி - கொடு.

[வி - ம் ] :—இதில் பாமிநி என்றும், ஸுபகே என்றும் பிராட்டியை நோக்கிப் பெருமாள் ஸம்போதித்தபடியால், பிராட்டி காந்தியுடையவளாகி, அத்தால் ஸ்வாதீனபர்த்தாவை யுடைவளா யிருப்பது காட்டப்பட்டது. இத்தால் 'யான் நீ இட்ட வழக்காயிருப்பதால், இதை என்னைக் கேட்கவேண்டுமா? நீ செய்கிறவையாவும் எனக்கு அபிமதமாயன்றோ இருப்பது!' என்ற பெருமாள் திருவுள்ளம் ஸூசிதம். ॥ 77 ॥

**ददौ सा वायुपुत्राय तं हारमसितेक्षणा ।**
**हनुमांस्तेन हारेण शुशुभे वानरर्षभः ॥**
**चन्द्रांशुचयगौरेण श्वेताभ्रेण यथाऽचलः ॥ ७८॥ ॥**

ததௌ ஸா வாயுபுத்ராய தம் ஹாரமஸிதேக்ஷணா ।
ஹநுமாம்ஸ்தேந ஹாரேண ஶுஶுபே வாநரர்ஷப: ।
சந்த்ராம்ஶுசயகௌரேண ஶ்வேதாப்ரேண யதா஽சல: ॥78½॥

[ப - ரை.] அஸிதேக்ஷணா - கறுத்த கண்விழிகளையுடைய, ஸா - அந்தப் பிராட்டி, தம் ஹாரம் - அந்த முத்துமாலையை, வாயுபுத்ராய - வாயுபுத்ரனான ஹநுமானுக்கு, ததௌ - கொடுத்தாள். வாநரர்ஷப: - வாநரஶ்ரேஷ்டனான, ஹநுமாந் - திருவடியானவர், சந்த்ராம்ஶுசய கௌரேண - சந்த்ர கிரணங்களின் தொகுதிபோலே வெளுத்திருக்கிற, தேந ஹாரேண - அந்த முத்துமாலையினால், ஶ்வேதாப்ரேண - வெண் மேகத்தினால், அசலோ யதா - மலைபோல், ஶுஶுபே - ப்ரகாசித்தார்.

[வி - ம்.]:—அஸிதேக்ஷணா - கீழ் ஶ்லோகந்தன்னிற் சொல்லிய ஸௌபாக்கியத்துக்கு ஹேதுவை இங்கு வேறு வகையாக வெளியிடு

கிறார் மஹர்ஷி. அதாவது கண்ணழகையுடையவளாகையால் ஸ்வாதீனபர்த்ருகையுடையள் என்றபடி. வாயுபுத்ராய - இதனால் ஜகத்துக்கு ப்ராணதாரகன் வாயு. அவன் புத்ரனான திருவடியோ ஜகத்காரணபூதனான பெருமாளுக்கும் பிராட்டிக்கும் தாரகன் என்கை. ஆக, பிராட்டி பெருமாளநுமதிகொண்டு இந்த்ரன் அனுப்பிய ஹாரத்தைத் திருவடிக்குப் பூட்ட, திருவடியும் அதை அணிந்துகொண்டு வெண்மேகத்தால் வ்யாப்தமானதொரு மலைபோல் ப்ரகாசித்தார் என்றதாயிற்று. ॥ 78½ ॥

**ततो द्विविदमैन्दाभ्यां नीलाय च परन्तपः ।**
**सर्वान् कामगुणान् वीक्ष्य प्रददौ वसुधाधिपः ॥ ७९॥ ॥**

ததோ த்விவிதமைந்தாப்யாம் நீலாய ச பரந்தப: ।
ஸர்வாந் காமகுணாந் வீக்ஷ்ய ப்ரததௌ வஸுதாதிப: ॥ 79½॥

[ப - ரை.] தத: - பிறகு, பரந்தப: - ஶத்ருக்களைத் தபிக்கச் செய்பவரான பெருமாள், த்விவிதமைந்தாப்யாம் - த்விவிதன் மைந்தன் என்ற இவர்களின்பொருட்டும், நீலாய ச - நீலன் பொருட்டும், காமகுணாந் - எல்லோரும் ஆசைப்படும் காந்தி முதலான குணங்களையுடைய, ஸர்வாந் - எல்லா ஆபரணவஸ்த்ராதிகளையும், வீக்ஷ்ய - பார்த்து, ப்ரததௌ - நன்றாகக் கொடுத்தார்.

[வி - ம்.]:—பரந்தப: என்றும் வஸுதாதிப: என்றும் பெருமாளுக்கு விஶேஷண மிட்டதால், தான் வீரனாய் அரசனாயிருப்பதுபற்றி இங்குச் சொல்லிய வானர ஶ்ரேஷ்டர்களின் வீர்யாதிகளை மெச்சிக்கொடுத்தமையும், தான் சக்ரவர்த்தியாகையால் 'கொள்ளக் குறைவிலன்' என்கிறபடியே கொடுப்பதற்கு வேண்டுமவற்றுக் குறைவில்லாமையும் காட்டப்பட்டன. 'காமகுணாந் ஸர்வாந் வீக்ஷ்ய' என்று ஶ்லாக்யவஸ்துக்களைப் பரீக்ஷித்துக் கொடுத்தமை சொல்லப்பட்டது. ஆக, நீலன் முதலான ஸேனாதிபர்க்கும், பெருமாள் ஶ்லாக்யமான வஸ்த்ராபரணங்களை ப்ரீதிபூர்வகமாகக் கொடுத்தாரென்றபடி. ॥ 79½ ॥

**सर्ववानरवृद्धाश्च ये चान्ये वानरेश्वराः ।**
**वासोभिर्भूषणैश्चैव यथार्हं प्रतिपूजिताः ॥ ८०॥ ॥**

ஸர்வவாநரவ்ருத்தாஸ்ச யே சாந்யே வாநரேஸ்வரா: ।
வாஸோபிர்ப்பூஷணைஸ்சைவ யதார்ஹம் ப்ரதிபூஜிதா: ॥ 80½ ॥

[ப - ஶ.ர.] ஸர்வவாநரவ்ருத்தா: ச - எல்லா வாநர வ்ருத்தர்களும், யே ச அந்யே வாநரேஸ்வரா: - கீழ்ச்சொல்லப்பட்டவர்களைக் காட்டிலும் வேறான வாநரஸ்ரேஷ்டர்களும், வாஸோபி: - திவ்ய வஸ்த்ரங்களினாலும், பூஷணைஸ்ச - திவ்யாபரணங்களினாலும், யதார்ஹம் - தகுந்தபடி, ப்ரதிபூஜிதா: - பூஜிக்கப்பட்டார்கள்.

[வி - ம்.]:—கீழ் ஸ்லோகம்வரையில், ஸுக்ரீவ அங்கத ஹநுமத் நீல த்விவித மைந்தர்கள் ஸம்மாநிக்கப்பட்டார்களென்று சொல்லப்பட்டது. இங்கு அவர்களைத் தவிர மற்றுமுள்ள ருஷப, பநஸ, நளாதிகளும் ஸம்மாநிக்கப்பட்டார்களென்று சொல்லப்படுகிறது. வாநரவ்ருத்தா: என்றதால், ஜாம்பவானும் ஸம்மாநிதனென்கை ஸூசிதம். யதார்ஹம் - இத்தால், கொடுக்குமவர்க்கும் கொள்ளுமவர்க்கும் தக்கபடி வஸ்த்ரங்களும் ஆபரணங்களும் ஸ்ரேஷ்டமாயிருந்தமை ஸூசிதமாயிற்று. அன்றிக்கே, கொள்ளுமவர்களுடைய வீர்யதைர்ய ஆபிஜாத்யாதிகளுக்குத் தகுந்தபடி என்றும் தாத்பர்யமுண்டு. ஆக, பெருமாள் ஸுக்ரீவாதி ஸகல வாநரமுதலிகளையும் ஸம்மாநித்தாரென்கை சொல்லிற்றாயித்து. ॥ 80½ ॥

विभीषणोऽथ सुग्रीवो हनुमाञ्जाम्बवांस्तथा ।
सर्ववानरमुख्याश्च रामेणाक्लिष्टकर्मणा ।
यथार्हं पूजितास्सर्वैः कामै रत्नैश्च पुष्कलैः ॥ ८२ ॥

விபீஷணோऽதஸுக்ரீவோ ஹநுமாந்ஜாம்பவாம்ஸ்ததா ।
ஸர்வவாநரமுக்யாஸ்ச ராமேணாக்லிஷ்டகர்மணா ।
யதார்ஹம் பூஜிதாஸ்ஸர்வை: காமைரத்நைஸ்ச புஷ்கலை: ॥82॥

[ப - ரா.] விபீஷண: - விபீஷணாழ்வானும், ஸுக்ரீவ: - மஹாராஜரும், ஹநுமாந் - ஹநுமானும், ஜாம்பவாந் - ஜாம்பவானும், ததா - அப்படியே, ஸர்வவாநரமுக்யா: ச - எல்லா வாநரஸ்ரேஷ்டர்களும், புஷ்கலை: - ஸம்பூர்ணங்களான, ஸர்வை: காமை: - அவரவர் ஆசைப்பட்ட எல்லாப் பொருள்களாலும், ரத்நை: - ரத்நங்களாலும், யதார்ஹம் - தகுந்தபடி, அக்லிஷ்டகர்மணா - க்லேஶ

மில்லாமலே கார்யஞ் செய்கிற, ராமேண - பெருமாளால், பூஜிதா: - பூஜிக்கப்பட்டார்கள்.

[வி - ம்.]:—இங்கு, கீழ்ச்சொல்லப்பட்ட ஸம்மாநிதர்களைச் சேர்த்து, ஒரு கோவையாக அநுவதிக்கிறார் மஹர்ஷி. கீழ் விபீஷண ஸம்மாநம் சொல்லாமையாலே, அதையும் சேர்த்துச் சொல்லுகிறாராகவுமாம். இங்கு, அநுவதிக்கும்போது விபீஷணனையும்கூட அநுவதித்ததால், விபீஷணனும் முன்பே ஸம்மாநித கோடியிலே சேர்ந்துள்ளானென்கை ஸூசிதம். மேலும், 'லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண:' என்று தமது நகரத்துக்கு மீண்டு செல்லும்போதும் குலதநத்தையடைந்து சென்றானென்று மஹர்ஷி பணித்ததாலும் இது ஸூசிதமாயிற்று. ஸர்வவாநர-முக்யாஶ்ச என்கிறவிடத்திலே அங்கதனும் விவக்ஷிதன். அக்லிஷ்ட-கர்மண என்று பெருமாளுக்கு விஶேஷணமிட்டதால், காயக்லேஶம் மனக்லேஶம் ஒன்றுமில்லாமல் கொடுத்தமை தோற்றுகிறது. இதனால், கொள்ளுமவர்கள் ப்ரத்யுபகாரம் தேடவேண்டாமென்கை ஸூசிதமாயிற்று. பிராட்டி திருவடிக்கு முக்தாஹாரத்தைத் தந்தருளியதும் பெருமாள் அநுமதிகொண்டாகையாலே, பெருமாளால் எல்லோரும் ஸம்மாநிக்கப்பட்டார்கள் என்பதற்குத் தட்டில்லை.

**प्रहृष्टमनसस्सर्वे जग्मुरेव यथागतम् ।**
**दृष्ट्वा सर्वे महात्मानं ततस्ते प्लवगर्षभाः ।**
**विसृष्टाः पार्थिवेन्द्रेण किष्किन्धामभ्युपागमन् ॥ ८३॥ ॥**

ப்ரஹ்ருஷ்டமநஸஸ்ஸர்வே ஜக்முரேவ யதாகதம் ।
த்ருஷ்ட்வா ஸர்வே மஹாத்மாநம் ததஸ்தே ப்லவகர்ஷபா: ।
விஸ்ருஷ்டா: பார்த்திவேந்த்ரேண கிஷ்கிந்தாமப்யுபாகமந் ॥83½

[ப - ரை.] தத: - பிறகு, தே ஸர்வே ப்லவகர்ஷபா: - அந்த எல்லா வாநரஶ்ரேஷ்டர்களும், மஹாத்மாநம் - நல்ல ஸ்வபாவத்தையுடைய பெருமாளை, த்ருஷ்ட்வா-ஸேவித்துவிட்டு, ப்ரஹ்ருஷ்டமநஸ:- ஸந்துஷ்டமான ஹ்ருதயத்தையுடையவர்களாய், பார்த்திவேந்த்-ரேண - ராஜேந்த்ரனான பெருமாளால், விஸ்ருஷ்டா: - விடைகொடுக்கப்பட்டவர்களாய், யதாகதம்-வந்தபடியே, ஜக்மு: - சென்றார்கள்:

ஸர்வே - யாவரும், கிஷ்கிந்தாம் - கிஷ்கிந்தா பட்டணத்தை, அப்யுபாகமந் - அடைந்தார்கள்.

[வி - ம்.]:—மஹாத்மாநம் - ஆத்மஶப்தம் ஸ்வபாவவாசியாய், ஔதார்யாதி நல்ல ஸ்வபாவத்தையுடையவரென்கை. அன்றிக்கே ஆத்மஶப்தம் தேஹவாசியாய், தேஹகாந்தியையுடைத்தாயிருக்கையைக் காட்டுகிறது. த்ருஷ்ட்வா - இந்த தர்ஶநம் வாநரமுதலிகளுக்கு கிஷ்கிந்தாநகரந் தொடங்கி உண்டாயிருந்ததேயாகிலும், இப்போது உண்டானாற்போலச் சொன்னதன் கருத்து, பிரிந்து போகுங்காலமாகையாலே ஆத்மதாரணார்த்தமாக நன்றாகத் தர்ஶித்துப் போனார்களென்பது. ஆக, திருவபிஷேகாநந்தரம் பெருமாளாலே ஸம்மாநிக்கப்பட்ட வாநரமுதலிகள் பெருமாளை நன்று ஸேவித்து விட்டுச் சிலர் வந்தபடி சென்றார்கள். சிலர் கிஷ்கிந்தா நகரமடைந்தார்கள் என்றதாயிற்று. ‖ 83½ ‖

सुग्रीवो वानरश्रेष्ठो दृष्ट्वा रामाभिषेचनम् ।
लब्ध्वा कुलधनं राजा लङ्कां प्रायाद्विभीषणः ॥ ८४॥ ॥

ஸுக்ரீவோ வாநரஶ்ரேஷ்டோ த்ருஷ்ட்வா ராமாபிஷேசநம் ।
லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண: ‖84½‖

[ப - ரை.] வாநரஶ்ரேஷ்ட: - கபிகுலபதியான, ஸுக்ரீவ: - மஹாராஜர், ராமாபிஷேசநம் - பெருமாளுடைய திருவபிஷேகத்தை, த்ருஷ்ட்வா - ஸேவித்து, (கிஷ்கிந்தாம் அப்யுபாகமத்) - (கிஷ்கிந்தையை அடைந்தார்). ராஜா - இலங்கா நகரதிபதியான, விபீஷண: - விபீஷணன், குலதநம் - குலதநத்தை, லப்த்வா - அடைந்து, லங்காம் - லங்கையை, ப்ராயாத் - அடைந்தார்.

[வி - ம்.]:—கீழ் ஶ்லோகத்தில் 'வாநர முதலிகள் கிஷ்கிந்தையை அடைந்தார்களென்பதில் ஸுக்ரீவனைத் தவிர மற்ற வாநரர்கள் என்று தாத்பர்யம். ஆகவே, இந்த ஶ்லோகத்தில் வாநரர்களுக்குத் தலைவனான ஸுக்ரீவன் கிஷ்கிந்தையை அடைந்தான் என்பது சொல்லப்படுகிறது. குலதநம் லப்த்வா என்று விபீஷணாழ்வான் குலதநத்தை யடைந்து இலங்கைக்குச் சென்றாரென்கிற இதில், குலதநம் என்பது இக்ஷ்வாகு குலதநமான ஸ்ரீரங்க விமாநத்தைக் காட்டுகிறது. சிலர் ஸ்வகுலதநமான லங்காராஜ்யத்தைப் பெற்றுக்

கொண்டு சென்றான் என்பர். இவ்வாறு சொல்வது இந்த ஸந்தர்ப்பத்துக்குச் சேராது. ஏனென்றால், ஸம்மானங்களைப் பெற்றுக் கொண்டு அவரவர்கள் தங்கள் தங்களிருப்பிடம் செல்லுகிற ஸந்தர்ப்பமாகையாலே; லங்கையை முதன் முதலடைந்தது ராவணவதாநந்தரத்திலேயேயன்றோ: அதை இப்போது சொல்லவேண்டிய ஸந்தர்ப்பம் இல்லையே. அப்படி ஸந்தர்ப்பமில்லாமற் போனாலும் சொல்லலாமாகில், ஸுக்ரீவன் கிஷ்கிந்தாராஜ்யத்தைப் பெற்றதையும் இங்குச் சொல்ல ப்ரஸங்கிக்குமே.

முதலிற் சொல்லியபடி ரங்கவிமாநம் இக்ஷ்வாகுகுலதநமானபடி எங்ஙனே? என்னில், 'மநுவம்ஶப்ரஸூதாநாம் க்ஷத்ரியாணாமிதம் தநம் | காமகம் காமதம் காந்தம் விமாநம் ரங்க ஸஞ்ஜ்ஞிதம்' என்கிற ப்ரஹ்மாண்ட புராணவசநம் இதற்கு ப்ரமாணம். ஆனால், 'ஆராதய ஜகந்நாதமிக்ஷ்வாகுகுலதைவதம்' என்று உத்தரஸ்ரீராமாயணத்திலும், 'இத்யுக்த்வா ப்ரததௌ தஸ்மை ஸ்வவிஶ்லேஷாஸஹிஷ்ணவே| ஸ்ரீரங்கஶாயிநம் ஸ்வார்ச்யம் இக்ஷ்வாகுகுலதைவதம்' என்று பாத்மபுராணத்திலும் அவதாரபரிஸமாப்திஸமயத்திலே தன் விஶ்லேஷம் பொறுக்கமாட்டாத விபீஷணனைப் பார்த்து ரங்கவிமாநத்தை ஆராதிக்கும்படி சொல்லிப் பெருமாள் கொடுத்ததாக இருக்கிறபடியால், பட்டாபிஷேகாநந்தரம் ஸ்ரீவிபீஷணாழ்வான் ரங்கவிமாநம் பெற்றுச் சென்றாரென்பதோடு அவை மாறுபடுமே யென்னில், அந்த உத்தர ஸ்ரீராமாயண வசநம் ரங்கவிமாநத்தின் ஆராதனத்தைமட்டும் பெருமாள் அருளிச்செய்தாரென்பதைக் காட்டுகிறது. ஆகையாலே, விரோதமில்லை. பாத்மபுராணத்தில் 'இத்யுக்த்வா ப்ரததௌ' என்று கொடுத்ததாகச் சொல்லிற்றேயாகிலும், அது கல்பாந்தரவிஷயமென்று ஸமாதேயம். || 84½ ||

स राज्यमखिलं शासन्निहतारिर्महायशाः ।
राघवः परमोदारः शशास परया मुदा ।
उवाच लक्ष्मणं रामो धर्मज्ञं धर्मवत्सलः ॥ ८६ ॥

ஸ ராஜ்யமகிலம் ஶாஸந் நிஹதாரிர் மஹாயஶா: |
ராகவ: பரமோதார: ஶஶாஸ பரயா முதா |
உவாச லக்ஷ்மணம் ராமோ தர்மஜ்ஞம் தர்மவத்ஸல: || 86 ||

[ப - ரை.] நிஹதாரிঃ-கொல்லப்பட்ட ஶத்ருக்களையுடையவராய், மஹாயஶா: - மஹத்தான கீர்த்தியையுடையவராய், பரமோதார:-உதாரருக் கெல்லாம் ஶ்ரேஷ்டரான, ஸ: ராகவ: - அந்தப் பெருமாள், அகிலம் ராஜ்யம் - எல்லா ராஜ்யத்தையும், ஶாஸந் - பரிபாலித்துக்கொண்டு, பரயா முதா - மிகுந்த ஸந்தோஷத்தோடு, ஶஶாஸ - பரிபாலித்தார். தர்மவத்ஸல: - வர்ணாஶ்ரம தர்மங்களிற் ப்ரீதியுடையவரான, ராம: - பெருமாள், தர்மஜ்ஞம் - ராஜதர்மங்களை யறிந்தவரான, லக்ஷ்மணம் - இளையபெருமாளைக்குறித்து, உவாச - சொன்னார்.

[வி - ம்]:—நிஹதாரிঃ மஹாயஶா:-லோககண்டகனை ராவணனை நிர்மூலமாகும்படி ஸம்ஹரித்த உபகாரத்தை லோகமடையப் புகழ்ந்துகொண்டு கிடக்கிறதிறே. பரமோதார: - ஸ்வப்ரயோஜநமாகக் கொடுக்குமவர் என்கை. ராகவ: - இத்தால், கீழ்ச்சொல்லிய ஶத்ருநிரஸநமென்ன, யஶஸ்ஸென்ன, ஔதார்யமென்ன இவைகளுக்கு இக்குடிப்பிறப்பே ஹேது என்றதாயிற்று. பரயா முதா- ஆநந்தத்தில் பரத்வமாவது என்னவெனில், சேதநனுக்கு உண்டாகும் மோக்ஷாநந்தத்தைவிட எம்பெருமான் அவதரித்து மந்தர்களான இச்சேதநர்களோடு கலந்து நிற்பதில் பிறக்கும் பரமாநந்தமாகும். இந்த ஶ்லோகத்தில், ஶாஸந் என்றும் ஶஶாஸ என்றும் இரண்டு ஶாஸநஞ் சொல்லியது - ஒன்று துஷ்டநிக்ரஹத்தையும், மற்றொன்று ஶிஷ்டபரிபாலநத்தையும் காட்டுகிறது. தர்மஜ்ஞம் லக்ஷ்மணம் என்கிற இத்தால், ராஜநீதி முதலான தர்மங்களையறிந்த இளையபெருமாளைக் குறித்து அந்த தர்மத்திற் ப்ரீதியுடைய பெருமாள் சொன்னாரென்றதாயிற்று. தர்மஜ்ஞம் - இது, ஸாபிப்ராய விஶேஷணம். மேல், பெருமாள் நியமிக்கப்போகிற யௌவராஜ்ய பரிபாலநத்துக்கு ராஜநீதி முதலானவைகளை இவர் அறிந்திருக்கவேண்டியது அவஶ்யமிறே. ஆக, பெருமாள் தாம் ராஜ்யபாலநம் பண்ணும்போது இளையபெருமாளைப் பார்த்து ஒரு வார்த்தை யருளிச்செய்தாரென்கை. ‖ 86 ‖

**आतिष्ठ धर्मज्ञ मया सहेमां गां पूर्वराजाध्युषितां बलेन ।**
**तुल्यं मया त्वं पितृभिर्धृता या तां यौवराज्ये धुरमुद्वहस्व ॥८७॥**

ஆதிஷ்ட தர்மஜ்ஞ மயா ஸஹேமாம் காம் பூர்வராஜாத்யுஷிதாம் பலேந ।
துல்யம் மயா த்வம் பித்ருபிர்த்ருதா யா தாம் யௌவராஜ்யே துரமுத்வஹஸ்வ ॥ 87 ॥

[ப - ரை] :—தர்மஜ்ஞ - தர்மஜ்ஞனே ! பூர்வராஜாத்யுஷிதாம் - (மனுமுதலிய) பூர்வராஜாக்களாலே பரிபாலிதமாயுள்ள, இமாம் காம் - இந்தப் பூமியை, பலேந - வலிமையினாலே, மயா ஸஹ - என்னோடுகூட, ஆதிஷ்ட - பாலநம் பண்ணு. பித்ருபி: - (மநுவாதி) பித்ருக்களாலே, யா - எது, த்ருதா - தரிக்கப்பட்டதோ, தாம் துரம் - அந்த (ராஜ்ய) பாரத்தை, மயா துல்யம் - என்னோடு ஸமமாக, த்வம் - நீ, யௌவராஜ்யே - இளவரசு ஸ்தாநத்தில், (ஸ்த்தித்வா - இருந்து கொண்டு,) உத்வஹஸ்வ - வஹிப்பாய்.

[வி - ம்] :—இந்த ஶ்லோகத்தில், பெருமாள் இளையபெருமாளைப் பார்த்து, 'என்னுடன் நீ யௌவராஜ்யத்தை வஹித்து இந்தப் பூமியைப் பரிபாலிக்கவேண்டும்' என்கிறார். இங்கு, பெரியோர்கள் நிர்வாஹம் ஒன்றுண்டு. அதாவது—பெருமாள் இளையபெருமாளை நோக்கி 'ஆதிஷ்ட - பரிபாலிக்கக்கடவை' என்றார். அதற்கு, இளைய பெருமாள் 'ராஜநீதியறிகிலேன்' என்றார். மீளவும், பெருமாள் 'தர்மஜ்ஞ' என்றார். பின்னும் - தனியாக என்னாலாகுமோ பாலநஞ் செய்வதற்கு என்று இளையபெருமாளுக்குத் தாத்பர்யமாக அதுகண்டு 'மயாஸஹ - அப்ரதாநனா என்னோடு நீ ப்ரதாநனாயிருந்து என் உதவியைக் கொண்டு பரிபாலநஞ் செய்,' என்று பெருமாள் சொல்லவே, இளையபெருமாள் ஸ்வாதந்த்ர்ய பீதியினாலே தயங்கிநிற்கக், கண்டு 'மயா துல்யம் - என்னோடு ஸமமாகப் பரிபாலி' என்ன, அதுவும் ஶேஷத்வத்துக்கு விரோதம் என்று மௌநமாயிருக்க, 'யௌவராஜ்யே' - என் பதவிக்குத் தாழ்ந்த பதவியிலே' என்று அருளிச்செய்ய, அதற்கும் இளையபெருமாள் 'என்னைப்போலே மற்றும் ஶேஷபூதரில்லையோ ?' என்ன, அதற்குப் பெருமாள் 'பித்ருபி: த்ருதா - உனக்கும் இந்த ராஜ்ய துரத்தில் ஸம்பந்தமுண்டுகாண்' என்றருளிச்செய்தார் என்பது. இங்குப் பெருமாள் தமக்கு அடுத்த ப்ராதாவான பரதாழ்வானை யௌவராஜ்யத்திலே இருக்கும்படி நியமிக்காமல் இளையபெருமாளை

நியமித்தது ராஜநீதிக்குப் பொருந்துமோ? என்னில்—பூர்வ பட்டாபிஷேகத்திலே பரதாழ்வானில்லாமையாலே இளைய பெருமாளைக் குறித்து 'லக்ஷ்மணேமாம் மயா ஸார்த்தம் ப்ரஸாதி த்வம் வஸுந்தராம் - என்னோடு கூட நீ யௌவராஜ்யத்திலிருந்து பரிபாலி' என்று சொல்லியதைப் பெருமாள் திருவுள்ளம்பற்றி, 'ராமோ த்விர்நாபிபாஷதே' என்கிறபடியே ஸத்யஸந்தராகை யாலே மீளவும் இளையபெருமாளையே நியமித்தாரென்றபடி. ॥ 87 ॥

**सर्वात्मना पर्यनुनीयमानो यदा न सौमित्रिरुपैति योगम् ।**
**नियुज्यमानोऽपि च यौवराज्ये ततोऽभ्यषिञ्चद्भरतं महात्मा ॥ ८८ ॥**

ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம் ।
நியுஜ்யமாநோபி ச யௌவராஜ்யே ததோப்யஷிஞ்சத்பரதம்மஹாத்மா॥

[ப - ரை.] ஸௌமித்ரி: - இளைய பெருமாள், யௌவராஜ்யே - இளவரசுபதத்திலே, நியுஜ்யமாந: - நியமிக்கப்பட்டவராயும், பர்யநுநீயமாநோபி - அநுஸரிக்கப்பட்டவராயுமிருந்தபோதிலும், ஸர்வாத்மநா - ஸர்வவிதத்தாலும், யதா - எப்போது, யோகம் - ஸம்மதியை, ந உபைதி - அடையவில்லையோ, தத: - பிறகு, மஹாத்மா - நல்ல தைர்யமுடைய பெருமாள், பரதம் - பரதாழ்வானை, அப்யஷிஞ்சத் - (யௌவராஜ்யத்தில்) அபிஷேகம் பண்ணினார்.

[வி - ம்]:—ஸௌமித்ரி: யோகம் நோபைதி - இளைய பெருமாள் யௌவராஜ்ய பட்டாபிஷேகத்தை யங்கீகரியாமலிருந்தது, பெருமாளிடத்தில் தாம் பண்ணுகிற அநவரத கைங்கர்யங்களுக்கு விக்ந கரமாமிது என்னும் நினைவாலே; இவ்வர்த்தம் 'ஸௌமித்ரி:' என்கிற பதத்தினாலே தோற்றுகிறது. எங்ஙனேயென்னில், ஸுமித்ரை, 'ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய' என்று அநவரத கைங்கர்யத்துக்காகவே உன்னைப் பெற்றேனென்றாளிறே. அன்றிக்கே, தனக்கு ஜ்யேஷ்டனான பரதனிருக்கத் தான் யௌவ ராஜ்யத்தையடைவது ராஜநீதிக்குத் தகாது என்கிற இளைய பெருமாளுடைய தாத்பர்யத்தினாலாகவுமாம். நியுஜ்யமாந: - பெருமாள் தாமாகவும் வஸிஷ்டாதிகளைக் கொண்டும் நியமித்தவிடத்திலும், இளையபெருமாள் அங்கீகரித்தாரில்லையென்றபடி. பர்யநுநீயமாந: - தாமாகவும் ராஜ்யக்ரமப்ராப்தியையுடைய பரதனைக்

கொண்டும் அடிக்கடி அநுஸரித்தவிடத்தும் அங்கீகரித்தாரில்லை யென்றபடி. 'ஆதிஷ்ட' என்று இளையபெருமாளை நியமித்தாற் போலப் பரதாழ்வானை நியமிக்காமல், தத்ஸ்வபாவஜ்ஞராகையாலே, 'ததோப்யஷிஞ்சத் பரதம் - பெருமாள் யௌவராஜ்யாபிஷேகத்தைப் பரதாழ்வானுக்குச் செய்தார்' என்றது. இதனால் பரதனுக்கு ராமபாரதந்த்ர்யமே ஸ்வபாவம் என்னும் அர்த்தம் தோற்றுவிக்கப் பட்டது. பரதம் என்றதால், முன்பு பெருமாள் தன்னிடத்தில் வைத்த ராஜ்ய பாரத்தைப் பாரதந்த்ர்யத்தாலே வஹித்தாற்போல், இப்போதும் வஹித்தாரென்கை. ஆக, இளையபெருமாளை யௌவ ராஜ்யத்திலிருக்கும்படி சொல்ல, அவர் கைங்கர்யவிக்நமென்று இசையாமலிருக்க, பெருமாள் பரதாழ்வானை அந்தப் பதவியில் ஸ்தாபித்தாரென்றதாயிற்று. || 88 ||

**पौण्डरीकाश्वमेधाभ्यां वाजपेयेन चासकृत् ।**
**अन्यैश्च विविधैर्यज्ञैरयजत्पार्थिवर्षभः ॥ ८९ ॥**
**राज्यं दशसहस्राणि प्राप्य वर्षाणि राघवः ।**
**शताश्वमेधानाजह्रे सदश्वान् भूरिदक्षिणान् ॥ ९० ॥**

பௌண்டரீகாஶ்வமேதாப்யாம் வாஜபேயேந சாஸக்ருத் ।
அந்யைஶ்ச விவிதைர்யஜ்ஞைரயஜத்பார்த்திவர்ஷப: || 89 ||
ராஜ்யம் தஶஸஹஸ்ராணி ப்ராப்ய வர்ஷாணி ராகவ: ।
ஶதாஶ்வமேதாநாஜஹ்ரே ஸதஶ்வாந்பூரிதக்ஷிணாந் || 90 ||

[ப - ரை.] பார்த்திவர்ஷப: - ராஜஶ்ரேஷ்டரான, ராகவ: - பெருமாள், பௌண்டரீகாஶ்வமேதாப்யாம் - பௌண்டரீகம் அஶ்வ மேதம் என்ற இவ்விரண்டு யாகங்களாலும், வாஜபேயேந ச - வாஜ பேய மென்கிற யாகத்தினாலும், அந்யைஶ்ச விவிதை: யஜ்ஞை: - வேறு ராஜஸூயஜ்யோதிஷ்டோமாதி யாகங்களாலும், அஸக்ருத் - அடிக்கடி, அயஜத் - தேவதாராதநம் பண்ணினார்; தஶஸஹஸ்ராணி வர்ஷாணி - பத்தாயிரம் வர்ஷங்களிலே, ராஜ்யம் - ராஜ்யபால நத்தை, ப்ராப்ய - அடைந்து, ஸதஶ்வாந் - நல்ல குதிரைகளை யுடையனவும், பூரிதக்ஷிணாந் - மிகுந்த தக்ஷிணைகளையுடையனவு மான, ஶத அஶ்வமேதாந் - நூறு அஶ்வமேதங்களை, ஆஜஹ்ரே - செய்தார்.

[வி - ம்.]:—இவ்விரண்டு ஶ்லோகங்களும் ஏகாந்வயங்கள். பெருமாள் பதினுயிரம் ஸம்வத்ஸரம் ராஜ்யபாலநம் பண்ணிக் கொண்டிருந்து, அந்தக் காலத்தில் பௌண்டரீகம், வாஜபேயம், ராஜஸூயம், ஜ்யோதிஷ்டோமம், நூறு அஶ்வமேதங்கள் இவைகளை இடைவிடாமல் செய்து, அந்தந்த யாகங்களில் தக்ஷிணைதிகளை நிரவதிகமாகக் கொடுத்து, தேவர்களையும் ப்ராஹ்மணர்களையும் திருப்தியடையும்படி செய்தா ரென்றதாயிற்று. பௌண்டரீகாஶ்வ மேதாப்யாம் என்கிறவிடத்தில் ஸாமாந்யமாகச் சொன்ன அஶ்வ மேதயாகத்தையே ஶதாஶ்வமேதாந் என்கிறவிடத்திலும் விவரித்துச் சொன்னுர் மஹர்ஷி. ஸர்வநியந்தாவான பெருமாளுக்கும் தேவதாப்ரீணநம் பண்ணவேண்டுமோ வென்னில், தம்முடைய அநுஷ்டாநமுகத்தாலே தர்ம ஸம்ஸ்த்தாபநம் பண்ணுகைக்காக இவை வேண்டும் என்று கண்டுகொள்வது ‖ 89-90 ‖

**आजानुलम्बबाहुः स महास्कन्धः प्रतापवान् ।**
**लक्ष्मणानुचरो रामः पृथिवीमन्वपालयत् ॥ ९१ ॥**

ஆஜாநுலம்பபாஹுஸ்ஸ மஹாஸ்கந்த: ப்ரதாபவாந் ।
லக்ஷ்மணாநுசரோ ராம: ப்ருதிவீமந்வபாலயத் ‖ 91 ‖

[ப - ரை] ஆஜாநுலம்பபாஹு: - முழங்காலளவு தொங்குகிற திருக்கைகளையுடையவரும், மஹாஸ்கந்த: - மஹத்தான தோள்களையுமுடையவரும், ப்ரதாபவாந் - தேஜஸ்வியுமான, ஸ: ராம: - அந்தப் பெருமாள், லக்ஷ்மண அநுசர: - இளையபெருமாளால் பின் தொடரப்பட்டு, ப்ருதிவீம் - பூமியை, அந்வபாலயத் - அநுஸரித்து ரக்ஷித்தார்.

[வி - ம்.]:—ஆஜாநுலம்பபாஹு: - கைகளின் நீளம் சொல்லப் பட்டது. இத்தால், பூமிப்பரப்படங்கக் கைகளின் நிழலிலே ஒதுங்கினலும் கைகளின் ரக்ஷணப்பாரிப்பே மிகுந்திருக்கை தோற்றுகிறது. மஹாஸ்கந்த: - தோளழகு சொல்லப்பட்டது. அழகும் ரக்ஷணத்துக்கு உறுப்பிறே. 'த்ருஷ்ட ஏவ ஹி நஶ்ஶோகம் அபநேஷ்யதி ராகவ:' என்று பார்க்கப்பட்ட மாத்திரத்திலேயே ஶோகத்தைப் போக்குகை ரக்ஷணமன்றே! ப்ரதாபவாந் - இதுவும் ரக்ஷணத்துக்கு ஒரு ஹேது. பார்த்தவுடன் ப்ரதிகூலர் நடுங்கும்படி.

யிருப்பது துஷ்டநிக்ரஹ மூலமாக ப்ரஜாரக்ஷணத்துக்கு உறுப்பிறே. லக்ஷ்மணுநுசர: - இதுவும் ஜகத்ரக்ஷணத்துக்கு முக்யகாரணம். இளையபெருமாள் இவரைப் பின் தொடர்ந்து ஸர்வவிதகைங்கர்யங்களையும் பண்ணுகை ராஜ்யபரிபாலநத்தில் ஊன்றியிருப்பதற்கு முக்யஹேதுவாயிருக்குமன்றே. ப்ருதிவீம் அந்வபாலயத் - லோகத்தை யநுஸரித்துப் பரிபாலித்தமை சொல்லப்பட்டது. இத்தால், லோகரக்ஷணமே பெருமாள்தமக்கு ப்ரயோஜநமென்கை ஸூசிதமாயிற்று. ॥ 91 ॥

**राघवश्चापि धर्मात्मा प्राप्य राज्यमनुत्तमम् ।**
**ईजे बहुविधैर्यज्ञैः ससुहृद्ज्ञातिबान्धवः ॥ ९२ ॥**

ராகவஶ்சாபி தர்மாத்மா ப்ராப்ய ராஜ்யமநுத்தமம் ।
ஈஜே பஹுவிதைர்யஜ்ஞை: ஸஸுஹ்ருத்ஜ்ஞாதிபாந்தவ: ॥92

[ப - ரை.] தர்மாத்மா - தர்மத்திலே நிலைநின்ற ஸ்வபாவமுடைய, ராகவ: - பெருமாள், அநுத்தமம் ராஜ்யம் - மிகவும் ஶ்ரேஷ்டமான ராஜ்யத்தை, ப்ராப்ய - அடைந்து, பஹுவிதை: - அநேகவிதங்களான, யஜ்ஞை: - யாகங்களினாலே, ஸஸுஹ்ருத்ஜ்ஞாதி பாந்தவ ஏவ - ஸ்நேஹிதர்கள் பந்துக்கள் இவர்களோடு கூடினவராகவே, ஈஜே - யாகஞ் செய்தார்.

[வி - ம்.] :—தர்மாத்மா - தர்மஸ்வபாவத்தையுடைத்தாயிருப்பது ராஜ்யபாலநத்துக்கும் யாகாத்யநுஷ்டாநத்துக்கும் அபேக்ஷிதமிறே. அநுத்தமம் ராஜ்யம் - இத்தால், அகண்டராஜ்யபரிபாலநம் சொல்லப்பட்டது. 'இக்ஷ்வாகூணுமியம் பூமிஸ் ஸஶைலவநகாநநா' என்கிறபடியே அகிலமஹீமண்டலமும் இவ்வம்ஶத்தார்க்கே உரியதன்றோ? ஈஜே என்று ஆத்மநேபதமாய், கர்த்ருகாமியாகையாலே, யஜமாநத்வர்த்தமான யாகத்தின் பலம் தத்கர்த்தாவான பெருமாளையே யடைகின்றது. 'ஸர்வதேவநமஸ்கார: கேஶவம் ப்ரதிகச்சதி' என்கிறபடியே, எந்தத் தேவதைகளை(பஜித்தாலும்) நமஸ்கரித்தாலும் ஸர்வதேவாந்தர்யாமியான பகவானையே அவை சேருமிறே. ॥ 92 ॥

**न पर्यदेवन्विधवा नच व्यालकृतं भयम् ।**
**न व्याधिजं भयं वाऽपि रामे राज्यं प्रशासति ॥ ९३ ॥**

ந பர்யதேவந் விதவா நச வ்யாளக்ருதம் பயம் ।
ந வ்யாதிஜம் பயம் வாபி ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி ॥ 93 ॥

[ப - ரை] :—ராமே - ராமர், ராஜ்யம்-ராஜ்யத்தை, ப்ரஶாஸதி - ஆளும்போது, விதவா: - விதவைகள், ந பர்யதேவந் - அழுவில்லை. வ்யாலக்ருதம் - ஸர்ப்பப்ரயுக்தமான, பயம் - பயமானது, ந ச - இல்லவேயில்லை, வ்யாதிஜம் - பிணிகளாலுண்டாகக் கூடிய, பயம் வாபி - பயமும், ந - இல்லை.

[வி - ம்] :—இந்த ஶ்லோகம் தொடங்கி எட்டு ஶ்லோகங்களில் பெருமாள் ராஜ்யபாலநம் பண்ணுமளவில் ஜகத்துக்கு உண்டான அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்திகள், சொல்லப்படுகின்றன. ராமே - 'ரமந்தே யோகிநோऽநந்தே' என்கிறபடியே பெருமாள் யோகிகளால் ப்ரீதிபூர்வகமாகத் த்யாநம் பண்ணப்படுகிறவராகையாலே, அவர் பரிபாலிக்கும்போது அநிஷ்டநிவ்ருத்திக்குச் சொல்லவும் வேணுமோ! யோகிகள் தங்கள் யோகமஹிமையாலேயே ஸர்வாநிஷ்டங்களையும் போக்கவல்லவர்களன்றோ! விதவா ந பர்யதேவந் - 'விஶேஷணஃஅபாவாத் விஶிஷ்டாபாவ:' என்கிற ந்யாயத்தாலே விஶேஷணஸூத்ரஸர்த்ருநாஶமில்லாமையாலே, விஶேஷ்யஸூதப்ரலாபமில்லை யென்றதாயிற்று. ந ச வ்யாலக்ருதம் இத்யாதி - ஸர்ப்பவிஷம் வ்யாதி இவற்றாலுண்டாகும் பயமில்லை என்கிறதும், இவற்றுக்கு நிதாநமான அதர்மமில்லை யென்றபடி. 'ராமோ விக்ரஹவாந் தர்ம:' என்கிறபடியே தர்மமே வடிவாகக்கொண்ட பெருமாள் ராஜ்யபாலநம் பண்ணும்போது அதர்மம் ஏற்பட அவகாஶமில்லையிறே.

निर्दस्युरभवल्लोको नानर्थः कञ्चिदस्पृशत् ।
नच स्म वृद्धा बालानां प्रेतकार्याणि कुर्वते ॥ ९४ ॥

நிர்தஸ்யுரஸவல்லோகோ நாநர்த்த: கஞ்சிதஸ்ப்ருஶத் ।
நச ஸ்ம வ்ருத்தா பாலாநாம் ப்ரேதகார்யாணி குர்வதே ॥ 94 ॥

[ப - ரை] லோக: - ஜகமானது, நிர்தஸ்யு: - திருடரில்லாததாக, அஸவத் - ஆயிற்று. அநர்த்த: - தீங்கு, கஞ்சித் - ஒருவனையும், ந அஸ்ப்ருஶத் - ஸ்பர்ஶிக்கவில்லை : வ்ருத்தா: - பெரியோர்கள், பாலாநாம் - இளையவர்களுக்கு, ப்ரேதகார்யாணி - ப்ரேதக்ருத்யங்களை, ந குர்வதே ஸ்ம - பண்ணவில்லை.

[வி - ம்]:—நிர்தஸ்யுரித்யாதி-இதில், லோகமப்தம் 'லோகஸ்து புவநே ஜநே' என்று புவநவாசியாயும் ஜனவாசியாயும் இருக்கிறது. அவற்றில், புவநவாசியானபோது பெருமாள் ராஜ்யபாலநகாலத்தில் புவநத்தில் திருடரில்லை என்று அர்த்தம். ஜநவாசியான போது, ஜநங்களிடத்தில் திருடரென்கிற ஶப்தமில்லை என்றபடி. இம்மாதிரி அர்த்தம் கொள்ளுகைக்கு ஹேது என்ன வெனில், திருடன் என்கிற ஶப்தமுண்டாகில் பயமுண்டே. 'நதஸ்கரபயம் ததா' என்று ஸம்க்ஷேபராமாயணத்தில் இருப்பதனால், தஸ்கர பயமில்லாத போது, அதற்குக் காரணமான திருடனென்கிற ஶப்தமுமில்லை என்று கொள்ளலாமிறே. நாநர்த்த: கஞ்சிதஸ்ப்ருஶத் - அதாவது இடிவிழுதல் முதலான அநர்த்தங்கள் ஒருவர்க்கு முண்டாகவில்லை யென்றபடி. பெரியோர்கள் சிறுவர்க்கு ப்ரேதக்ருத்யம் பண்ணவில்லை யென்கிற வித்தால், ராமராஜ்யத்தில் பெரியோர்களிருக்கச் சிறுவர்களுக்கு மரணமில்லை என்பது காட்டப்பட்டது. ஆக, ராமராஜ்யத்தில் அநிஷ்டநிவ்ருத்தி சொல்லப்பட்டது. ॥ 94 ॥

सर्वं मुदितमेवासीत् सर्वो धर्मपरोऽभवत् ।
राममेवानुपश्यन्तो नाभ्यहिंसन् परस्परम् ॥ ९५ ॥

ஸர்வம் முதிதமேவாஸீத் ஸர்வோ தர்மபரோऽபவத் ।
ராமமேவாநுபஶ்யந்தோ நாப்யஹிம்ஸந் பரஸ்பரம் ॥ 95 ॥

[ப - ரை.] ஸர்வம் - எல்லாம், முதிதம் ஏவ - ஸந்தோஷமடைந்தனவாகவே, ஆஸீத் - ஆயிற்று. ஸர்வ: - எல்லாரும், தர்மபர: - தர்மாசரணத்திலே ஆஸக்தியுடையவராக, அபவத் - ஆனார். (ஜநா:) - (ஜநங்கள்), ராமம் ஏவ - பெருமாளையே, அநுபஶ்யந்த: - எண்ணினவர்களாய்க்கொண்டு, பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர், ந அப்யஹிம்ஸந் - ஹிம்ஸிக்கவில்லை.

[வி - ம்]:—இதுமுதல் இஷ்டப்ராப்தியைச் சொல்லுகிறது. ஸர்வம் முதிதமேவ ஆஸீத் - தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரங்கள் எல்லாம் தமக்குத் தகுந்தபடி ஸந்தோஷத்தோடுகூடியிருந்தன என்றபடி. இதற்குஹேது என்னவெனில்;—ஸர்வோ தர்மபரோऽபவத் என்று சேதநரான மனுஷ்யர் நிஷித்த கர்மங்களைத் தவிர்த்து ஶாஸ்த்ரவிஹித கர்மங்களைச் செய்கையாலே என்றபடி.

ஆனல், மநுஷ்யர் செய்கிற தர்மாநுஷ்டாநம், மற்றவைகளுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும்படி எவ்வாறெனில், புண்யஞ் செய்கிற மனிசனுடைய ஸம்பந்தத்தினல் உண்டாகுமென்றபடி. ராமமேவ இத்யாதி—ஒருவர்க்கொருவர் தலையறுக்கும்படி வைரம் பிறந்த வளவிலும், பெருமாள் முகம் வாடுமென்றெண்ணி ஹிம்ஸாதிகளைச் செய்யவில்லை என்றபடி. ॥ 95 ॥

**आसन्वर्षसहस्राणि तथा पुत्रसहस्रिणः ।**
**निरामया विशोकाश्च रामे राज्यं प्रशासति ॥ ९६ ॥**

ஆஸந்வர்ஷஸஹஸ்ராணி ததா புத்ரஸஹஸ்ரிண: ।
நிராமயா விஶோகாஶ்ச ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி ॥ 96 ॥

[ப - ரை.] ராமே - *பெருமாள்*, ராஜ்யம் - *ராஜ்யத்தை*, ப்ரஶாஸதி - *பரிபாலநம் பண்ணுகையில்*, (ஜநா:) - (*ஜநங்கள்*), வர்ஷஸஹஸ்ராணி - *அநேகமாயிரம் வருஷங்கள்*, ஆஸந் - *ஜீவித்திருந்தார்கள்*. ததா - *அப்படியே*, புத்ரஸஹஸ்ரிண: - *ஆயிரம் பிள்ளைகளையுடையவர்களாகவும்*, நிராமயா: - *வ்யாதியில்லாதவர்களாகவும்*, விஶோகாஶ்ச - *ஶோகமில்லாதவர்களாகவும்*, ஆஸந் - *இருந்தார்கள்*.

[வி - ம்.]:—ஆஸந் *இத்யாதி* - *உலகத்தில் ஜனங்களுக்கு ப்ரதாநாபேக்ஷிதம் ஆயுர்வ்ருத்தியிறே. அது இருந்தாலும், ஸந்ததியில்லாவிடில் நிஷ்ப்ரயோஜநமாய்த் தோற்றும்.* புத்ரஸஹஸ்ரிண: - *ஸந்ததிவ்ருத்தியுமுண்டு என்கிறது. இவ்விரண்டு முண்டானாலும், வ்யாதியினல் வருந்துவராகில் கீழ்ச்சொல்லியவை ஸந்தோஷகரமாக விராவன்றே!* நிராமயா: - *வ்யாதியுமில்லை என்கிறது. கீழ்ச் சொல்லிய மூன்றுமிருந்தாலும், அந்தரங்கபந்துநாஶமுண்டாகில் ஶோகமுண்டாகுமே.* விஶோகாஶ்ச - *அதில்லாமையால் ஶோகமுமில்லையென்றபடி. கீழ்ச் சொல்லியவைகளுக்கு ஹேது என்னென்னில்,* ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி - *பரமதார்மிகரான பெருமாள் ராஜ்யத்தைப் பரிபாலிப்பதேயென்கை.* ॥ 96 ॥

**रामो रामो राम इति प्रजानामभवन् कथाः ।**
**रामभूतं जगदभूद्रामे राज्यं प्रशासति ॥ ९७ ॥**

ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா: ।
ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி ॥ 97 ॥

[ப - ரை.] ராமே - ராமர், ராஜ்யம் - ராஜ்யத்தை, ப்ரஶாஸதி - பரிபாலநம் பண்ணும்போது, ப்ரஜாநாம் - ஜநங்களுக்கு, ராம: ராம: ராம: இதி-ராமன் ராமன் ராமன் என்கிற, கதா: - கதைகள், அபவந் - உண்டாயிருந்தன. ஜகத் - உலகமானது, ராமபூதம் - ராமாத்வைத மாக, அபூத் - ஆய்விட்டது.

[வி - ம்.] :—ராம: இத்யாதி - திருமேனியழகாலும் குணங்களாலும் நாட்டையெல்லாம் ரமிப்பித்துக்கொண்டுபோகும் பெருமாள் ராஜ்யபாலநம் செய்யுங்காலத்தில், ஜநிதர்மாக்களுக்கெல்லாம் தந்தாமுக்கு உரிய தாரகபோஷக போக்யங்கள் பெருமாளேயாயும், அவர் திருநாமத்தைச் சொல்லுகையே வாக்குப்படைத்த ப்ரயோஜநமாயும், ஜகத்தெல்லாம் ராமாத்வைதமாயும் இருந்தன. மஹர்ஷி மூன்றுதரம் ராமநாமத்தைச்சொன்னதற்கு ஹேது, இதுவே. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன்" என்று ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. ॥ 97 ॥

**नित्यपुष्पा नित्यफलास्तरवस्स्कन्धविस्तृताः ।**
**काले वर्षी च पर्जन्यः सुखस्पर्शश्च मारुतः ॥ ९८ ॥**

நித்யபுஷ்பா நித்யபலாஸ்தரவ: ஸ்கந்தவிஸ்த்ருதா : ।
காலே வர்ஷீ ச பர்ஜந்ய: ஸுகஸ்பர்ஶஶ்ச மாருத: ॥ 98 ॥

[ப - ரை.] தரவ:-மரங்கள், ஸ்கந்த விஸ்த்ருதா:-பரந்த கிளைகளை யுடையனவாகவும், நித்யபுஷ்பா: - நித்யமான புஷ்பங்களை யுடையனவாகவும், நித்யபலா: - நித்யமான பழங்களை யுடையனவாகவும், (ஆஸந்) - (இருந்தன.) பர்ஜந்ய: - மேகம், காலே வர்ஷீ ச - உசித காலங்களில் வர்ஷிக்கிறதாகவும், மாருத: - காற்று, ஸுகஸ்பர்ஶஶ்ச - ஸுககரமான ஸ்பர்ஶத்தை யுடையதாகவும், (ஆஸ்தாம்) - (இருந்தன.)

[வி - ம்.]:—புஷ்பங்களும் பழங்களும், அவ்வவை யுண்டாகக் கூடிய ருதுக்களில் மாத்திர மன்றி, மரங்களில் எல்லா ருதுக்களிலும் உண்டாகுவனவாயின ; மேகம், வேண்டிய காலங்களில் மழை

பெய்துகொண்டும், காற்று எப்போதும் இனிதாக வீசிக்கொண்டு மிருந்தன ; இவைகட்குக்காரணம், ராமராஜ்யமே. ॥ 98 ॥

**ब्राह्मणाः क्षत्रिया वैश्याश्शूद्रा लोभविवर्जिताः ।**
**स्वकर्मसु प्रवर्तन्ते तुष्टाः स्वैरेव कर्मभिः ॥ ९९ ॥**

ப்ராஹ்மணா: க்ஷத்ரியா வைஶ்யாஶ்ஶூத்ரா லோபவிவர்ஜிதாः ।
ஸ்வகர்மஸு ப்ரவர்த்தந்தே துஷ்டாः ஸ்வைரேவ கர்மபிः ॥ 99 ॥

[ப - ரை.] ப்ராஹ்மணாः - அக்ரவர்ணஸ்த்தர்கள், க்ஷத்ரியா: - க்ஷத்திரியர்கள், வைஶ்யா: - வைஶ்யர்கள், ஶூத்ரா: - நாலாவது வர்ணஸ்த்தர்கள், (ஆகிய இவர்கள்), லோபவிவர்ஜிதா: - பேராசை யற்றவர்களாய், ஸ்வைः ஏவ - தங்கள் தங்களுக்கே உரிய, கர்மபிः - லௌகிக வைதிக கர்மங்களினால், துஷ்டா: - ஸந்தோஷமடைந்தவராய், ஸ்வகர்மஸு - தங்கள் தங்கள் தொழில்களில் தானே, ப்ரவர்த்தந்தே - யத்னிப்பவரானார்கள்.

[வி - ம்.] :—ப்ராஹ்மணாः இத்யாதி. எல்லாவர்ணஸ்த்தர்களும் தங்கள் தங்கட்கு உரிய த்ரவ்யார்ஜநோபாயமான லௌகிக கார்யங்களைச் செய்து த்ரவ்யங்களை ஆர்ஜித்தார்களேயொழிய, ஒரு வர்ணஸ்த்தருடைய த்ரவ்யார்ஜந கார்யத்தை மற்றொரு வர்ணஸ்த்தர் செய்யவில்லை. இதற்கு ஹேது என்னவெனில்,-லோபவிவர்ஜிதா: - பேராசை இல்லாமையென்கை. இவ்வண்ணமே கீழ்வர்ணஸ்த்தர்கள் வைதிக கர்மங்களில் மேல்வர்ணஸ்தரின் கார்யங்களைத் தாங்கள் செய்து உயரவேண்டுமென்று ஆசைப்படவில்லை. துஷ்டா: ஸ்வைரேவ கர்மபி: - தங்களுக்கு உரிய கார்யங்களினாலேயே திருப்தியையடைந்திருந்தார்கள். ॥ 99 ॥

**आसन् प्रजा धर्मरता रामे शासति नानृताः ।**
**सर्वे लक्षणसंपन्नाः सर्वे धर्मपरायणाः ॥ १०० ॥**

ஆஸந் ப்ரஜா தர்மரதா ராமே ஶாஸதி நாந்ருதா: ।
ஸர்வே லக்ஷணஸம்பந்நா: ஸர்வே தர்மபராயணா: ॥ 100 ॥

[ப - ரை.] ராமே ஶாஸதி - ராமன் பரிபாலிக்கையில், ப்ரஜாः - ஜநங்கள், தர்மரதா: - தர்மாநுஷ்டாநத்திலே விருப்ப முடையவர்களாகவும், நாந்ருதாः-பொய் யில்லாதவர்களாகவும், ஆஸந் - இருந்

தார்கள். ஸர்வே - எல்லாஜநங்களும், லக்ஷண ஸம்பந்நா: - (தங்களுக்குரிய) லக்ஷணங்களோடு கூடினவர்களாகவும், தர்மபராயணா: - தர்மத்தையே ப்ரயோஜநமாக வுடையவர்களாகவும், ஆஸந் - இருந்தார்கள்.

[வி ம்.]:—ஆஸந் இத்யாதி—பெருமாள் திருவரசுசெய்யுமளவில் ஜனங்கள் தர்மாநுஷ்டாநத்திலே பக்தியுள்ளவர்களாயும் பொய் சொல்லாதவர்களாயும் இருந்தார்கள்: இதற்குஹேது என்னவெனில், தார்மிகரான பெருமாள் ராஜ்யம்பண்ணுகையே. 'யதா ராஜா ததாப்ரஜா:' என்கிறபடியே ராஜாவைப் போலேயிறே ஜநங்கள் இருப்பது. லக்ஷண ஸம்பந்நா:—வர்ணாஶ்ரமங்களுக்குள்ள சிஹ்நங்களோடிருந்தார்களென்கை. அன்றிக்கே, பகவத்தாஸ்ய லக்ஷணங்களோடு கூடியிருந்தார்களென்றும் கொள்ளுவர்கள். தர்மபராயணா:—ஸ்வயம் ப்ரயோஜநமாகத் தர்மத்தை அநுஷ்டித்தார்கள். இத்தால், கைங்கர்ய ரூபமாகச் செய்தார்களென்றதாயிற்று. || 100 ||

दशवर्षसहस्राणि दशवर्षशतानि च ।
भ्रातृभिस्सहितः श्रीमान् रामो राज्यमकारयत् ॥ १०१ ॥

தஶவர்ஷஸஹஸ்ராணி தஶவர்ஷஶதாநி ச ।
ப்ராத்ருபிஸ்ஸஹிதஃ ஶ்ரீமாந் ராமோ ராஜ்யமகாரயத் ॥ 101 ॥

[ப - ரை.] தஶவர்ஷஸஹஸ்ராணி - பதினாயிரம்வருஷங்கள், தஶவர்ஷஶதாநிச - பத்து நூறு வருஷங்கள், ஸ்ரீமாந் - மஹாஸம்பத்தையுடைவரான, ராம: - பெருமாள், ப்ராத்ருபி: ஸஹித: - ப்ராதாக்களோடு கூடி, ராஜ்யம் - ராஜ்யபாலநத்தை, அகாரயத் - செய்தார்.

[வி - ம்.]:—தஶவர்ஷஸஹஸ்ராணி இத்யாதி - பெருமாள் மஹாஸம்பத்துடன் கூடியிருந்து பதினோராயிரம் ஸம்வத்ஸரங்கள் ப்ராதாக்களோடுகூட, ராஜ்யத்தைப் பரிபாலித்தார். இப்பதினோராயிரம் வருஷங்களிலும் பிராட்டியுடன்கூடியிருந்து ராஜ்யத்தைப் பரிபாலித்தாரோவெனில், தாம் ராஜ்யமடைந்து வெகு காலஞ்சென்ற பின் பிராட்டியை ஏதோ ஒரு வ்யாஜத்தால் காட்டிலே போகவிட்டார். இப்படியிருந்தாலும், பிராட்டி இவ்விபூதியில் எழுந்தருளியிருந்தவளவும், அவளுடையகடாக்ஷம் இவரிடத்தில் இருந்தமையால் மஹாஸம்பத்துடன் கூடியிருந்தாரென்பதற்குத் தடை

யில்லை. (ப்ராத்தயாதேவோதேவத்வம் அஶ்நுதே) என்கிறபடியே பிராட்டியாலன்றோ பெருமாள் சிறப்படைவது. ॥ 101 ॥

**धन्यं यशस्यमायुष्यं राज्ञां च विजयावहम् ।**
**आदिकाव्यमिदं त्वार्षं पुरा वाल्मीकिना कृतम् ॥**
**यः पठेच्छृणुयाल्लोके नरः पापाद्विमुच्यते ॥ १०२॥ ॥**

தந்யம் யஶஸ்யமாயுஷ்யம் ராஜ்ஞாம் ச விஜயாவஹம் ।
ஆதிகாவ்யமிதம் த்வார்ஷம் புரா வால்மீகிநா க்ருதம் ॥
யஃ படேச்ச்ருணுயால்லோகே நரஃ பாபாத்விமுச்யதே ॥102½॥

[ப - ரை.] தந்யம் - தனத்தைக் கொடுக்கக்கூடியதும், யஶஸ்யம் - கீர்த்தியையுண்டாக்குவதும், ஆயுஷ்யம் - ஆயுஸ்ஸையுண்டு பண்ணுவதும், ராஜ்ஞாம் ச - ராஜாக்களுக்கோ, விஜய ஆவஹம் - ஜயத்தைக் கொடுக்கக்கூடியதும், ஆதிகாவ்யம் - முதல் காவ்யமும், ஆர்ஷம் - வேதஸம்பந்தமுள்ளதும், வால்மீகிநா புரா க்ருதம் - வால்மீகிமஹர்ஷியினால் முன்பு செய்யப்பட்டதுமான, இதம் காவ்யம் - இந்த ராமாயண காவ்யத்தை, லோகே - உலகத்தில், யஃ - எவன், படேத் - படிக்கின்றானோ, ஶ்ருணுயாத் - கேட்கின்றானோ, ஸஃ நரஃ - அந்த மனுஷ்யன் பாபாத் - பாபத்திலிருந்து, விமுச்யதே - விடப்படுவான்.

[வி - ம்.] :—இந்த ஶ்லோகந்தொடங்கி முடியும்வரையில் ஸ்ரீராமாயணபடந ஶ்ரவணங்களுக்குப் பலங்களைச் சொல்லுகிறார்: தந்யம் - 'தநகணம்லப்தா' என்றபடி தநத்தையடைந்தவனை இப்பதம் காட்டுவதாயிருந்தாலும், ஆர்ஷமாகையாலே தநத்தைக் கொடுப்பதையும் காட்டுகிறது. ஆர்ஷம் - ருஷிஶப்தத்தால் வேதத்தைச் சொல்லி, தத்ஸம்பந்தி ஆர்ஷம் என்பதாய், வேதோபப்ருஹ்மணம் என்றதாயிற்று. புரா வால்மீகிநா க்ருதம் - ஸர்வகவிகளுக்கும் முன்னே வால்மீகி என்கிற மஹாகவியாற் செய்யப்பட்டது. ஆகவே, இதற்கு ஆதிகாவ்யம் என்று பேராயிற்று. அன்றிக்கே, புரா க்ருதம் என்றதால் அவதாரத்துக்கு முன்னே செய்யப்பட்டது என்று சிலர் பொருள்கொண்டார்கள். அது, ப்ரமாண விருத்தம், எவ்வாறெனில்? 'ப்ராப்த ராஜ்யஸ்ய ராமஸ்ய வால்மீகிர் பகவாந் ரிஷி:, சகார சரிதம் க்ருத்ஸ்நம் விசித்ரபதமாத்ம

வாங்' என்று பெருமாள் ராஜ்யத்தைப் பெற்றுப் பரிபாலநஞ் செய்யுமளவில் இக்காவ்யத்தை வால்மீகிபகவாந் செய்ததாக ப்ரமாண மிருக்கின்றதிறே. ஸ்ரீஸம்க்ஷேப ராமாயணத்திலும் நாரதரை வால்மீகிபகவான் பரஸ்நம்பண்ணினபோதும் 'கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே—இக்காலத்தில் இந்த உலகில் எவர் குணவானாக இருக்கின்றார்?' என்றிறே கேட்டது. ஆகவே, அவதாரத்துக்கு முன்னே என்பது யுக்தமன்று. வால்மீகிநா என்றது ஸ்வப்ரஸம்ஸைக்காக வல்ல: ஆப்திக்கு உடலாகச் சொன்னவித்தனை: "குருகூர்ச்சடகோபன்சொன்ன" என்றாற்போல. இந்தராமாயணத்தின் படந ஸ்ரவணங்களுக்குப் பலம், ஸர்வபாபநிவ்ருத்தி. இதற்கு மேல் வரக்கூடிய ஆநந்தம் தன்னடையே வருமிறே. ப்ரதிபந்தகம் கழிந்தால், இஷ்டப்ராப்திக்குச் சொல்லவேண்டுமோ? பாபாத்-இப்பதம் ஜாத்யேகவசநம்: ஸர்வபாபங்களிலிருந்து என்று அர்த்தம். அதாவது பகவத்ப்ராப்திப்ரதிபந்தமாக எவ்வோபாபங்களுண்டோ அவ்வோபாபங்களிலிருந்து என்கை: அன்றிக்கே, பாபஸப்தம் புண்யத்துக்கும் உபலக்ஷணமாய் 'உபே வித்வாந்புண்யபாபேவிதூய நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி' என்கிறபடியே புண்யபாபங்களிரண்டையும்விட்டு கர்மஸம்பந்தமற்று மோக்ஷம் பெறுவன் என்றபடி. ஸ்ரீராமாயண படநஸ்ரவணங்களால், மோக்ஷபர்யந்தமான பலம் கைகூடுமென்றதாயிற்று. ॥ 102½ ॥

**पुत्रकामस्तु पुत्रान्वै धनकामो धनानि च ।**
**लभते मनुजो लोके श्रुत्वा रामाभिषेचनम् ।**
**महीं विजयते राजा रिपूंश्चाप्यधितिष्ठति ॥ १०४ ॥**

புத்ரகாமஸ்து புத்ராந் வை தநகாமோ தநாநி ச ।
லஹதே மநுஜோ லோகே ஸ்ருத்வா ராமாபிஷேசநம் ।
மஹீம் விஜயதே ராஜா ரிபூம்ஸ்சாப்யதிதிஷ்டதி ॥ 104 ॥

[ப - ரை.] புத்ர காமஃ - பிள்ளை வேணுமென்கிற இச்சையுடைய, மநுஜ: - மனிதன், புத்ராந் - பிள்ளைகளையும், தந காம: - தநம் வேணுமென்கிற ஆசை யுடையவன், தநாநி ச - தநங்களையும், லோகே - இந்த உலகத்தில், லஹதே - அடைகிறான்: ராஜா - க்ஷத்

ரியன், ராம அபிஷேசநம் - பெருமாளுடைய பட்டாபிஷேகத்தை, ஶ்ருத்வா - கேட்டு, மஹீம் - பூமியை, விஜயதே - ஜயிக்கிறான். ரிபூம்ஶ்சாபி - ஶத்ருக்களையும், அதிதிஷ்ட்டதி - அதிக்ரமித்திருப்பன்.

[வி - ம்.] :—புத்ரகாமஸ்து இத்யாதி - புத்ரகாமனும் தநகாமனும் ஸ்ரீராமாயணத்தில் ஏகதேசமான திருவபிஷேக ஸர்க்கத்தைப் படிப்பர்களாகில் புத்ரதநங்களை அடைவர்கள். து காரம், புத்ரபதத்தோடு சேர்ந்து, விலக்ஷண புத்ரர்களை யடைவர்களென்ற பொருளைத் தரும். வைலக்ஷண்யமாவது, ராமாதிகளைப்போலே யிருக்கை. அப்படியே க்ஷத்ரியன் இந்த ராமாபிஷேகத்தைக் கேட்டால், ஶத்ருக்களையும் வென்று பூமியை யெல்லாம் ஸ்வாதீநமாக ஆளுவன். ‖ 104 ‖

राघवेण यथा माता सुमित्रा लक्ष्मणेन च ।
भरतेनैव कैकेयी जीवपुत्रास्तथा स्त्रियः ॥ १०५ ॥

ராகவேண யதா மாதா ஸுமித்ரா லக்ஷ்மணேந ச ।
஭ரதேநைவ கைகேயீ ஜீவபுத்ராஸ்ததா ஸ்த்ரிய: ‖ 105 ‖

[ப - ரை.] மாதா - (ராம) மாதாவான கௌஸல்யை, ராகவேண - பெருமாளால், யதா - எப்படியோ, ஸுமித்ரா - ஸுமித்ரை, லக்ஷ்மணேந - லக்ஷ்மணனால், யதா - எப்படியோ, கைகேயீ - கைகேயி, பரதேந - பரதனாலே, யதா ஏவ - எப்படியோ, ததா - அப்படியே, ஸ்த்ரிய: - ஸ்த்ரீகள், ஜீவபுத்ரா: - ஜீவித்திருக்கும் புத்ரர்களை யுடையவர்களாக, (ஆஸந்) - (ஆவார்கள்.)

[வி - ம்]:—ராகவேண இத்யாதி - இதில் ஸ்திரீகள் ஸ்ரீராமாயணத்தைக் கேட்பார்களாகில், ஸ்ரீராமாதிகளைப்போல் தீர்க்காயுஸ்ஸையுடைய புத்ரர்களை அடைவர்களென்றது. இங்கு, மாதா என்று சொன்ன இது, ஸ்ரீகௌஸல்யையைக் காட்டுமோவென்னில், ரக்ஷகனுடைய மாதாவாகையால் ரக்ஷ்யவர்க்கத்துக்கெல்லாம் 'மாதா' என்று கௌஸல்யையைக் காட்டும். ‖ 105 ‖

श्रुत्वा रामायणमिदं दीर्घमायुश्च विन्दति ।
रामस्य विजयं चैव सर्वमक्लिष्टकर्मणः ॥ १०६ ॥

ஶ்ருத்வா ராமாயணமிதம் தீர்க்கமாயுஶ்ச விந்ததி ।
ராமஸ்ய விஜயம் சைவ ஸர்வமக்லிஷ்டகர்மண: ॥ 106 ॥

[ப - ரை.] (மநுஜ:) - (மனிதன்), அக்லிஷ்டகர்மண: - க்லேஶப்படாமல் கார்யங்களைச் செய்யுமவரான, ராமஸ்ய - பெருமாளுடைய, விஜயம் - ஜயத்தைப்ரதிபாதிக்கிற, இதம் ராமாயணம் - இந்த ராமாயணத்தை, ஶ்ருத்வா - கேட்டு, தீர்க்கம் ஆயு:—தீர்க்காயுஸ்ஸையும், ஸர்வம் சைவ - மற்றும் அபீஷ்டத்தையும், விந்ததி - அடைகிருன்.

[வி - ம்.]:—ஶ்ருத்வா இத்யாதி-அநாயாஸமாய்க் கார்யங்களைச் செய்யவல்லவரான பெருமாளுடைய ஜயப்ரதிபாதகமான இந்த ஸ்ரீராமாயணத்தைக் கேட்டால், மனிதன் தீர்க்காயுஸ்ஸையும், மற்றும் அபீஷ்டங்களையு மடைவன் என்று தாத்பர்யம்; அன்றிக்கே, ராமாயணத்தைக்கேட்டுத் தீர்க்காயுஸ்ஸையும், ராமவிஜய மாஹாத்ம்யத்தைக்கேட்டு மற்ற அபீஷ்டங்களையும் அடைவன் என்றும் ஒரு தாத்பர்யமுண்டு. ॥ 106 ॥

शृणोति य इदं काव्यमार्षं वाल्मीकिना कृतम् ।
श्रद्दधानो जितक्रोधो दुर्गाण्यतितरत्यसौ ॥ १०७ ॥
समागमं प्रवासान्ते लभते चापि बान्धवैः ।
प्रार्थितांश्च वरान् सर्वान् प्राप्नुयादिह राघवात् ॥ १०८ ॥

ஶ்ருணோதி ய இதம் காவ்யமார்ஷம் வால்மீகிநா க்ருதம் ।
ஶ்ரத்ததாநோ ஜிதக்ரோதோ துர்காண்யதிதரத்யஸௌ ॥107॥
ஸமாகமம் ப்ரவாஸாந்தே லபதே சாபி பாந்தவை: ।
ப்ரார்த்திதாம்ஶ்ச வராந் ஸர்வாந் ப்ராப்நுயாதிஹ ராகவாத் ॥
॥ 108 ॥

[ப - ரை.] வால்மீகிநா க்ருதம் - வால்மீகியினுற் செய்யப்பட்டதாய், ஆர்ஷம் - வேதஸம்பந்தியான, இதம் காவ்யம் - இந்த காவ்யத்தை, ய: - எவன், ஶ்ரத்ததாந: - நம்பிக்கை யுடையவனுய், ஜிதக்ரோத: - கோபத்தை ஜயித்தவனுய், ஶ்ருணோதி - கேட்கிருனே, அஸௌ - இவன், துர்க்காணி - தாரித்ர்யாதி கஷ்டங்களை, அதிதரதி - மிகவும் கடக்கிருன்; ப்ரவாஸாந்தே - தேஶாந்தர வாஸத்தின் முடி

வில், பாந்தவை: - பந்துக்களுடன், ஸமாகமம்-சேர்க்கையை, லஹதே-அடைகிறான். ப்ரார்த்திதாந் ச - வேண்டப்படுமவையான, ஸர்வாந் வராந் - எல்லா வரங்களையும், இஹ - இந்த லோகத்தில், ராகவாத் - பெருமாளிடத்திலிருந்து, ப்ராப்நுயாத் - அடைவான்.

[வி - ம்.] :—இவ்விரண்டு ஶ்லோகங்களும் ஏகாந்வயங்கள். காவ்யம் என்கையாலே த்வந்யர்த்தத்தில் ப்ராதாந்யம்தோற்றுகிறது. ய:-எவனாகிலும் ; கேட்பதில் குல சரண கோத்ராதிகள் அவிவக்ஷிதம்: ஶ்ரவணத்தில் ஶ்ரத்தையே வேண்டுவது என்றபடி. ஜிதக்ரோத: - அஸூயையில்லாமையைக் காட்டுகிறது. இத்தால், ப்ரதிபாத்யமான ராமாதிவிஷயத்திலாவது ப்ரதிபாதகமான ராமாயணத்திலாவது வக்தாவான வால்மீகியிடத்திலாவது அஸூயையுண்டாமாகில், இது கார்யகரமாகாது என்கை. ஆக, ஸ்ரீராமாயணத்தை ஶ்ரத்தையுடன் கேட்பவர்களுக்கு இச்சாநுகுணமாக தாரித்ர்யம்நீங்குதல், ஸர்வ பந்துஸங்கம், அபீஷ்டப்ராப்தி இவை யுண்டாகும் என்றபடி. ||108||

**श्रवणेन सुरास्सर्वे प्रीयन्ते संप्रशृण्वताम् ।**
**विनायकाश्च शाम्यन्ति गृहे तिष्ठन्ति यस्य वै ॥ १०९ ॥**

ஶ்ரவணேந ஸுராஸ்ஸர்வே ப்ரீயந்தே ஸம்ப்ரஶ்ருண்வதாம் ।
விநாயகாஶ்ச ஶாம்யந்தி க்ருஹே திஷ்டந்தி யஸ்ய வை ॥ 109 ॥

[ப - ரை.] ஶ்ரவணேந-ஸ்ரீராமாயணஶ்ரவணத்தாலே, ஸர்வே ஸுரா: - எல்லாத்தேவதைகளும், ப்ரீயந்தே - ப்ரீதியையடைகின்றனர். ஸம்ப்ரஶ்ருண்வதாம் - (ராமாயணத்தைக்) கேட்பவர்களுக்குள், யஸ்ய - எவனுடைய, க்ருஹே - வீட்டில், விநாயகா: - (ஶ்ரேயஸ்ஸுக்கு) விக்நகாரிகளான பூதங்கள், திஷ்டந்தி - இருக்கின்றனவோ, தே - அவைகள், ஶாம்யந்தி - ஶாந்தியையடைகின்றன.

[வி - ம்] :—ஶ்ரவணேந இத்யாதி—ஸ்ரீராமாயணத்தைக் கேட்பதில் ஸகலதேவதைகளுக்கும் ப்ரீதியுண்டாகும். கேட்பவன் க்ருஹத்தில் துஷ்டபூதங்கள் இருந்தால் அவைகள் ஓடிப்போகும் என்றதாயிற்று. இத்தால், அங்கியாயிருந்துள்ள பகவானுக்கு ப்ரீதிகரமானதே அங்கபூதரான தேவதைகள் எல்லோருக்கும் ப்ரீதிகரம் என்றபடி. || 109 ||

**विजयेत महीं राजा प्रवासी स्वस्तिमान् व्रजेत् ।**
**स्त्रियो रजस्वलाः श्रुत्वा पुत्रान् सूयुरनुत्तमान् ॥ ११० ॥**

விஜயேத மஹீம் ராஜா ப்ரவாஸீ ஸ்வஸ்திமாந் வ்ரஜேத் ।
ஸ்த்ரியோ ரஜஸ்வலா: ஶ்ருத்வா புத்ராந் ஸூயுரநுத்தமாந் ॥

[ப - ரை] ஶ்ருத்வா - (ஸ்ரீராமாயணத்தைக்)கேட்டு, ராஜா - அரசன், மஹீம் - பூமியை, விஜயேத - ஜயிப்பன்: ப்ரவாஸீ - தேசாந்தரஞ்சென்றவன், ஸ்வஸ்திமாந்-க்ஷேமத்தையுடையவனாக, வ்ரஜேத்-(தன்னூருக்கு)மீள்வன்: ரஜஸ்வலா: - ருதுஸ்நாநஞ்செய்து கொண்டிருக்கிற, ஸ்த்ரிய: - ஸ்த்ரீகள், அநுத்தமாந் - ஶ்ரேஷ்டர்களான, புத்ராந் - பிள்ளைகளை, ஸூயு: - பெறுவர்கள்.

[வி - ம்.]:—விஜயேத இத்யாதி—இந்த ஸ்ரீராமாயணத்தைக் கேட்ட க்ஷத்ரியன் தன்ஸ்வாதீநமாயிருக்கும் பூமியைக்காட்டிலும் அதிகமான பூமியை அடைவன். தேசாந்தரம் போனவன் க்ஷேமத்தோடு திரும்பிவருவன். ஶ்ருத்வா என்பது இவ்விரண்டிடங்களிலும் அந்வயிக்கிறது. ஸ்திரிய: ரஜஸ்வலா: என்று அஸ்பர்ஶியாக இருக்கும்பருவத்தைக் காட்டுகிறதன்று; கர்ப்பதாரணயோக்யமான ருதுஸ்நாநகாலத்திலிருக்கும் ஸ்த்ரீகள் என்றபடி. அக்காலத்தில் பக்தியுடன் ஸ்த்ரீகள் கேட்பர்களாகில், குணவான்களும் பாக்யவான்களுமான புத்ரர்களைப் பெறுவார்கள் என்றதாயிற்று. ॥ 110 ॥

**पूजयंश्च पठंश्चेममितिहासं पुरातनम् ।**
**सर्वपापात् प्रमुच्येत दीर्घमायुरवाप्नुयात् ॥ १११ ॥**

பூஜயம்ஶ்ச படம்ஶ்சேமமிதிஹாஸம் புராதநம் ।
ஸர்வபாபாத் ப்ரமுச்யேத தீர்க்கமாயுரவாப்நுயாத் ॥ 111 ॥

[ப - ரை.] இமம் - இந்த, புராதநம் - அநாதிஸித்தமான, இதிஹாஸம்-ஸ்ரீராமாயணத்தை, பூஜயந் ச-ஆராதித்துக்கொண்டும், படந் ச-படித்துக்கொண்டுமிருக்கிறவன், ஸர்வ பாபாத் - எல்லாப்பாபங்களிலிருந்தும், விமுச்யேத-விடுபடுவன்: தீர்க்கம் ஆயு:-தீர்க்காயுஸை, அவாப்நுயாத் - அடைவன்.

[வி - ம்.]:—பூஜயந் இத்யாதி—இந்த ஸ்ரீராமாயணந்தன்னை ஆராதித்துக்கொண்டு இதைப்படிக்கிறவன் ஸர்வபாபங்களிலிருந்தும்

விடுபட்டு, தீர்க்காயுஷ்மானுய் இருப்பானென்றபடி. இத்தால், ராம பக்தி விரோதியான பாபங்கள் கழிந்து ராமகுணுநுபவத்துக்கு உறுப்பாக இவ்விபூதியிற் சிலகாலமிருந்து வாழ்வனென்றதாயிற்று. இது, உபலக்ஷணம். ஆராதியாமல் படித்தாலும், படியாமல் ஆராதித்தாலும் கீழ்ச்சொல்லிய பலமுண்டு. 'நர: பாபாத் விமுச்யதே' என்று முன் ஒரு ஶ்லோகத்திலே சொல்லிற்றே என்னில்? நம்பிக்கைக்காக: லோக ஹிதத்தைக் கீழ்ச்சொல்லியதையே மீளவும் சொல்லுகிறுர் மஹர்ஷி என்று கண்டு கொள்வது. ॥ 111 ॥

**प्रणम्य शिरसा नित्यं श्रोतव्यं क्षत्रियैर्द्विजात् ।**
**ऐश्वर्यं पुत्रलाभश्च भविष्यति न संशयः ॥ ११२ ॥**

ப்ரணம்ய ஶிரஸா நித்யம் ஶ்ரோதவ்யம் க்ஷத்ரியைர்த்விஜாத் ।
ஐஶ்வர்யம் புத்ரலாபஶ்ச பவிஷ்ததி ந ஸம்ஶய: ॥ 112 ॥

[ப - ரை.] க்ஷத்ரியை: - க்ஷத்ரியர்களாலே, ஶிரஸா - தலையினுல், ப்ரணம்ய - வணங்கி, த்விஜாத் - ப்ராஹ்மணனிடமிருந்து, நித்யம் - நிச்யமாக, (இந்த இதிஹாஸம்), ஶ்ரோதவ்யம் - கேட்கப்படவேண்டும்; (அப்படிக்கேட்கப்பட்டால்), ஐஶ்வர்யம் - ஸம்பத்தும், புத்ரலாப: ச-ஸந்தானலாபமும், பவிஷ்யதி - உண்டாகும்; ந ஸம்ஶய:- ஸந்தேஹமே யில்லை.

[வி - ம்.]:—ப்ரணம்ய இத்யாதி-க்ஷத்ரியை:-இதர வர்ணங்களுக்கும் உபலக்ஷணம். ஆக, இதரவர்ணஸ்தர்கள் அக்ரவர்ணஸ்தர்களைத் தலையால் வணங்கி அவரிடத்தில் ஸ்ரீராமாயணத்தைக் கேட்கவேண்டுமென்றபடி. அன்றிக்கே, ப்ரணம்ய - பெருமாளை வணங்கி என்னவுமாம். இத்தால், உபதேஶம்பெறும்போது ஆசார்யனையாகிலும் ஆசார்யனுக்குப்ரதியாக எம்பெருமானையாகிலும் வணங்கவேண்டுமென்கை காட்டப்பட்டது. இங்கே ப்ராஹ்மணேதரர்கள் பிராமணர்களிடத்திலிருந்தே இந்த ராமாயணத்தைக் கேட்கவேண்டுமென்கிற இது, நியமவிதி. இத்தால், தங்களுக்குள் யாரிடத்திலாவது தங்களுக்குக் கீழ்பட்டவர்ணஸ்தரிடமாவது இதைக் கேட்கக்கூடாதென்றதாயிற்று. அப்படி க்ரமத்திலே கேட்கப்பெற்றுலொழிய ஐச்வர்யமும் புத்ரலாபமும் கைபுகுவதன்று. இஶ்லோகத்தில், இரண்டை

யும் சேர்த்துச்சொன்னதால் புத்ரனில்லாத ஐஸ்வர்யலாபமும் ஐஸ்வர்யமில்லாத புத்ரலாபமும் புருஷார்த்தமன்று என்கை ஸூசிதம்.

**रामायणमिदं कृत्स्नं शृण्वतः पठतस्सदा।**
**प्रीयते सततं रामस्स हि विष्णुस्सनातनः॥**
**आदिदेवो महाबाहुर्हरिर्नारायणः प्रभुः॥ ११३॥ ॥**

ராமாயணமிதம் க்ருத்ஸ்நம் ஶ்ருண்வத: படதஸ்ஸதா ।
ப்ரீயதே ஸததம் ராமஸ் ஸ ஹி விஷ்ணுஸ்ஸநாதந: ॥
ஆதிதேவோ மஹாபாஹுர் ஹரிர்நாராயண: ப்ரபு: ॥ $113\frac{1}{2}$ ॥

[ப - ரை.] இதம் - இந்த, க்ருத்ஸ்நம் - பூர்ணமான, ராமாயணம் - ஸ்ரீராமாயணத்தை, ஸதா - எப்பொழுதும், ஶ்ருண்வத: - கேட்பவன்விஷயமாகவும், படத: - படிக்கிறவன்விஷயமாகவும், ராம: - பெருமாள், ஸததம் - எப்பொழுதும், ப்ரீயதே - ப்ரீதியடைகின்றார்: ஸ: - அந்தப்பெருமாள், ஸநாதந: - அநாதிஸித்தராய், விஷ்ணு: - எங்கும் வ்யாபித்திருப்பவராய், ஆதிதேவ: - தேவர்களுக்கெல்லாம் முதல்காரணமாய், மஹாபாஹு: - நீண்ட கைகளையுடையவராய், ஹரி: - பாபத்தை ஹரிப்பவரான, நாராயண: - நாராயணன்என்கிற, ப்ரபுர்ஹி - ஸ்வாமியன்றோ?

[வி - ம்]:—கீழ்ச்சொல்லிய பலங்களுக் கெல்லாம் உத்தமமான பலத்தைச் சொல்லுகிறார் மஹர்ஷி. அதாவது ராமனுடைய ப்ரீதி. ராமாயணம் இத்யாதி - ஸம்பூர்ணமான இந்த ராமாயணத்தை எப்பொழுதும் கேட்பவன்விஷயத்திலும் படிப்பவன்விஷயத்திலும் பெருமாள் ப்ரீதி அடைகிறார். இதுவே, கீழ்ச்சொல்லிய பலங்களெல்லாவற்றிற்கும் உத்தமமானது. இந்த ராமப்ரீதி உண்டானுலிறே, மற்றை எல்லாப் பலங்களும் உண்டாகக்கடவன. இதுவே, இதர பலங்களுக்கு ஸாதநமும் ஸ்வயம்போக்யமாகையாலே ப்ராப்யமுமாயிருப்பது. இவ்வண்ணமிருப்பதற்கு ஹேதுவைச் சொல்லுகிறார் மேல் ஸஹி விஷ்ணு: ஸநாதந: என்று தொடங்கி. ராமன் ஸர்வஶேஷியாய் எங்கும் நிறைந்த நாராயணனுகையாலே இவருடைய ப்ரீதிக்கு மேற்பட்ட வேறு பலமும் ஸாதநமு முண்டோ என்றபடி. இதில், நாராயணபதத்தாலே தேவதாந்தர நிஷேதஞ் சொல்லப்பட்டது. இப்பதம், வேறு வ்யக்தியைக் காட்டக்கடவ

தன்றே. ப்ரபு ஶப்தத்தாலே, நியாமகாந்தரமில்லை யென்கை ஸூசிதம். ஆக, இப்படி பெருமாள் ஸர்வேஶ்வரனுகையாலே இவர் அநுக்ரஹத்துக்கு மேற்பட்ட பலமில்லை என்றதாயிற்று. ॥ 113½ ॥

**कुटुम्बवृद्धिं धनधान्यवृद्धिं स्त्रियश्च मुख्याःसुखमुत्तमं च ।**
**श्रुत्वा शुभं काव्यमिदं महार्थं प्राप्नोति सर्वां भुवि चार्थसिद्धिम् ॥**

குடும்பவ்ருத்திம் தநதாந்யவ்ருத்திம்
ஸ்த்ரியஶ்ச முக்யாஸ்ஸுகமுத்தமம் ச ।
ஶ்ருத்வா ஶுபம் காவ்யமிதம் மஹார்த்தம்
ப்ராப்நோதி ஸர்வாம் புவி சார்த்தஸித்திம் ॥ 114½ ॥

[ப - ரை.] மஹார்த்தம் - சிறந்த அர்த்தங்களையுடையதான, இதம் - இந்த, ஶுபம் - ஶுபமான, காவ்யம் - ஸ்ரீராமாயணத்தை, ஶ்ருத்வா - கேட்டு, (நரஃ)—(மனிதன்), குடும்ப வ்ருத்திம் - புத்ர பௌத்ராதிகளுடைய அபிவ்ருத்தியையும், தநதாந்ய வ்ருத்திம் - (ஸ்வர்ணம் முதலிய) தநமென்ன (நெல் முதலிய) தான்யங்களென்ன இவற்றின் அபிவ்ருத்தியையும், முக்யா: - ஶ்ரேஷ்டைகளான, ஸ்தரிய: ச - ஸ்த்ரீகளையும், ஸுகம் - ஆநந்தத்தையும், உத்தமம் ஸுகம் ச - நிரதிஶயாநந்தத்தையும், புவி - பூலோகத்தில், ஸர்வாம் - எல்லாவிதமான, அர்த்தஸித்திம் ச - ப்ரயோஜந ஸித்தியையும், ப்ராப்நோதி - அடைகிறுன்.

[வி - ம்] :—குடும்ப வ்ருத்திம் இத்யாதி—இந்த ராமாயண ஶ்ரவணம் குடும்ப வ்ருத்தியையும், அது உண்டாமாகில் அதற்குத் தக்கபடி தாரகபோஷக போக்யங்கள் இருக்கவேண்டுகையாலே அவற்றிற்குவேண்டிய தநதாந்யாபிவ்ருத்திகளையும் பண்ணிக்கொடுக்கு மென்கை. ஸ்திரியஶ்ச முக்யா:-ஸ்த்ரீகளுக்கு முக்யத்வம், ரூபத்தாலும் குணத்தாலும் குலத்தாலும் பாதிவ்ரத்யத்தாலுமாம். இவ்வளவாக, ஐஹிகபோகம் சொல்லிற்று. மேல் ஸுகம் என்று கைவல்யாநந்தத்தையும், உத்தமம் என்று மோக்ஷாநந்தத்தையும், ஶ்ரவணபலமாகக் காட்டுகிறது. முடிவில் புவி சார்த்த ஸித்திம் என்று ப்ரஷ்டைஶ்வர்யஸித்தியைச் சொல்லுகிறது. ஆக, அபூர்வைஶ்வர்யம், ப்ரஷ்டைஶ்வர்யம், கைவல்யம், பகவத்ப்ராப்தி ஆகிற நான்கு புருஷார்த்தங்களும் இந்த ஸ்ரீராமாயண ஶ்ரவணத்துக்குப்

பலம். இத்தால், 'சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர் ஜுந| ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீச ஹரதர்ஷஹ' என்று ஸ்ரீகீதையில் பகவான் அருளிச்செய்த நான்கு அதிகாரிகளும் ஸூசிதர்களாயிற்று. ஆக, சதுர்வித பலஸித்தி சொல்லிற்றாயிற்று. இந்த ஶ்லோகத்திலே ஶுபம் என்றும் மஹார்த்தம் என்றும் காவ்யத்துக்கு விஶேஷண மிட்டதால், ஶப்த ஸௌஷ்டவமும், அர்த்த பௌஷ்கல்யமும் காட்டப்பட்டன. அன்றிக்கே, ஶுபம்— நல்ல லக்ஷணத்தோடு கூடியது என்றும் பொருள் உண்டு. ॥ 114½ ॥

**आयुष्यमारोग्यकरं यशस्यं सौभ्रातृकं बुद्धिकरं सुखं च ।**
**श्रोतव्यमेतन्नियमेन सद्भिराख्यानमोजस्करमृद्धिकामैः ॥ ११५॥ ॥**

ஆயுஷ்ய மாரோக்யகரம் யஶஸ்யம்
ஸௌப்ராத்ருகம் புத்திகரம் ஸுகம் ச ।
ஶ்ரோதவ்யமேதந்நியமேந ஸத்பி
ராக்யாநமோஜஸ்கரம் ருத்திகாமை: ॥ 115½ ॥

[ப - ரை.] ஆயுஷ்யம் - ஆயுஸ்ஸை யுண்டாக்க வல்லதாய், ஆரோக்யகரம் - தேஹாரோக்ய ப்ரதமாய், யஶஸ்யம் - யஶஸ்ஸை விளைப்பதாய், ஸௌப்ராத்ருகம் - நல்ல ப்ராதாக்களுடன் கூடியிருக்கும்படியை யுண்டாக்குமதாய், புத்திகரம் - நல்ல புத்தியைக் கொடுக்குமதாய், ஸுகம் ச - ஸௌக்யகரமாய், ஓஜஸ்கரம் ச - தேஜஸ்கரமுமான, ஏதத் - இந்த, ஆக்யாநம் - சரித்ரமானது, ருத்தி காமை: - குடும்பவ்ருத்தி தநவ்ருத்தி இவற்றை விரும்புகிற, ஸத்பி: - ஸத்துக்களாலே, நியமேந - நியமத்தோடு, ஶ்ரோதவ்யம் - கேட்கப்படவேண்டும்.

[வி - ம்] :—ஆயுஷ்யம் இத்யாதி—'ஆயுராஶாஸ்தே' என்கிறபடியே நல்ல கார்யத்தைச் செய்யுமவன் தன் ஆயுஸ்ஸை முன்னம் விரும்புகையாலே ஸ்ரீ ராமாயண ஶ்ரவணாதிகளாகிற நற்காரியங்களுக்கு உபயுக்தமான ஆயுஸ்ஸை இதுவே உண்டாக்கும் என்கை. ஆரோக்யகரம் - ஆயுஸ் உண்டானாலும் ரோகியாயிருந்தால் ஸ்ரீராமாயண படநாதிகளுக்கு யோக்யனாக மாட்டான்: ஆகவே, ஆரோக்யத்தையும் இதுவே கொடுக்கும் என்கை. யஶஸ்யம் - கீழ்ச்

சொல்லிய இரண்டுபலங்களும் இவன் ஜீவித்திருக்குமளவே. கீர்த்தி, ஶரீராநந்தரமும் ஸ்திரமாயிருப்பதாகையால், அதையும் இதுவே உண்டாக்குமென்கை. சேதநரிடத்தில், ஹிதபரதையால், கீழ்ச் சொன்னபலங்களை இவர்கள் இழக்கவொண்ணுமைக்காக, ஶ்ரோதவ்யம் - கேட்கப்படவேண்டு மென்று நிர்ப்பந்தப்படுத்துகிறார் மஹர்ஷி. || 115½ ||

**एवमेतत्पुरावृत्तमाख्यानं भद्रमस्तु वः ।**
**प्रव्याहरत विस्रब्धं बलं विष्णोः प्रवर्धताम् ॥ ११६॥ ॥**

ஏவமேதத் புராவருத்தமாக்க்யாநம் ஭த்ரமஸ்து வஃ ।
ப்ரவ்யாஹரத விஸ்ரப்தம் பலம் விஷ்ணோஃ ப்ரவர்॰தாம் ॥

[ப - ரை.] (ஜநாஃ) - (ஓ ஜநங்களே !), ஏவம் - இவ்விதமாக, புராவ்ருத்தம் - முன் நடந்ததான, ஏதத் - இந்த, ஆக்யாநம் - கதையை, விஸ்ரப்தம் - நம்பிக்கையாக, ப்ரவ்யாஹரத - நன்றாகச்சொல்லுங்கள்: வஃ - உங்களுக்கு, ஭த்ரம் - மங்களம், அஸ்து - உண்டாகக்கடவது: விஷ்ணோஃ - பெருமாளுக்கு, பலம் - பலமானது,(=வலிமையானது,) ப்ரவர்॰தாம் - வ்ருத்தியடையக்கடவது.

[வி - ம்] :—ஏவம் இத்யாதி—புராவ்ருத்தம் - பெருமாள் ராஜ்யபாலநம் பண்ணுமளவிலிறே மஹர்ஷி ஸ்ரீராமாயணஞ்செய்தருளியது. அதற்கு முன்னமே ராவணவதபர்யந்தமான சரித்ரம் நடந்தமையால், புராவ்ருத்தம் என்கிறார். பத்ரம் அஸ்து வஃ - ஸ்ரீராமாயணத்தைப் படிப்பவர் கேட்பவர் இவர்களுக்கு மங்களத்தைக் கோருகிறார். பலம் விஷ்ணோஃ ப்ரவர்॰தாம் - ஸ்ரீராமாயண ப்ரதிபாத்யரான பெருமாளுக்கு நன்மையை ஆஶாஸிக்கிறார். "அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு" என்று அடியார்களுக்கும் அடிமைகொள்ளுகிறவனுக்கும் பெரியாழ்வார் மங்களத்தை ப்ரார்த்தித்தாரிறே: இங்கும் அப்படியே. 'மமாபி தத் ஭ூதிகரம் ப்ரஶஸ்யதே" என்று பெருமாளுக்கும் இந்த ராமாயணஶ்ரவணம் ஶ்ரேயஸ்கரமாயன்றோ இருப்பது. இந்த ஶ்லோகத்தால், மஹர்ஷி அடியார்களுக்கும் எம்பெருமானுக்கும் முடிவில் மங்களாஶாஸனம் பண்ணினாராயிற்று. || 116½ ||

**देवाश्च सर्वे तुष्यन्ति श्रवणात् ग्रहणात्तथा ।**
**रामायणस्य श्रवणात्तुष्यन्ति पितरस्तथा ॥ ११७॥ ॥**

தேவாஸ்ச ஸர்வே துஷ்யந்தி ஸ்ரவணாத் க்ரஹணாத் ததா
ராமாயணஸ்ய ஸ்ரவணாத் துஷ்யந்தி பிதரஸ்ததா ॥ 117½ ॥

[ப - ரை.] ஸர்வே தேவா: - ப்ரஹ்மாதி தேவர்கள் எல்லாரும், ராமாயணஸ்ய - ஸ்ரீராமாயணத்தினுடைய, ஸ்ரவணாத் - கேட்பதனாலும், க்ரஹணாத் - அறிவதனாலும், துஷ்யந்தி - ஸந்தோஷத்தையடைவார்கள்: பிதர: - பித்ருக்கள், ராமாயணஸ்ய - ஸ்ரீராமாயணத்தினுடைய, ஸ்ரவணாத் - கேட்பதினால், ததா - அப்படியே, துஷ்யந்தி - ஸந்தோஷத்தை அடைவார்கள்

[வி - ம்] :—தேவா: இத்யாதி - ராமாயணஸ்ய என்பது பூர்வார்த்தத்திலும் அந்வயிக்கிறது. ஸமஸ்ததேவர்களும் தைவநாயகனான ஸ்ரீராமபிரானுடைய திவ்யசரித்திரத்தைக் கேட்பவரிடத்திலும் ஆசார்யோச்சாரணாநூச்சாரணமாக க்ரஹிப்பவரிடத்திலும் மிகவும் ஸந்துஷ்டராவார்கள். க்ரஹணாத் என்றது படநத்துக்கு உபலக்ஷணம். பித்ருக்களும் அப்படியேயென்கை. ॥ 117½ ॥

**भक्त्या रामस्य येचेमां संहितामृषिणा कृताम् ।**
**लेखयन्तीह च नरास्तेषां वासस्त्रिविष्टपे ॥ ११८॥ ॥**

பக்த்யா ராமஸ்ய யே சேமாம் ஸம்ஹிதாம்ருஷிணா க்ருதாம் ।
லேகயந்தீஹ ச நராஸ்தேஷாம் வாஸஸ்த்ரிவிஷ்டபே ॥ 118½ ॥

**इति श्रीवाल्मीकीये श्रीरामायणे चतुर्विंशत्सहस्रिकायां संहितायां श्रीयुद्धकाण्डे श्रीरामपट्टाभिषेको नाम एकत्रिंशदुत्तरशततमः सर्गः ।**

[ப - ரை] யே ச - எவர்கள், ராமஸ்ய - பெருமாள் விஷயமாக, ருஷிணா - வால்மீகியினால், க்ருதாம் - செய்யப்பட்ட, இமாம் - இந்த, ஸம்ஹிதாம் - ஸ்லோகங்களுடைய சேர்க்கையை [ப்ரபந்தத்தை], பக்த்யா - பக்தியுடன், இஹ - இவ்வுலகத்தில், லேகயந்தி - எழுதுவிக்கின்றார்களோ, தேஷாம் - அவர்களுக்கு, வாஸ: - இருப்பு, த்ரிவிஷ்டபே - ஸ்வர்க்கத்தில், (பவதி) - (ஆகிறது).

[வி - ம்]:—கீழ்ஸ்லோகம்வரையில் ஸ்ரீராமாயணத்தின் ஸ்ரவண படனங்களைச் சொல்லி இந்த ஸ்லோகத்தில் இந்த ஸ்ரீராமாயணத்தை எழுதுகிறவர்களுக்கும் எழுதிவைக்குமவர்களுக்கும் பலத்தைச் சொல்லுகிறார். பக்த்யா ராமஸ்ய இத்யாதி—ராமஸ்ய என்பது பக்த்யா என்பதோடும், ஸம்ஹிதாம் என்பதோடும், மத்யமணி ந்யாயத்தாலே அந்வயிக்கிறது. ஸ்ரீராமபிரானிடத்தில் பக்தியாலே ஸ்ரீராமன் விஷயமான இந்த ஸ்ரீராமாயணத்தை எவர்கள் எழுதிவைக்கிறார்களோ, அவர்களுக்கு வாஸஸ்தானம் த்ரிவிஷ்டப மென்றபடி. லேகயந்தி என்றது ஸ்வயம் எழுதுவதற்கும் உபலக்ஷணம். த்ரிவிஷ்டபே என்றதால், அமரர்களிருப்பிடத்தைக் காட்டி அமரர்கள் முக்யமாக நித்யஸூரிகளாகையாலே, எழுதிவைக்குமவர்களிருப்பிடம் பரமபதமென்றதாயிற்று. ஸ்ரவண படனங்களைக் காட்டிலும் லேகநத்துக்கு விசேஷமுண்டு. எங்ஙனேயென்னில்? எழுதிவைத்தாலிறே படிப்பதற்கும் கேட்பதற்கும் ஸௌகர்யமுண்டு. ஆகவே, ஸ்ரவணபடனங்களைவிட எழுதுவதற்கு பலம் பரமபதத்தில் வஸிப்பது என்று விசேஷ பலமுண்டாகுமென்றார். ஸ்ரீராமாயணத்திலே பலேச்சயா அந்வயித்தாலும் ஸ்வயம் ப்ரயோஜநமாக அந்வயித்தாலும் கீழ்ச்சொல்லிய பலங்கள் யாவும் உண்டாகக் குறையில்லை.

ஸ்ரீராமாபிஷேகமங்களதீபிகை முற்றிற்று. ॥ 118½ ॥

---

वाल्मीकेर्वदनारविन्दगलिता माधुर्ययुक्ताक्षरा
स्वान्तर्गूढमनोज्ञभावसहिता नानार्थसन्दर्शिनी ।
सीताकान्तगुणोज्ज्वला कृतिरहो रामायणाख्या क्वनु
क्वाहं मन्दमतिर्निहीनचरितो भक्त्या विहीनो गुरौ ॥
एवंचेदपि पूर्वदेशिककृपासन्दर्शितार्थस्त्वहं
वाल्मीकेर्वदनारविन्दगलितं रामायणस्यान्तिमम् ।
सर्गं व्याकृतवान् बुधास्सहृदया एनां कृतिश्चादरात्
स्वीकुर्वन्तु यदीक्ष्यते विगुणता क्षान्तिं परां प्रार्थये ॥

तिरुमलिशै. को. क. अप्पनय्यन्, रामानुजदासः ।